ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தமாலை நெ. 4.

பதிப்பாளர் :—ப்ரபெஸர் ப. வேம். ராமாநுஜஸ்வாமி எம். ஏ.

# திருமலை ஒழுகு

(திருமலை திருப்பதி ஐதிஹ்ய மாலை)

திருப்பதி - திருவேங்கடவன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத்
தமிழ்த்துறைத் தலைவர்

கோ. பாலசுந்தர நாயகர் எம். ஏ. அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

திருமலை - திருப்பதி தேவஸ்தான அறநிலையக்கழகத்தின் சார்பாக
அதன் செயல்துறைத் தலைவர்

ஸ்ரீ. செ. அன்னராவ் பி. ஏ. அவர்களின்

உத்திரவின்படி

திருமலை - திருப்பதி தேவஸ்தான அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1953

உ



இன்புற்ற சீலத்து இராமா நுச! என்றும் எவ்விடத்தும்
என்புற்ற நோயுடல் தோறும் பிறந்திறந்து எண்ணரிய
துன்புற்று வீயினும் சொல்லுவது ஒன்றுஉண்டுஉன் தொண்டர்கட்கே
அன்புற் றிருக்கும் படிஎன்னை யாக்கிஅங் காட்படுத்தே.

---

ஸ்ரீ:

# பதிப்புரை

திருமலை ஒழுகு என்னும் இந்நூல், கோயிலொழுகு போல மிக இன்றியமையாதது. இதுவரை, யாரும் இதனை அச்சிடவில்லை. திருவேங்கடவன் கீழ்க்கலைக் கல்லூரியைச் சார்ந்து நடை பெற்று வரும் நாலாயிரப் பிரபந்த வகுப்பாசிரியர், ஸ்ரீமான். உ. வே. கச்சிக்கடாம்பி. யாமுநசார்ய சுவாமி அவர்கள், இத்திருமலை ஒழுகின் காகிதக் கையெழுத்துப் பிரதியை என்பால் தந்து இதனைச் செப்பம் செய்து அச்சிட வேண்டுமென்று கூறினர்கள். அப் பிரதியில் வடமொழி மேற்கோள் சுலோகங்கள் இல்லை. ஆனல், அஃது இரண்டு பாகங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது. அதனை ஒழுங்கு படுத்தி அச்சிடவேண்டுமென்று எங்கள் கழகத் தலைவர் (Director, S. V O. I.) அவர்களிடம் விண்ணப்பித்தேன். அவர்கள், ஏட்டுப் பிரதி வேறென்றிருப்பதாயும், அதில் வடமொழி மேற்கோள் சுலோகங்கள் இருப்பதாயும் சொல்லி அதனை வெளியிடுதல் நன்றெனக் கட்டளையிட்டார்கள்.

அவர் தம் கட்டளைப்படியே ஏட்டுப்பிரதியை ஸ்ரீமான். உ. வே. யாமுநச்சார்ய சுவாமிகளிடமிருந்து வாங்கி வந்தேன். அப்பிரதி அவர்கட்கு ஸ்ரீ பெரும்பூதூர் ஸ்ரீமான். உ. வே. கோயில் கந்தாடை. ராகவாச்சாரிய சுவாமியினிடமிருந்து கிடைத்தது. அப் பிரதியை வாங்கி ஆய்ந்து பிழை போக்கி எழுதுங்கால் அதில் பல வடமொழிச் சுலோகங்கள் கிரந்த எழுத்தில் இருக்கக் கண்டேன். அவற்றை எழுதுவதற்கும், உடனிருந்து பிரதி செய்வதற்குமாக எங்கள் தலைவர் அவர்கள், வடமொழிப் புலமையும், தமிழ்ப் புலமையும் அமைந்து, நாலாயிர திவ்வியப் பிரபந்தங்கள் முழுவதையும் நன்கு பயின்று மனப்பாடம் செய்து கடவுள் திருமுன் ஓதும் சிறப்புப் பெற்றுள்ளவரும் திருவேங்கடவன் கீழ்க்கலைக் கல்லூரி ஆசிரியரா யுள்ளவரும் ஆகிய ஸ்ரீமான். தி. அ. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களை எனக்கு உதவி செய்யுமாறு பணித்தார்கள். அவர்கள் துணை கொண்டன்றித் திருத்தமான இப் பிரதியை நான் எழுதி

யிருத்தல் இயலாது. அவர்கள் உதவி என்றும் மறக்கற் பாற்றன்று. அவர்கட்கு என் நன்றிகலந்த வணக்கம் உரியதாகுக.

இந்நூலைப் பிரதி செய்தபின் சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்திலிருந்த காகிதப் பிரதியோடு இதனை ஒப்பு நோக்கினேன். அஃது இவ்வேட்டுப் பிரதியின் படி (Copy) என்பது பின்னர்த் தெரிந்தது. அதனில் பெரிதும் வேறுபாடுகள் காணப்படாவிடினும் ஐயுற்ற சில சொற்களும், சுலோகங்களும் விளக்கமாயின. அன்றியும் இந்நூலின் 103 - ம் பக்கத்திலுள்ள செய்திகள் ஏட்டுப் பிரதியில் விடப்பட்டிருந்தமையின் அவைகளும் கிடைத்தன. இத்தகைய விளக்கந் தந்த நூலை ஒப்புநோக்குதற் களித்தஅந்நூல் நிலையத் தலைவர்க்கு என் நன்றியைச் செலுத்துகின்றேன்.

ஸ்ரீ வேங்கடாசல இதிகாசமாலா என்னும் பழைய வடமொழி நூல் ஒன்று வழக்கத்தில் இருக்கின்றது. அதில் உள்ள செய்திகள், 'திருவேங்கட முடையான் அருளிச் செயல்கள் கேட்டருளும் பிரகாரம்' என்னும் தலைப்புவரையிலுமே காணப்படுகின்றன. அதற்கு மேல் கூறப்படும் இந்நூற் செய்திகள் அதில் இல்லை. இவ்வளவோடு அது முடிந்து விடுகின்றது. அதன் ஆசிரியர் அநந்தாழ்வான் (அநந்தார்யா) என்பவர். இந்நூற் செய்திகள் அந்நூலிலுள்ள செய்திகளோடு ஒத்திருக்கின்றன.

'இது மலைகுனிய நின்றூர் அரையர் கிருகத்திலிருந்த ஸ்ரீ கோசத்தைப் பார்த்து எழுதப்பட்டது' என்றிருப்பதால், இதன் காலம் அம் மலைகுனிய நின்றூர் அரையர் கால மாதல் வேண்டும். அவர் யார் என்று அறிந்து கொள்ளப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. அரையராவார், திருவாய்மொழியைத் தேவகானத்தில் ஏற்றிட்டுப் பெருமான் திருமுன் பாடுபவர். பல ஆண்டுகளாகத் திருமலையிலும் திருப்பதியிலும் அரையர்கள் இல்லை. அதனாலும், அரையர்கள் வரலாற்றை அறிவிக்கும் வேறு சான்றுகள் இல்லாமையாலும் அவ்வரையர் காலம் தெரியவில்லை.

எனினும், இந்நூலில் சதாசிவராயன் காலத்துக்குப் பிந்திய நிகழ்ச்சிகள் சேர்க்கப்படவில்லை. அவன், காலத்திற்குப் பின், பல மண்டபங்களும், கோபுரங்களும் கட்டப்பட்டுப் பல விழாக்களும் நடத்தப் பெற்றன. கோவிந்தராசர் கோயிலின் முன்

கோபுரமும் காலிகோபுரமும் கி. பி. 17 - ம் நூற்றுண்டின் முற்பகுதியில் கட்டப்பட்டுச் சிறந்து விளங்குகின்றன. கலியாண விழாவும் பிற்காலத்தில் ஏற்பட்டதே. இவை குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள். இவை, இந்நூலில் காணப்படவில்லை. இவற்றாலும், ஜீயர்களில் திருவேங்கட ராமாநுஜ ஜீயருக்குப் (1544) பின் வந்த ஜீயர்கள் பெயர்கள் குறிப்பிடப் படாமையாலும், இந்நூல் கி. பி. 16-ம் நூற்றுண்டின் கடைப் பகுதியில் எழுதப்பட்டிருத்தல் வேண்டும் என்று கொள்ளலாம். இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

இந்நூலுள் 101 - ம் பக்கத்திலுள்ள வாக்கியம் பொருந்தவில்லை. சில சொற்கள் விடப்பட்டிருத்தல் வேண்டும் என்று தெரிகிறது. இந்நூல் வெளிவருவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து, அடியேனுக்கு அவ்வப்போது வேண்டிய அறிவுரைகளைப் புகன்று ஊக்கிவந்த எங்கள் கழகத் தலைவரும், அன்பு, ஆதரவு, சால்பு, பெருமை, பொறுமை முதலிய நற்பண்புகள் அமைந்தவருமான பெரும் பேராசிரியர் ஸ்ரீமான், P. V. இராமாநுஜசுவாமி M.A. அவர்களுக்கு என் பணிவுநிறைந்த வணக்கத்தைச் செலுத்துகிறேன்.

இந்நூலில் வரும் வடமொழிச் சுலோகங்களில் பல பாடபேதங்களும், பிழைகளும் மலிந்திருந்தன. அவற்றைப் பலநூல்களின் துணைகொண்டு ஆராய்ந்து செப்பம் செய்தும், வடசொற்களுக்குப் பொருள் கூறியும், புருப்புகளை திருத்தியும் வேண்டிய உதவியைச் செய்து, இந்நூலை நன் நூலாக்கிய எங்கள் கழக வைணவ சமய ரகசிய நூல் வெளியிட்டுத் துணைப் பதிப்பாளரும், தாக்க, வேதாந்த, சாகித்ய, சிரோமணியும், உபயவேதாந்த வித்துவானும் (மைசூர்) ஆகிய ஸ்ரீமான். தி. கு. வெம். ந. சுதர்சனச்சாரிய சுவாமி அவர்கட்கு என் நன்றிகலந்த வணக்கம் உரியதாகுக. அவர்கள் முயற்சிக்கு எல்லை இல்லை. இந்நூலை அவர்கள் தெலுங்கு எழுத்தில் பதிப்பித்தற்கு வேண்டியவற்றைச் செய்து வருகிறார்கள். அது விரைவில் வெளிவரும்.

முதலில், ஸ்ரீமான். சுவாமி அவர்களே இதனை வெளியிடுவதற்கு எண்ணிச் சில முயற்சிகள் செய்து வந்தார்கள். பின்னர், அடியேன் இதனை மேற் கொண்டேன். அதனால் அவர்கள் என்னோடு துணை செய்து இதனை முடித்துத் தந்தார்கள்.

இந்நூலை வெளியிடுவதற்கு அநுமதியளித்த திருமலை திருப்பதி தேவஸ்தான போர்டு உறுப்பினர்கட்கும், கோயில் திருப்பணித் தொண்டுகள் பலவற்றை அன்புடன் செய்துவருபவரும், கடவுள் உணர்ச்சி வளர்ச்சிக்கு நூல்கள் இன்றியமையாதன வென்று கருதிப் பல சிறந்த நூல்களை வெளியிடச் செய்து வருபவரும், உண்மை, உழைப்பு, அன்பு ஆகியவற்றில் சிறந்தவருமான ஸ்ரீமான். ஸி. அன்னுராவ், B.A. (Executive officer, T. T. D.) அவர்கட்கும் என் பெரு நன்றியையும் வணக்கத்தையும் உரிமையாக்குகின்றேன்.

இத்தகைய தொண்டுகளில் அடியேனை ஈடுபடுத்தித் திருவேங்கடவனுக்குப் பணிசெய்யும் பேற்றினை நல்கிய அன்புக் கடலாகிய ஸ்ரீமான். K. வேங்கடசாமி நாயுடு B.A., B.L. (Minister for Religeous Endowment, Govt., of Madras.) அவர்கள் அருளுக்கு அடியேன் என்றும் கடமைப் பட்டவனுவேன்.

இந்நூல் வெளிவருவதில் பெரு முயற்சி கொண்டு மிக விரையில் அச்சிட வேண்டும் என்று என்னைத் தூண்டி நன்முறையில் இதனை முற்றுவித்த ஸ்ரீ T. R. நரஸிம்மாச்சாரியார், B.A. (Manager, T. T. D. Press.) அவர்கட்கு என் நன்றியும் வணக்கமும் உரியவையாகுக.

வடமொழிப் பயிற்சி சிறிதும் இல்லாத என்னை இப்பணியில் ஈடுபடுத்தி ஆட்கொண்ட திருவேங்கட வள்ளலின் திருவடி மலர்களை, என் சென்னிக் கணியாக்கி உள்ளத்து வைத்துப் போற்றுகின்றேன்.

கோ. பாலசுந்தர நாயகர்,

பதிப்பாளர்.

ஸ்ரீ:

# முகவுரை.

திருமலையிலும் திருப்பதியிலும் உள்ள கோயில்களில் பண்டைக்காலத்தில் நடந்து வந்தனவாயும், பிற்காலத்தில் ஏதோ காரணம்பற்றி நிறுத்தப்பட்டனவாயும் இருந்த பணி முறைகளை ஆகமங்கட்கும், வேதம், உபநிடதங்கட்கும் இயையப் புதுக்கியும், புதுவதாகச் சில நடைமுறைகளை ஏற்படுத்தியும் வைணவ சமயாசாரியர்களுட் பல்லாற்றுனும் சிறந்து, அறிவு, ஒழுக்கம், முதலியவற்றுள் மேம்பட்டு, விசிட்டாத்துவித சமயத்திற்கு விளக்கம் உண்டாக்கி, "எங்கள் கதியே, ராமாநுசமுனியே, சங்கை கெடுத்தாண்ட தவ ராசா" என்று கூறுமாறு உயர்வு பெற்றிருந்த இராமாநுசரும், அவர் வழிவந்த சமயக் கொள்கைகளைப் பின்பற்றி அவற்றின்படி ஒழுகிவந்த மற்றையோரும் நிலைநாட்டிய தருமங்களையும், ஒழுங்கு முறைகளையும் விரித்துரைப்பது "திருமலை ஒழுகு" என்னும் சிறந்த நூல்.

இந் நூல் தோன்றிய பிற்காலத்து உண்டாக்கப்பட்ட சில நிகழ்ச்சிகளையும், இந்நூலுட் கூறப்பட்ட சில வற்றிற்கு ஆதாரமாக உள்ள கல்வெட்டுப் பகுதியின் கருத்துக்களையும், வேறு சில குறிப்புக்களையும் திரட்டி எழுதி அன்பர்கட்கு அறிவுறுத்துதல் நலமெனக்கருதி இதனை எழுதலானேன்.

இராமாநுசர் திருமலைக்கு மூன்று முறை எழுந்தருளினர். முதல் தடவை, திருமலைநம்பி யெனும் அவர்தம் அம்மானிடம் வான்மீகி இராமாயணத்தைப் பாடங் கேட்பதற்காகப் போந்தார். அப்போது, அவர் மலை யடிவாரத்திலே தங்கியிருந்தார். ஆழ்வார்கள், திருமலையை மிதித்து ஏறுவதால் அம்மலையின் தூய்மை கெடும் என்று அஞ்சி அடிவாரத்திலிருந்தே பெருமானை மங்களாசாசனம் செய்தருளி நலம் பெற்றனர் என்பதைக் கேள்வியுற்ற இராமாநுசரும், திருமலைமேல் கால்வைத்தேற அஞ்சி அடிவாரத்திலே இருக்கத் திருமலைநம்பி நாடோறும் மலையினின்றும் இழிந்துவந்து ஓராண்டு இராமாயண பாடத்தை அவருக்குக் கற்பித்தருளினர்.

இரண்டாம்முறை, சைவர்களும் வைணவர்களும் திருவேங் கடமுடையானைத் தம் தம் தெய்வமென வாதித்தபோது வேங்க டத்து அப்பனுக்குத் திருவாழி திருச்சங்குகளைச் சாத்தி யருளுதற் காகவும், வேறு பல திருத்தங்கள் செய்வதற்காகவும் திருமலைக்கு எழுந்தருளினர். அப்போது, திருமலை ஏறும்முன் மூன்றுநாட்கள் எதையும் உட்கொள்ளாமல் உபவாசமிருந்து தம் உடலைத் தூய்மை யாக்கிக்கொண்டு திருமலை ஏறித் தம் செயல்களை முடித்து மூன்று நாட்களுக்குள் மலையினின்றும் இழிந்தருளினர்.

இவ்வாறு, இவர் மலை ஏறுங்கால், அதனைத் தம் திருவடிகளால் மிதியாதிருப்பதற்காக முழங்கால்களை ஊன்றவைத்துச் சென்றனர் என்றும், இடையில் செங்குத்தான ஓரிடத்தே இவரால் ஏறமுடி யாமல் முழங்கால்கள் முறிந்துவிட்டன என்றும், அப்போது இவர் செயலற்று மயங்கி விழுந்தனர் என்றும், இதனை யறிந்த திருவேங் கடமுடையான் இவர்க்குமுன் தோன்றி இடையூறுகளைப் போக் கிக் கால்கள் பண்டுபோல் உரம்பெற்று ஏறுதற்குத் தகுதியுடைய வாம்படி திருவருள் செய்து மறைந்தார் என்றும், அதனாற்றான் அவ்விடம் முழங்கால் முறி(ச்சா)த்தான் என்று இன்றும் இறந்த காலத்தால் கூறப்படுகின்றது என்றும், கன்னபரம்பரைச் செய்தி யொன்று உலவி வருகிறது. இம்முறையில் தான் கோவிந்தராசரை இவர் திருப்பதியில் நிறுவி வழிபாட்டு முறைகளையும் ஏற்படுத்திக் கோயிலைப் பெரிதாக்கினர்.

மூன்றும் முறை, திருவேங்கடச் செல்வம் அழியாமல் இருத் தற் பொருட்டும், அதனைக் காத்து வளர்த்துத் திருப்பணிகள் செய் தற்குரியாரை ஏற்படுத்தற் பொருட்டும் திருமலைமேல் ஏறி அக் கோயிலின் திருப்பணித் தலைமையைத் தாமே மேற்கொண்டும், தமக்கொரு மடத்னைதச் சந்நிதிக்கு எதிரிலுள்ள அனுமான் கோயி லுக்கு அருகில் கட்டியும், கி - பி. 1052 முதல் 1053 வரை ஓராண்டு தங்கியிருந்து சீயர், ஏகாங்கிகள் நால்வர் ஆகியோரைத் தம்மிடத் தில் நிறுவியும் திருவேங்கடமுடையான் திருப்பணிகள் குறை வின்றி நடக்குமாறு தக்க ஏற்பாடுகளைச் செய்தும் திருவரங்கப் பதிக்குத் திரும்பி யருளினர்.

திருமலையிலும் திருப்பதியிலும் இராமாநுசர் செய்தருளிய சீர் திருத்தங்களுக்கும் புதிய வகையில் கோயில் திருப்பணிகளைச் செய்வதற்கும் பெருந்துணையாய் இருந்த அரசன் கட்டியம் யாதவ

ராயன் என்பான். இவன், சோழமன்னனுக்கு அடங்கிய சிற்றரசன். நாராயணவனத்தைத் தலைநகராகக் கொண்டு அப்பகுதியை ஆண்டவன். இராமாநுசரது பெருமைகளை யறிந்து அவருக்குச் சீடனாயினன். இவன் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கம் என்பது கல்வெட்டுக்களால் அறியக் கிடக்கின்றது.

இராமாநுசர் திருவேங்கடமுடையானுக்குத் திருவாழி திருச்சங்குகளைச் சாத்தி யருளியபோது திருவேங்கடநாட்டை யாண்டவன் யாதவராயன் எனப்படுகிறான். அவன், கட்டியம் யாதவராயனுக்கு முன் இருந்தவனாதல் வேண்டும் என்பது சிலர் கருத்து. சிலர் அவனே கட்டியம் யாதவராயன் என்பர்.

திருவேங்கடமுடையானைச் சைவர்கள் சுப்பிரமணியக்கடவுள் எனக் கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டில் மட்டுமே உரிமை கொள்ளத் தலைப்பட்டனர். அதற்கு முன்னும் திருவேங்கடமுடையான் திருக்கரத்தில் சங்கு சக்கரங்கள் இல்லாதிருந்தும், இவ்வுரிமை வழக்கு அப்போது ஏற்படாமலேயிருந்தது ; எம்மதத்தினரும் அப்பெருமானைத் திருமால் எனவே போற்றி வணங்கிவந்தனர். அங்ஙனமிருப்ப, இராமாநுசர் காலத்தே இவ்வழக்கு நிகழ்ந்தது ஏன்? எனில், வைகாநச அருச்சர்கள் அரசனால் தண்டிக்கப்பெற்று வெறுப்புற்று வேங்கடவனுக்குப் பூசை முதலியன செய்யாமல் தவிர்ந்திருந்ததால் சைவர்கள் அச்சமயத்தைத் தங்கட்குப் பயன்படுத்தியும், *குலோத்துங்க சோழன் ஆழ்ந்த சைவப்பற்றுடையனாதலின், மற்றைய சமயங்களைத் தாழ்வுபடுத்தியும், அச்சமயங்களை மேற்கொண்டவர்களைத் துன்புறுத்தியும், மக்கள் பலர்க்குச் சைவசமயத்தில் ஊற்றம் உண்டாகுமாறு செய்தும் வந்தமையால், காளத்திச் சைவர்கள் அரசனது ஆதரவு தங்கள்பால் மிகுதியாக உளதென்று நினைத்தும், திருவேங்கடமுடையானை முருகன் எனவும், அம்முருகன் தவஞ்செய்யும் கோலத்துடனிருத்தலால் வேல்முதலிய படைகளில்லாதிருக்கின்றனர் எனவும் வழக்குரைத்தனர் என்பர்.

*குலோத்துங்கன் ஆழ்ந்த சைவப்பற்றுடையனேயெனினும், திருவரங்கத்தில் விழாக்களுக்கும், பிரபந்தம் ஓதுதற்கும் கட்டளைகளையமைத்தமையால் வைணவருக்குப் பகைவனல்லன் என்பது கல்வெட்டுக்களால் அறியப்படும்.

இராமநுசர் இவ்வழக்கினைத் தீர்த்துத் திருவேங்கடமுடையான் திருமாலே என நிறுவுவாராயினர். முருகன் தவம் செய்த தாகக் கூறப்படும் இடம் குமாரதாரை என்னும் தீர்த்தக்கரையில் இருந்திருத்தல் கூடும். குன்றுதோறாடும் குமரனது புகழைப் பாடிய அருணகிரியாரும் ஆழ்வார்களைப் போலவே, திருவேங்கட மலையில் உறையும் பெருமான் திருமாலேயெனத் தம் திருப்புகழிற் பாடியுள்ளார்.

> " உபசாந்த சித்த குருகுல
> பவபாண்ட வர்க்கு வரதன்மை
> உருவோன்ப்ர சித்த நெடியவன் ரிடிகேசன்
>
> உலகீன்ற பச்சை யுமையணன்
> வடவேங்க டத்தி லுறைபவன்
> உயர்சார்ங்க சக்ர கரதலன் " மருகோனே.
>
> (திருவாஞ். திருப்பு. 175.)

என்றது காண்க.

கட்டியம் யாதவ நாராயணன், கட்டி தேவன் என்றும், கூறப் படுகின்றான். இவன் இராமாநுசருடைய திருவடிகளைக் கிட்டி அவர் சீடனாகியபின் யாதவ நாரயணன் எனப் பெயர்பெற்றனன் போலும். திருமலையிலும் திருப்பதியிலும் செய்த கோயில் திருப் பணிகள் அனைத்துக்கும் இவனே துணைபுரிந்தவன். தன் ஆசார்யர் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு முடித்த பெருமை இவனுக்கு மிகுதியாக உண்டு.

திருமலையில் இராமாநுசர் செய்தருளிய திருத்தங்களும் புதுவ தாக எற்படுத்திய செயல்களும் பல. அவற்றுள், திருவேங்கட முடையானைச் சங்காழி தரிக்கச் செய்ததும், அவர் கோயில் கோபு ரத்தில் உள்ள விமானத்தில் வைகானச ஆகமத்திற் கூறியபடியே வராக, நரசிம்ம, வேங்கடேச தேவதைகளை அமைத்து, அக்கோயில் திருமாலுக்கே உரியதென உலகிற் கறிவிக்கச் சம்புரோட்சணம் செய்வித்ததும், பெருமான் திருமார்பில் திருமகளை இரு கைகளை யுடைய திருவுருவோடு ஒரு நன்னாளில் அமைத்ததும், திருமஞ்சன காலத்தில் திருமகள் மார்பினின்றும் இழிந்திருக்கும்போது நாய்ச்சியார் திருமொழியை ஓதும்படி செய்ததும், திருமஞ்சனத் துக்குப் பின் பெருமான் திருநெற்றியில் இரு கோடுகளான திரு

மண்காப்பைக் கருப்பூரப் பொடிகளால் அமைத்து மூன்று நாட்கள் காட்சியளிக்கவும், மற்றைய நான்கு நாட்களிலும் முத்துப் பொடிகளால் அமைத்துக் காட்சி யளிக்கவும், திருக்கண்மலருக்குக் குளிர்ச்சிக்காக அஞ்சனக்காப்பு இடவும் ஏற்பாடு செய்ததும், திருமலையிலேயே புரட்டாசி விழாவைச் செய்யத் தகுதிவாய்ந்த முறையில் திருவீதி யமைத்ததும், ஞானப்பிரானுக்கு விழா முதலியன இல்லாமற் செய்ததும், மலைகுனிய நின்ற பெருமானை உற்சவமூர்த்தி யாக்கி அவர்க்குமுன் உற்சவமூர்த்தியாய் இருந்த வேங்கடத்துறைவாரை (போகசீநிவாசன்) நிலைத்துள்ள மூர்த்தியாக்கியதும், தண்ணீரமுது வழிதிருத்தல், பூந்தோட்டத்தில் பெருமான் பூப்பறித்த விழா ஆகியவற்றை ஏற்படுத்தியதும், வேங்கடத்தரியைத் திருவேங்கடமுடையான் கோயிலிலேயே பிரதிட்டை செய்து வைத்ததும், திருவேங்கடமுடையானது இடக்கரத்திலும் வலக்கரத்தில் (வைகுண்டஹஸ்தம்) உள்ளதுபோலவே (அரவப்பணி) நாகாபரணத்தை அணிவித்ததும், திருமலையில் இருப்போர் மேற்கொள்ள வேண்டிய விதிகளை ஏற்படுத்தியதும் சிறந்தவை.

திருவேங்கடமுடையானது செல்வம் நாளுக்கு நாள் வளர்ச்சியடைவதற்காக அவர் ஒரு யந்திரத்தை மந்திர பூர்வமாக அமைத்து வைத்தமையால் அத் திருக்கோயிலின் செல்வம் என்றும் குறைபடாது வளர்ந்து கொண்டே வருவதாகின்றது.

திருப்பதியில், கோவிந்தராசப் பெருமாளைப் பார்த்தசாரதி சுவாமி கோயிலில் திருப்பிரதிட்டை செய்ததும், அவர் வலப்பக்கத்தில், செங்கழுநீர்ப் பூவைத் தரித்த கையுடன் ஆண்டாளைப் பிரதிட்டை செய்ததும், இருவர்க்கும் விழா முதலியவை செய்வதற்குரிய ஏற்பாடுகளையும், மண்டபம், கோபுரம் முதலிய கட்டுவித்தலையும் கட்டியம் யாதவராயன் துணை கொண்டு செய்வித்தும், திருவேங்கடமுடையானும் கோவிந்தராசனும் வேறுபாடின்றி ஒருவரெனவே கருதுமாறு பல கட்டளைகளை அமைத்ததும் சிறந்தவை.

கோவிந்தராஜன் தில்லையில் திருச்சித்திர கூடத்தில் கிடந்த திருக்கோலத்தோடு அன்பர்களுக்குக் காட்சியளித்துக் காத்து வந்தவர். சமய ஊற்றத்தின் காரணமாக முதற் குலோத்துங்கன் அப்பெருமானைக் கடலுள் எறியச் செய்து "அவர்க்கு இடம் கடலே யாதலின் அவர் அங்கிருத்தலே நலம்" எனக் கூறி, தில்லையிலிருந்த சில வைணவர்களைத் துன்புறுத்தி வந்தான். இதனால், இவ்

வரசனை வைணவர்கள் பெயர் கூறத்தகாதவன் என்று வெறுத்து அவன் இறுதிக் காலத்தில், தான் செய்த அடாச் செயல்களின் பயனாய்க் கழுத்தில் இராச பிளவை என்னும் கட்டியால் துன்புற்றுப் புழுக்கள் நிறையப் பெற்று வருந்தி இறந்தானாதலின், அவனைக் கிருமிகண்டன் என அழைக்கத் தொடங்கினர்.

இரண்டாம் முறையாக இராமாநுசர் திருமலைக் கெழுந்தருளித் திருப்பதியில் தங்கி யிருந்த காலத்தில் சில வைணவர்கள் கோவிந்தராசரின் உற்சவ விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு அங்கு வந்து நடந்த செய்திகளை அவரிடம் புகன்றனர். அதனை யுணர்ந்த இராமாநுசர் மிகவும் வருந்திச் செய்வது யாதென ஆராய்ந்தார். பின்னர் ஒரு முடிவுக்கு வந்து, திருப்பதியே அரசன் இடையூற்றுக்கு இலக்காகாத இடம் எனக் கருதியும்,

"தென்தில்லைச் சித்திர கூடத்தென் செல்வனை
மின்னி மழைதவழும் வேங்கடத்தென் வித்தகனை"

(பெரிய திருமடல்)

என்று திருமங்கை யாழ்வார் திருவேங்கட முடையானுக்கும் கோவிந்தராஜனுக்கும் ஒற்றுமை தோன்ற அருளிச் செய்திருக்கும் கருத்தினை உய்த்துணர்ந்து, அதனை நிறைவேற்றுதல் தக்கது என எண்ணியும் அவ்வுருவத்தைத் திருப்பதியில், ஏற்கெனவே நிலைபெற்றிருந்த பார்த்தசாரதி சுவாமியின் கோயிலில் அவருக்கு வலப் புறத்தில், தன் சீடனாகிய யாதவராயனைக் கொண்டு மண்டபமும் கர்ப்பக் கிருகமும் கட்டச்செய்து அங்கே திருப்பிரதிட்டை செய்தருளினார். பார்த்தசாரதியின் திருவுருவம் சிதைவுபட்டதனால் அதற்குப் பூசை நைவேத்தியம் முதலியன இல்லாமற் போகவே, கோவிந்தராசனுக்கு எல்லாவிதமான உபசாரங்களும் விழாக்களும் நடைபெறுவன வாயின. இவற்றிற்கு இராமாநுசரே காரணமாவார்.

கட்டியம் யாதவராயன் செய்துள்ள கோயில் திருப்பணிகள் பல. அவற்றுள் கோவிந்தராசப் பெருமாள் கோயிலின் இரண்டாவது கோபுரமும் ஒன்று. அதற்கு யாதவ நாராயணன் திருக் கோபுரம் என்றும், பெரிய திருக் கோபுரம் என்றும் கல் வெட்டுக்களில் பெயர்கள் காணப்படுகின்றன.

" யாதவ நாராயணன் திருக்கோபுரத்துத் திருவாழியாழ் வான் " (T. T. Ins. Vol No. 4. No. 144.)

" பெரிய திருக்கோபுரத்துத் திருவாழியாழ்வான் " (No. 22, 154. G. T.) என வருவன காண்க. இத் திருக்கோபுரமே அப் பொழுது பெரிதாக விருந்ததால் பெரிய திருக்கோபுரம் எனப் பட்டது. பின்னர்க் கி. பி. 1628 - ல் மட்லகுமார அநந்தராஜா என் பவன் வெளியே உள்ள திருக்கோபுரத்தைக் கட்டினன். (T. T. Ins. 269 - 370) அதன் பிறகு யாதவ நாராயணன் திருக் கோபுரம் சிறியதாயிற்று. இக்கோபுரத்தில் உள்ள திருவாழி யாழ்வானுக்கு மேல் மண்டபமும் கீழ் மண்டபமும் கந்தாடை ராமாநுஜ ஐயங் காரால் கட்டப்பட்டுத் திருவாழி யாழ்வான் திரு நட்சத்திரத்தில் (கார்த்திகை) திருவமுது செய்வதற்குப் பல கட்டளைகள் ஏற்பாடு செய்யப்பட்டன.(T. T. Ins. Vol. 4. No. 114. 27 - 11 - 1538.)

இனி, கோவிந்தராசரைத் திருப்பதியில் இராமாநுசர் திருப் பிரதிட்டை செய்த காலத்தைக் குறித்துக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. திருப்பதி வரலாற் றுசிரியர்களுள் திரு. டாக்டர். K. S. கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் கி. பி. 1135 - ல் இது நிகழ்ந்த தெனவும், திரு. T. K. T. வீரராகவாச்சாரியார் அவர் கள், கி. பி. 1130 - ல் நிகழ்ந்த தெனவும் கூறுகின்றனர்.

ராமாநுஜார்ய திவ்ய சரிதையில்,

" அம்பொற் குடைச்சகன் ஆயிரத் தொன்ப
தாம்வருடத் துத்தென்பால் சென்னி குலோத்துங்கன்
சித்திர கூடத்துச் செங்கண்மால் தன்னை
அலையெறிந்த நாள்தான் அறி "

என்றொரு வெண்பாக் காணப்படுகின்றது. தலை முதலியவை சிதைந் துள வேனும், குலோத்துங்கன் கோவிந்தராசரைக் கடலில் எறிந் தது சகாப்தம் 1009-என்பது (கி. பி. 1082) இதனால் அறியப் படும். அதற்குப் பின்னரே இப்பிரதிட்டை இரண்டோராண்டு களுக்குள் நிகழ்ந்திருத்தல் வேண்டும். " இராமாநுசர் தம் நாற்ப தாவது வயதில் திருமலை - திருப்பதி ஆகிய ஊரிடங்களிலும் தாம் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து முடித்துவிட்டுத் திருவ ரங்கம் சென்றருளினர் " என்று ' திருமலை ஒழுகு ' கூறுகின்றது. அவர் அவதாரம் கி. பி. 1017. ஆனல், இவ்வேற்பாடுகள் 1057 - க்

குள் முடிந்திருத்தல் கூடும். எனினும் கோவிந்தராசரைப் பிரதிட்டை செய்த ஆண்டு ஸௌமிய வென்றும் பங்குனி மாதத்துப் பௌர்ணமி உத்திர நட்சத்திரம் திங்கட்கிழமை கூடிய நாள் என்றும் சொல்லப் படுகின்றன. இந்த இயைபுடைய நாள் கி. பி. 1130-ல் வருவதால், கோவிந்தராசரை அவ்வாண்டில் பிரதிட்டை செய்திருக்க வேண்டுமென்றும், அதுவரை அந்தத் திருவுரு திருப்பதியில் பிரதிட்டை யின்றியே இருந்த தென்றும், முதற் குலோத்துங்கன் கி. பி. 1120-ல் இறந்த பின், திருப்பதியில் கோயில் கட்டி அதில் கோவிந்தப் பெருமானது திருவுருவை நிறுவுதற்கு இயன்றது என்றும் கூறுவர்.

இத்தகைய கூற்றுக்களுக்கு வேறு சிறந்த சான்றுகள் கிடைக்காமையால், பலர் கருத்துக்களை மட்டும் எடுத்துக் காட்டுவதோடு அமைய வேண்டிய நிலை ஏற்படுகின்றதே யன்றித் துணிந்து கூறுதற் கியலவில்லை. இராமாநுசர் மேற் கொண்ட இச் செயலுக்குத் துணையா யிருந்தவனுகக் கூறப்படும் கட்டியம் யாதவராயன் காலம் கி. பி. 12-ம் நூற்றாண்டின் தொடக்கம் என்பது, நெல்லூர்க் கல்வெட்டு ஒன்றால் அறியப் படுன்றது. "யாதவராயன் கட்டி தேவராசன் பிரதானி ராஜராஜ தேவர்க்கு யாண்டு 11-வது" என்பது அது. இங்குக் கூறப்பட்ட ராஜராஜன் II கி. பி. 1133-முதல் 1163 வரையில் ஆண்டவன். அவன் காலத்திலும் அவனுக்கு முன்னும் இவ் யாதவராயன் திருவேங்கட நாட்டைச் சோழர்க்கு அடங்கிய சிற்றரசனாய் ஆண்டிருந்தவன் என்பது தெளிவு. எனவே, கோவிந்தராசர் பிரதிட்டை கி. பி. 12-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நிகழ்ந்திருத்தல் வேண்டு மென்னும் முடிவை யாவரும் உடன்படுவர் என்பதற்கு ஐயமில்லை.

## கோயில்களும் திருப்பணிகளும்.

திருவேங்கடமுடையான் திருக்கோயில், தொண்டைமான் சக்ரவர்த்தியால் முதல் முதலாகக் கட்டப்பட்டது என்று புராணம் கூறுகின்றது. ஆனால், அக்கோயில் அப்போது சிறிய அளவில் அமைந்திருத்தல் வேண்டும். யாத்திரை செய்வோர் அங்கு மிகுதியாய்ச் செல்வதற்கு வசதியும் பிறவும் இல்லை. அக்குறையை நீக்குவதற்காகவே திருச்சுகனூரில் திருவேங்கடமுடையானுக்கு திருவிளங்கோயில் அமைக்கப்பட்டது போலும். இத் திருக்கோயில், திருமலையிலிருந்த பாலாலயம் என்று கூறுவது பொருந்தாது.

" திருவேங்கடக் கோட்டத்துக் குடவூர் நாட்டுத் திருச்சொகி னூர்த் திருவேங்கடத்து எம்பெருமானடிகளுக்கு எழுந்ருளுவித்த திருவிளங்கோயிற் பெருமானடிகளுக்குச் சோழநாட்டுச் சோழ னூர் உலகப் பெருமானுர் வைத்த திருவிளக்கு முதல் முப்பதின் கழஞ்சு............"(T. .T Ins. I Vol. No. 1) என்பது திருவிளங் கோயில் திருச்சுகனூரில் இருந்த தென்பதற்குச் சான்று பகர்கின் றது. இக்கொடை கி. பி. 830 - ல் அளிக்கப்பட்டது. பல்லவர் மரபில்வந்த சாமவை என்னும் அரசியாரும் திருச்சுகனூரில் அமைந் திருந்த திருவிளங்கோயிலில் உற்சவமூர்த்தியாக வெள்ளியில் ஒரு திருமேனியைச் செய்வித்து அதற்கு மணவாளப் பெருமாள் என்னும் பெயரிட்டுப் பல மணிகளழுத்திய திருமுடி, திருக்கழுத்து மாலை, திருக்கரங்களுக் குரிய மணிப்பணிகள் யாவையும் சாத்தி, வேறு பிறதானங்களும் செய்துள்ளார். (T. T. Ins. Vol- I No. 8) இக் கொடை கி. பி. பத்தாம் நூற்றுண்டின் பிற்பகுதி யின் தொடக்கத்தே அளிக்கப்பட்டது.

இவற்றுல், திருவேங்கடமுடையானுக்குக் கொடித் திருநாள் திருச்சுகனூரிலேயே நடத்தப்பட்ட தென்பது விளங்குகின்றது. இம்முறையை மாற்றித் திருமலையிலேயே அந்த உத்ஸவத்தை நடத் துவதற்காக இராமாநுசர் ஏற்பாடுகளைச் செய்தார் என்பதும் தெளி வாகும். (திருமலை ஒழுகு பக். 8) இராமாநுசரும், திருமலைக் கோவி லைப் பெரிதாக்கிக் கோபுரமும் கட்டுவித்தார்.

திருப்புல்லாணி தாசர் என்பாரொரு அன்பர், திருவேங்கட நாட்டை அப்போது ஆண்டு கொண்டிருந்த வீரநரசிங்க யாதவ ராயனது கட்டளை பெற்றுத் திருமலை நடுக்கோயிலை கி. பி. 1224-ல் புதுக்கினுன். நடுக்கோயில் கோயிலாழ்வார் எனப்படும். அவ்வாறு புதுக்கியபோது சில கல்வெட்டுக்கள் சிதைந்துபோயின. சிலவற் றைப் படி எடுத்து நடுக்கோயிலில் மீண்டும் வெட்டுவித்தனர். அங்ங னம் சிதைந்த கல் வெட்டுக்களுள் இராமாநுசர் வரலாறுகளும், பிற இன்றியமையாத பழைய வரலாறுகளும் இருந்திருத்தல் கூடும். அவற்றுள் சில சிதைந்து காணப்படுகின்றன. அவற்றுல் உண்மை உணரக் கூடவில்லை. அவை சிதையாது கிடைத்திருப்பின் பல உண மைகள் தெரிந்திருக்கும்.

அக்கோயிலை நன்கு போற்றிவந்த வீரநரசிங்க யாதவராயன் கி. பி. 1245 - ல் துலாபாரம் புக்குத் தானம்செய்த பொன்னைக்

கொண்டு அக்கோயிலின் விமானத்திற்கு முதல் முதலாகப் பொன் பூச்சுப் பூசப்பட்டது. அதே காலத்தில் மாறவர்மன் சுந்தர பாண்டியன் அதற்குப் பொற்கலசம் அமைத்து வைத்தான். சாளுவமங்கி தேவன் 1359 - ல் விமானத்துக்குப் பொன் கலசம் அமைத்தான். (T. T. 224) கிருஷ்ண தேவராயன் முப்பதாயிரம் வராகன் கொடுத்து விமானத்திற்குப் பொன் பூசினுன்.

இராமாநுசர் காலத்தில் இருந்த விமானம் சிதிலமாய் இருந் திருத்தல் வேண்டும். அவ்விமானம் எந்தத் தேவதையின் வடிவமும் அமைக்கப்படாமல் இருந்தமையால் அவர் அதன் நாற்புறங்களிலும் திருமால் கோயிலுக்குரிய விமான தேவதைகளை அவர் அமைத்து வைப்பாராயினர்.

திருமலைக் கோயிலில் இருந்த திருமகாமணி மண்டபத்தில் கல்காரம், குறடு முதலாக மேற் கூரை விமானம் ஈருக உள்ளவற்றை, கி. பி. 1417 - ல் சந்திரகிரியில் வாழ்ந்திருந்த மல்லண்ணு வென்னும் மாதவதாசர் என்பவர் தம் திருப்பணியாகச் செய்து முடித்தார். (Ins Vol. I. 196) சாளுவ நரசிங்கராயன் காலத்தில் கி. பி. 1468 - ல் திருமலையில் ஒரு கோபுரமும் மண்டபமும், திருக்கோனேரி தீர்த்தத்தில் நிராழி மண்டபமும் (வசந்த மண்டபம்) அவன் கட்டளைப்படி திருமலைச் சபையாரால் கட்டப்பட்டன. இவன் பல சத்திரங்களையும் கட்டுவித்தான். அவற்றுள் அத்திகிரி ஐயன் சப்திரம் என்பது ஒன்று. இவற்றைத் தவிர, அழகப்பிரானுர் திருத் பூமண்டபம், சேதிராயன் மண்டபம் முதலாகப் பல மண்டபங் களும் இருந்தன.

ஆரவீட்டு மரபைச்சேர்ந்த திருமலய்யதேவ மகாராஜாவென்னும் திருமலை ராயன், திருமலைச் சம்பங்கிச் சுற்றுக்குள் (உள் பிராகாரம்) துவஜஸ்தம்ப (கொடக்கம்ப)த்திற்குத் தெற்காகக் கி. பி. 1561 - ல் ஒரு ஊஞ்சல் மண்டபத்தைக் கட்டி, அதில் உற்சவ மூர்த்தியை வசந்தத் திருநாள், ஊஞ்சல் திருநாள், திருக்கொடித் திருநாள், ஆகிய காலங்களில் எழுந்தருளப் பண்ணி அமுது செய் விப்பதற்குப் பல தானங்களையும் ஏற்படுத்தினுன். (T. T. 633) இப்போதும் அது திருமலைராயன் மண்டபம் எனப்படுகின்றது.

திருமலைமேல் உள்ள கோனேரி தீர்த்தத்திற்கு மேற்காக அச் சுத தேவ ராயன் தன் பெயரால் அச்சுத கோனேரி என்னும் தீர்த்

தத்தை உண்டாக்கி அதன் கரையின் மேல் வசந்த மண்டபம் ஒன்றையும் கட்டுவித்து, மலை குனிய நின்ற பெருமாளை உற்சவ காலங்களில் எழுந்தருளப் பண்ணித் திருவமுது கொண்டருளுமாறு ஏற்பாடுகள் செய்து வைத்தான்.

இங்ஙனம், விஜயநகரத்தரசர்கள் திருவேங்கடமுடையானுக்குப் பல திருப்பணிகள் செய்திருக்கிறார்கள். அவற்றை விவரித்தால் அஃதொரு தனி நூலாகும். திருமலை திருப்பதி தேவஸ்தானக் கல்வெட்டுக்களாலும், அவற்றின் தொகுப்புரையாலும் (Epigraphical Report) அவைகளை அறிந்து கொள்க.

திருமலையிலுள்ள பெருமானுக்குத் தொண்டைமான் சக்ரவர்த்தி பல திவ்யாபரணங்களை அணிவித்தான். பின்னர்க் கி. பி. 1001 - ல் இரண்டாம் பராந்தகச் சோழன் மனைவியாகிய பராந்தக தேவி அம்மன் திருவேங்கடமுடையானுக்குப் பொன்னாற் செய்யப்பட்டுப் பல கற்கள் இழைத்த பட்டம் ஒன்றை அணிவித்தார். இராமாநுசர், யாதவராயன் துணை கொண்டு பல அணிகலன்களைச் செய்து அணிவித்தார். சாமவை என்னும் பல்லவர் பேர்க்கடையார் மனைவி, வயிரக் கலன்கள் பல அமைத்துச் சூட்டினார். அவர்களுக்குப் பின் கிருஷ்ண தேவராயன் ஏழு முறைகள் வேங்கட வள்ளலை வணங்கினான். ஒவ்வொரு முறையும் பொன் அணிகளும், வயிரமுடியும், தோரண வாயிலும், பொற் கிண்ணங்களுமாகப் பெருமாளுக் களித்துப் பல ஊர்களையும் நன் கொடையாக அளித்துப் பேறு பெற்று, திருவேங்கடமுடையானது செல்வம் ஓங்கி யிருக்குமாறு செய்தான். அவன் மனைவியர் செய்தளித்த திருவாபரணங்களுக்கும் கணக்கில்லை. ஏனைய அரசர்களும் பல அணிகளை வழங்கி யிருக்கின்றனர். கி. பி. 17 - ம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்த மட்லகுமார அநந்தராயன் என்னும் அரசன் பொற் குதிரை, பொன் யானை, திருத்தேர், பத்ம பீடம், ரத்தின முடி, நைவேத்யத்துக்குரிய பொன் வெள்ளிப் பாத்திரங்கள் ஆகிய பலவற்றை அளித்தான். திருமலை அடிவாரத்துள்ள இரண்டாவது கோபுர (புதிய கோபுர) மும், காலி கோபுரமும் இவனால் கட்டப்பட்டவையே. காலி கோபுரம் இல்லாதிருந்த போது அவ்விடத்துக்குப் "பெரிய ஏற்றத் தலை" என்று பெயர் வழங்கி வந்ததாகவும், அங்குப் புரட்டாசித் திருநாள் சேவிக்கவரும் யாத்திரிகர்களுக்

குத் தண்ணீர்ப் பந்தல்கள் கி. பி. 1488 - ல் சாளுவ நரசிம்மனால் அமைக்கப்பட்டனவாகவும் தெரிகின்றன. (G. T. 142).

கந்தாடை ராமாநுஜ ஐயங்கார் கி. பி. 15 - ம் நூற்றாண்டின் முற் பகுதியில், திருமலைக்கு ஏறும் படிகளைச் சீர்திருத்தினார். செல்வன் என்பா னொரு இடையன் திருமலையின் படிகளை முதல் முதலில் அமைத்தவன் என்பது திருமலை ஒழுகு (பக். 96). மட்ல குமார அநந்தராயனும் அப்படிகளை ஒழுங்கு செய்து, அடியார்கள் ஏறுவதற்கு வசதி செய்வித்தான். இப்படிகள் ஏற்படுவதற்கு முன், யாத்திரிகர்கள், ஆழ்வார் தீர்த்தக் கரை வழியாகவே பெரிய ஏற்றத்தலை (காலி கோபுரம்) வரையில் சென்றனர் என்ப. அதனால் தான், இன்றும் ஆழ்வார் தீர்த்தத்தில் நீராடிய பின், மலை ஏறும் வழக்கம் உள்ளது போலும். தொண்டைமான் சக்கரவர்த்தி, அத் தீர்த்தக் கரையிலுள்ள நரசிங்கர் சந்நிதி வழியாக ஒரு பிலத்துள் நுழைந்து வேங்கடவாணனை வணங்கி வந்தான் என்றும், அவ் வழி பெருமானாலேயே காட்டப்பட்டது என்றும் திருமலை ஒழுகு கூறும்.

யாதவராயர் மரபினனாகிய ஔளநாதன் என்பவன் தஞ்சாவூரில் வாழ்ந்து, வடவேங்கடத்துறையும் பெருமான் தன்னுடைய திருவடியைக் காட்டியபடி அமைத்திருக்கும் வலத் திருக்கைக்கு (வைகுண்ட ஹஸ்தம்) ப்பொன் வேய்ந்து அழகுபடுத்தினான் என்பது கீழ்க் காணும் வெண்பாவினால் அறியப்படுகின்றது. (T. T. 117.) அது,

> " ஓத வளர்வண்மை ஔளநா தன்தஞ்சை
> யாதவர்கோன் வாழ இனிதாழி—போத
> மருக்குலவு சோலைவட வேங்கட வாணர்க்குத்
> திருக்கைமலர் தந்தான் சிறந்து "

என்பது. இக் கருத்தமைந்த வடமொழிச் சுலோகமும் கல்வெட்டில் காணப்படுகின்றது. இவன் காலத்தை உறுதிப் படுத்துவதற்கு ஏற்ற ஆதாரம் இல்லை. சிலர் கி. பி. 1370 எனக் கருதுகின்றனர்.

மகமதுபின் துக்ளக் (Muhammad-Bin-Tughlak) என்பவன் கி. பி. 1328-ல் மதுரையையும் அதன் அருகிலுள்ள ஊர்களையும் கொள்ளையடித்துக் கோயில்களைச் சூறையாடிய பொழுது, திரு

வரங்கத்தில் இருந்த அழகிய மணவாளப் பெருமாளைக் கொள்ளைக் காரரிடமிருந்து தப்புவிப்பதற்காகச் சில நம்பிமார்கள் அவ் விக்ர கத்தை எடுத்துக் கொண்டு வந்து, திருமலையில் பாதுகாவலாக வைத் தனர். திருவரங்கத்தில் இருந்து கால் நடையாக அப்பெருமானைக் கொண்டு வருவதற்கு ஏறக்குறைய இரண்டாண்டுகள் பிடித்திருக் கும். எனவே கி. பி. 1330-ல் அப்பெருமானைத் திருமலைக் கோயி லின் முன்இடத்துள்ள மண்டபத்தில் எழுந்தருளப் பண்ணினார் கள். அம்மண்டபம் இன்றும் அரங்க மண்டபம் எனவே வழங்கப் படுகின்றது. இங்கே அவர் சில காலம் விருந்தாளிபோலத் தங்கி யிருந்தமையால் அவருக்கு முதலில் திருவாராதனம் நடந்தது என் றும், அவருக்குரிய 'கங்குலும் பகலும்' என்னும் பதிகம் திருவேங் கடமுடையான் திருமுன் ஓதப்படுகிறது என்றும் சொல்லு கிறார்கள்.

சில ஆண்டுகள் கழிந்த பின், இரண்டாம் கம்பண்ணவின் கீழிருந்த கோபண்ண வென்னும் செஞ்சி நாட்டுச் சிற்றரசன், திரு மலைக்கு வந்தபோது இச் செய்திகளை யறிந்து, அழகிய மண வாளரை, திருமலைச் சபையார், அரசனாகிய திருவேங்கட யாதவ ராயன் ஆகியவர்களின் உடன்பாடு பெற்றுக் கி. பி. 1363-ல் செஞ் சிக்குக் கொண்டு போனான். அப்போதும் மதுரைப் பக்கத்தில் மகமதியர் கலகம் தணியாமையால், அப்பெருமானை எட்டு ஆண்டு கள் செஞ்சியிலே வைத்திருந்து, கலகம் தணிந்தபின் கி. பி. 1371-ல் மீண்டும் திருவரங்கத்தில் நிறுவினான். (T. T. Epigraphical report, Poge 131.)

கட்டியம் யாதவராயன், அனந்தாழ்வான் கூறியபடி திருமாலை தொடுப்பதற்காக ஒரு மண்டபம் கட்டினான். அதற்கு 'யமுனைத் துறை' என்று பெயர். இப்போதும் அவ்விடத்திலே தான் பூமாலை களைக் கட்டிப் பெருமாளுக்குச் சாத்துகின்றனர்.

திருமலைக் கோயிலில் நிறுவப் பெற்றுள்ள இராமாநுசரது திருவுருவம், அவர்தம் நாற்பதாம் ஆண்டில் செய்யப்பட்டது என் றும், அவர் அதனை நோக்கியருளித் தழுவிக் கொண்டு, தம் சீட ராகிய அநந்தாழ்வான் பால் தந்தனர் என்றும், பின்னர் அநந்தாழ் வான், அதனைக் கோயிலில் யாதவ ராயன் துணைகொண்டு அமைத் தனர் என்றும் திருமலை ஒழுகு கூறுகின்றது (பக். 84.) இவ்வுரு

வம் ஞான முத்திரையை யுடைய திருக் கையோடு காட்சி யளிக்கின்றது. ஸ்ரீ பெரும்பூதூரில் உள்ள உருவம் கூப்பிய கைகளுடன் விளங்கி வருகிறது. இராமாநுசர், திருமலை திருப்பதி ஆகிய இடங்களில் பலவகையான தருமங்களை நிலைநாட்டியும், புதுக்கியும், திருவேங்கடமுடையானது திருச் செல்வத்திற்கு வளர்ச்சி யுண்டாகத் தக்க பல நற் செயல்களைச் செய்தும், பிறருக்குத் தெரியாதிருந்த பல உண்மைகளை வெளிப்படுத்தியும், தாம் அளித்தருளிய திருவாழி திருச் சங்குகளைத் திருவேங்கட முடையான் ஏற்றுக்கொண்டு அவரை ஆசார்யர் போலக் கருதத்தக்க சிறப்புப் பெற்றும் இருந்ததால், இவர் ஞான முத்திரையோடு கூடிய திருவுருவாக இருக்கும்படி அமைத்தனர் போலும் என்பர் பெரியோர். இங்குள்ள அத்திருவுருவம் ஸ்ரீபெரும்பூதூரில் உள்ள திருவுருவத்தை விடப் பல ஆண்டுகள் முற்பட்டதென்பதும் தெளிவு. திருப்பதியில் கோவிந்தராசர் சந்நிதியிலும், பெரிய ரகுநாதன் சந்நிதியிலும் அமைக்கப் பட்டுள்ள திருவுருவங்களும் ஞானமுத்திரை யுடையவைகளாக அமைக்கப் பட்டிருக்கின்றன.

திருமலையில், இராமாநுசர் கோவிலுக்குத் திருவிளக்கும் திருமாலையும் வைணவர்கள் தருமமாகக் கொடுத்து வரவேண்டுமென்று வீரநரசிம்ம யாதவ ராயன் காலத்தில் கி. பி. 1220-ல் ஏற்பாடு செய்திருந்ததாகக் கீழ்வரும் கல் வெட்டு அறிவிக்கின்றது.

"திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ வீரநரஸிம்ம யாதவ ராயர்க்கு யாண்டு 15 - வது விக்ரம ஸம்வத்ஸரத்து ஆவணி மாஸ முதல் எம்பெருமானார் கோயில் திருவிளக்கும் திருமாலையும் வைஷ்ணவர்கள் தர்மம்" (T. T. Ins. Vol. I No. 89)

இதைத் தவிர,

"ஆன ஸௌம்ய—
தொருநாள்—
இராமாநுஜ—
ன் எம்பெருமான்—"

என்றொரு சிதைந்த கல்வெட்டும், வேறுசில சிதைந்தனவும் இராமாநுஜரைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. இவை கி. பி. 1220-க்கு முற்பட்டவையாகவும் இருக்கலாம். எனவே இராமாநுசர் கோயில் கி. பி. 1220 - க்கு முன் இருந்ததென்பது பெறப்படும். அக்

காலத்துக்கு எத்துணை ஆண்டுகள் முற்பட்ட தென்பதைத் திட்ட மாய்க் கூறுவதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கவில்லை. கோயில் கட்டிப் பல ஆண்டுகள் கழித்தே மேற் கூறிய தருமம் ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

## திருப்பதிக் கோயில்கள்.

இராமாநுசர், கோவிந்தராசரைத் திருப்பதியில் திருப்பிர திட்டை செய்தபின், கட்டியம் யாதவராயன் அவர் சந்நிதியின் முன் ஒரு மண்டபம் கட்டினன். அதன் பெயர், திருச்சித்திரகூட மண்டபம் என்றும், தில்லைக்கு வாய்த்தான் மண்டபம் என்றும் கூறப்படுகின்றது. அவன், வேறு பல மண்டபங்களையும், திருப் பதியில் இராமாநுசர் கோயிலையும், திருமாமணி மண்டபத்தையும் (கல்யாண மண்டபம்) கோபுரங்களையும் கட்டுவித்தான். இவன், இராமாநுசர் காலத்திற்குப் பின்னும் வாழ்ந்திருந்தவன்.

வீரநரசிங்க யாதவராய அரசனல் வீர நரசிங்கப்பெருமாள் வடிவம் கி. பி. 1240-ல் திருப்பதியில் நிறுவப்பட்டது. இஃது, இப்போதுள்ள நரசிங்க தீர்த்தத்திற்கு அருகில் உள்ளது. இப் பகுதி முற் காலத்தில் நரசிங்கராயபுரம் என வழங்கப்பட்டது. இப்பெருமான் பெயர் 'மேலைச்சிங்கர்' எனக் கல்வெட்டில் காணப்படுவதால், திருப்பதியின் மேற்குப் பகுதியில் இவ்வுருவம் நிறுவப்பட்டதெனக் கருதுவதற்கு இடம் உண்டு.

சாளுவ நரசிம்மன் கி. பி. 1482-ல் திருமலை யடிவாரத்தில் உள்ள முதற் கோபுரத்தைக் கட்டினன். இதற்கு இராயர் கோபு ரம் என்றும் பெயர். (இக்கோபுரத்தின் மேற்பகுதி இடியாலும் மழையாலும் அண்மையில் விழுந்துவிட்டது. இப்போது திருமலை திருப்பதி தேவஸ்தானக் கமிட்டியார் இதனைப் புதுக்கிவருகிறார் கள்). இவன் திருமலையிலும் திருப்பதியிலும் வேறு சில கோபுரங் களையும் மண்டபங்களையும் கட்டுவித்தான். (Vol II. 28) அன்றியும், திருமலைக்குக் காப்பாக இருப்பதற்கு அழகிய சிங்கர் திருவுவை அடிவாரத்தில் கந்தாடை இராமாநுஜ ஐயங்கார் கூறியபடி, கி. பி. 1482-ல் (273- G. T.) நிறுவினன். இப்பெருமான் 'அடிப் புளி அழகிய சிங்கர்' எனவும், 'ஸ்ரீநிவாசபுரம் அழகிய சிங்கர்' எனவும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளார். (Vol III-No. 11) அடிப்புளிக்கு ஸ்ரீநிவாசபுரம் என்று வேறு பெயர் இடப்

பட்டிருத்தலும் கூடும் எனத் தோன்றுகிறது. 'அடிப்புளி' என்பது இப்போது 'அலிபிரி' எனத் தவருக வழங்கப்படுகிறது. இராமா நுசர், திருமலை அடியிலிருந்த ஒரு புளியமரத்தின் அடியில் இருந்து இராமாயணபாடம் கேட்டுவந்தார். அப் புளியமரம் இருந்த இடம் அடிப்புளி என்று வழங்கப்பெற்றது. இவ்வுண்மை யறியாதார் சிலர், இஃது 'அடிப்படி' என்றிருத்தல் வேண்டும் எனக் கூறு கின்றனர்.

> " திருப்ப தியும்ஆழ்வார் தீர்த்தமும் பூங்கா
> விருப்பும் அடிப்புளியின் வீறும் "
>
> (கண்ணி. 98)

என்று திருவேங்கட உலாவிலும் இவ்வடிப்புளி கூறப்பட்டிருத்தல் காண்க.

முன்காலத்தில் ரங்கபூபாலன் என்னும் ஒரு பாண்டிய மன்னன், பல அரசர்களைத் திசைதோறும் சென்று வெற்றி பெற்றுத். திருமலையில், தன்வெற்றிக் கறிகுறியாக ஒரு வெற்றிக்கம்பம் நாட்டினன் எனவும், அவனே இரகுநாதன் கோயிலைக் கட்டி, அப்பெருமானை இளைய பெருமாளோடும், சீதாதேவியோடும் அதில் நிறுவினன் என்றும் திருமலை ஒழுகு (பக். 100) கூறுகின்றது. இப்பாண்டியமன்னன் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனுதல் வேண்டும். இவனே, திருமலைக் கோயிலுக்கு, கி. பி. 1245 - ல் பொற்கலசம் அமைத்தான் என்று (T. T. 172) கல்வெட்டு அறிவிப்பதால், இம்மன்னனே முதலில் அக்கோயிலைக் கட்டியவனுதல் வேண்டும். இவன் திருமாலுக்கு அடியவன். பல ஆண்டுகளுக்குப் பின் அக்கோயில் மிகப் பள்ளத்தில் ஆழ்ந்துவிட்டது. அதற்குக் காரணம் ஊரின் தெருக்கள் உயர்ந்துகொண்டே வந்ததுதான். இதனை யறிந்த கந்தாடை இராமாநுஜ ஐயங்கார், சாளுவ வீரநரசிம்மராயன் கட்டளை பெற்று, கி. பி. 1480 - ல், அக்கோயிலை உயர்த்தி இரகுநாதன் திருவுருவத்தையும் மேலுக்குக் கொணர்ந்து, மண்டபம் முதலியவற்றைக் கட்டினர். "நரஸிம்ஹராய உடையார்க்கு தர்மமாக திருப்பதி—பணம் இட்டு கோயிலும் கட்டுவித்து ரகுநாதனை" (Vol. II. 73—74) என்று வரும் கல்வெட்டினைக் காண்க.

குமார ராமாநுச ஐயங்கார் என்பவர், அச்சுத தேவராயன் தருமமாக இவ் விரகுநாதனுக்கு, கி. பி. 1530 - ல் திருத்தேர் ஒன்

றைச் செய்து, பங்குனித் திருநாளில் எட்டாம் நாள், அத் தேரில் பெருமானை ஏற்றி விழாச் செய்தார். கோவிந்தராசர் கோயிலில் ஒரு இரகுநாதர் நிறுவப்பெற்றிருக்கிறார். இவர், கி. பி. 1488 - ல் பிரதிட்டை செய்யப் பெற்றவர். முதலில் தோன்றிய இரகுநாதன் இவருக்கு முன் தோன்றியவர் ஆதலாலும், வடிவத்தில் பெரியவர் ஆதலாலும், அவரைப் பெரிய ரகுநாதன் என்று சொல்லுவர். இவர் கோயில் அமைந்துள்ள இடமும், அதனைச் சார்ந்துள்ள தெருக்களும் இரகுநாதபுரம் என வழங்கப்பட்டன.

பெரிய இரகுநாதன் கோயிலுக்கருகே அப் பாண்டிய மன்னன், தன் குலத்தவரான குலசேகராழ்வாருக்கு ஒரு கோயில் கட்டினன். (திருமலை ஒழுகு. பக். 100) அக்கோயில் இருந்த இடம் குலசேகரபுரம் என வழங்கப்பட்டு இப்போது துளசாபுரம் என மருவி வழங்கப்படுகிறது என்று சிலர் கருதுகின்றனர்.

ஆழ்வார் தீர்த்தக் கரைக்கண் உள்ள நம்மாழ்வார் கோயிலை, பல்லவராயர் என்னும் வானெடுத்த கையழகியார் என்பவன் கி. பி. 13 - ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் கட்டி ஆழ்வாரைப் பிரதிட்டை செய்தான். இவன் பெயர், கடப்பை ஜில்லாவிலுள்ள நந்தலூர்க் கல்வெட்டில், ஜடாவர்மன், திரிபுவனச் சக்ரவர்த்திகள் சுந்தர பாண்டியன் II - ஆட்சிக் காலத்தில் ஒன்பது, பத்தாம் ஆண்டுகளில் இருந்ததாகக் காணப்படுகின்றது. இவன் பல்லவர் மரபைச் சேர்ந்த ஒரு சிற்றரசனாகலாம் போலும். இவன் கி. பி. 1285 - க்கு முன்னும் பின்னும் இருந்திருத்தல் வேண்டும்.

> "ஸ்வஸ்திஸ்ரீ ஆழ்வாருடைய
> விமானமும் திருமண்டபமும்
> மாளிகையும் பாண்டிமண்டல
> மிழலைக்கூற்றத்து நடுவிற்கூறு
> துஞ்சலூருடையான் வாந்
> எடுத்த கையழகியரான
> பல்லவராயர் தர்மம்;" (Ins. Vol. I No. 57.)

என்னும் கல் வெட்டினல் மேற் கூறப்பட்ட செய்தி விளக்கமாகிறது. ஒரு முனிவர், திருமலை யடிவாரத்தில் குளக்கரையில் வாழ்ந்து, கலியுகத்தில் மக்கள் அறநெறிகளைக் கைவிட்டிருப்பதை நினைத்து அவர்களுக்குத் திவ்விய ஞானத்தையும், பிரம வித்தையை

யும் கற்பித்துக் கொண்டிருக்கிறார் என்னும் கருத்துள்ள வட மொழிக் கல்வெட்டொன்று அவ்வாழ்வார் கோயிலின் மேன் மதிற் சுவரில் காணப்படுகிறது. (Ins. Vol. I. 58) இதைக் கொண்டு, இதில் குறிக்கப்பெற்ற முனிவர் நம்மாழ்வாரே யாவர் என்று முடிவு செய்கிறார்கள் ஆராய்ச்சியாளர். இது வேறொருவரைக் குறிப்பதாகவும் இருத்தல் கூடும். அச்சுதராயன் கி. பி. 1513 - ல் திருமலைக்கு வந்தபோது, ஆழ்வார் தீர்த்தக் கரைகளுக்குக் கற்படிகளைக் கட்டி, கிழக்கு மேற்கு ஆகிய இரு திசைகளிலும் சந்தியா வந்தன மண்டபங்களையும் நிறுவி, அத் தீர்த்தத்தின் நான்கு மூலைகளிலும் திருவாழி பொறிக்கப் பெற்ற கற்களை நாட்டி, சக்கர தீர்த்தம் என்று பெயரிட்டுத் திருவேங்கடமுடையானுக் குரியதாம் படி செய்தான். இவன், திருவாழிக் கற்களை நாட்டியதற்குக் காரணம், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பேறுகளையும் பெறுவதற்காகவே யாம் என்று கல்வெட்டு அறிவிக்கிறது. (Ins. Vol. IV. No. 10.)

காளத்திச் சைவர்கள், திருவேங்கட நாட்டரசன் இறந்து போனதைத் தமக்குத் தக்க வாய்ப்பாகக் கொண்டு, அத் தீர்த்தம் கபில தீர்த்தம் என்றும், அதற்குரியவர் கபிலேச்வரர் என்றும் வழக்கிட்டு உரிமை கொண்டாடத் தொடங்கிய போது, ஒரு ஏகாங்கி நாராயண ஐயங்கார் என்னும் ஏகாங்கி, சைவர்களோடு வாதம் புரிந்து, அஃது ஆழ்வார் தீர்த்தமென்று நிலைநாட்டித் திருவாழிக் கல்லை நாற்புறங்களிலும் நடுவித்தார் என்று திருமலை ஒழுகு (பக். 102) அறிவிக்கின்றது.

மற்றொரு கல்வெட்டு (Vol. II. No. 29) கோவிந்தராஜர் உபாகர்ம நாளில் ஸ்ரீதேவி, பூதேவிகளுடன், தேவர்கள் வந்து நீராடித் தூய்மையடையும் தீர்த்தத்தில், இராமாநுசர் ஏற்பாட்டின் படி ஸ்நானத்திற்கு எழுந்தருள வேண்டும் என்று தெரிவிக்கின்றது. இதன் காலம் கி. பி. 1467.

இக் கல்வெட்டினால், இராமாநுசர் காலத்தில் இந்த ஏற்பாடு செய்யப்பட்டது என்பது தெளிவு. கோவிந்தராசர் இன்றும் தீர்த்தவாரிக்காக ஆழ்வார் தீர்த்தத்திற்கு எழுந்தருளுகின்றார். இத் தீர்த்தத்தைவிடத் தூயதீர்த்தம் திருப்பதியில் எங்குமில்லை. எனவே, கோவிந்தராசர்க்குரிய தீர்த்தமாக இராமாநுசர் ஏற்படுத்தியது ஆழ்வார் தீர்த்தமே. ஆனால் கி. பி. 1531 - க்கு முன் உள்ள கல்

வெட்டுக்களில், இத் தீர்த்தம் ஆழ்வார் தீர்த்தமென்றோ, கபில தீர்த்தமென்றோ குறிக்கப்படவில்லை. இது மிகத் தூயதென்று மட்டும் அவை அறிவிக்கின்றன.

எனவே, இதற்கு முதலில் என்ன பெயரிடப்பட்டது என்பது தெரியாவிடினும், இது கோவிந்தராசர்க்குரியதாக இராமாநுசரால் ஏற்பபாடு செய்யப்பட்டது என்பதில் ஐயமில்லை. நம்மாழ்வார் கோவில், இத்தீர்த்தக் கரையில் இருப்பதனலோ அன்றிச் சக்கரத் தாழ்வார் தீர்த்தவாரியில் முழுகித் தூய்மை செய்வதனலோ, இதற்கு ஆழ்வார் தீர்த்தம் என்று பெயர் வழங்கி இருத்தல் வேண்டும். அச்சுதராயன் கி. பி. 1531-ல் சக்கர தீர்த்தம் என்று பெயரிட்டான்.

கந்தாடை இராமாநுஜ ஐயங்கார், இத் தீர்த்தத்தின் மேற்குக் கரையில் திருவேங்கடமுடையான் சந்நிதிக்குத் தொண்டைமான் சக்ரவர்த்தி போய்க்கொண் டிருந்ததாகக் கருதப்படும் குகையில் நரசிம்மரையும், தென்கரையில் லக்ஷ்மி நாராயணனையும் பிரதிட்டை செய்து, பிற மதத்தவரால் தீங்கு வாராது தடுத்தனர் என்பது திரு மலை ஒழுகு.

தாளப்பாக்கம் திருமலை ஐயங்கார், ஆழ்வார்தீர்த்தத் தென் கரையில் தீர்த்தவாரி மண்டபம் கட்டி அதில் லக்ஷ்மி நாராயணப் பெருமானை நிறுவினர் என்பது 2. 6. 1546-ல் எழுந்த கல்வெட்டு. (Vol. V. No. 97).

கபிலேச்வரர் கோயிலில் ஒரு கல்வெட்டுக் காணப்படுகிறது. அது,

> "ஸ்வஸ்திஸ்ரீ கோட்டூர் உடையாந் ராயந்
> ராஜேந்த்ர சோழனை பிரமமாராயன்
> முனைய தரயன் எடுத்ததிருமாளிகை"

என்பது. இஃது, இரண்டாம் இராஜேந்திர சோழனை முதற் குலோத்துங்கன் காலத்ததாதல் (கி. பி. 1070—1075) வேண்டும். இவன் கட்டிய திருமாளிகை கபிலேச்வரர் கோயிலாக இருக்க லாம். ஏனெனில், இவன் சைவத்தில் மிக ஊற்றமுள்ளவன். எனவே, இது சிவபிரான் கோயில் எனல் வேண்டும்.

இங்குத் திருமாளிகை என்பது கோயிலைக் குறிக்காது என வும், எவருடைய கோயில் என்று விளக்கமாக எழுதப்படாதிருத்த

லால், இது கடவுளருக்குரிய கோயில் என்றல் பொருந்தாது என வும், வைணவ மரபில் ஆசார்யர் இருக்குமிடத்தைத் திருமாளிகை என்று சொல்வது பெரு வழக்காதலின், நம்மாழ்வாருக்காக முத லில் எடுப்பித்தது இத்திருமாளிகை எனவும் கூறுவர் ஒரு சிலர்.

ஆழ்வார்தீர்த்தத்தில் நான்காம் சுனையில் திருவேங்கடமுடை யான் திருவுருவம் ஒன்று இருந்ததாகவும், அதற்குச் சொட்டைத் திருமலை நம்பி ஸ்ரீநிவாஸ ஐயங்கார் நாள்வழிச்சந்தி ஏற்படுத்திய தாகவும் தெரிகிறது.

> " ஆழ்வார் தீர்த்தத்தில் னலாஞ் சுனையில்
> திருவேங்கடமுடையான் னள்வழி சந்தி
> விட்டவன் பிரஸாதம் "

என்பது அச்செய்தியை விளக்கும் கல்வெட்டு. இப்போது, அவ் வுருவம் எங்குளது என்பது தெளிவாகவில்லை.

தவிர, இவ்வாழ்வார் தீர்த்தம் திருவேங்கடமுடையானுக்கு உரியதென்றும் (Vol. IV. No. 10) ஒரு கல்வெட்டினுல் அறிகி ரேம். அது,

> " திருவேங்கடமுடையான் திவ்ய தீர்த்தமான
> திருப்பதியில் ஆழ்வார் தீர்த்தத்தை "

என்பது. இத் தீர்த்தத்தின் அருகில் அன்ன சத்திரங்கள் பல இருந் தன. நம்மாழ்வாருக்குத் திருவிழாச் செய்யும்போது, திருவத்யய னம் பத்தாம் திருநாளாகிய சாத்துமுறை விசாக நட்சத்திரத்து நாளில், ஆழ்வார் தீர்த்தக் கரையில் ஆழ்வார் திருத்தேரில் ஏறி யருளித் திருக்கோயிலை வலயவரும் வழக்கம் கி. பி. 1544 - ல் இருந்தது. இப்போது அவ்விழா நடப்பதில்லை.

திருப்பதியில் பாஷ்யகாரார் அக்ரகாரத்தில் கோவிந்தராசர் வட வண்டை மாடவீதியில் கி. பி. 1544-ல், ஒரு நம்மாழ்வார் கோயிலை ஆரவீடு கொண்டராஜா என்பவன் கட்டினுன். பின்னர், அதை யொட்டிக் கிழக்கில் இருக்கும் இராமாநுசகூடத் (பெரிய ஜீயர் மடம்)திற்கு ஆண்டு ஒன்றுக்கு 5713 ரேகைப் பொன் வருவா யுள்ள பத்து ஊர்களைத் தானமாகத் தந்து வைணவ யாத்திரிகர் களுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்தான். இவ் விராமாநுசகூடத் தில் ஒரு நாளைக்கு ஏறக்குறைய 500 - மரக்கால் அரிசி செலவிடப்

பட்டதாக (Vol. V. No 125) அறிகின்றோம். இந் நம்மாழ்வார் சந்நிதிக்கு இராமாநுசகூடத்து நம்மாழ்வார் கோயில் என்பது பெயர். இங்கு, கி. பி. 1553-ல் பன்னிரண்டு நாட்கள் திருவிழா நடந்து வந்தது.

ஆழ்வார் தீர்த்தத்திற்குப் போகும் வழியில் கிழக்காக ஒரு கோபுரம் மட்டும் காணப்படுகிறது. அஃது அச்சுதப் பெருமாள் கோயில்; அச்சுத தேவராயனால் கட்டப்பட்டுப் பெருமாளின் திருவுரு நிறுவப்பட்டது. அதைச் சுற்றிலும் 120 - வீடுகள் அடங்கிய அக்ரகாரத்தைக்கட்டி அதற்கு அச்சுதராயபுரம் என்று பெயரிட்டான் அவன். கி. பி. 1538-ல் திருவேங்கடமுடையான் ஸ்ரீ பண்டாரத்திற்கு நானூறு பணம் செலுத்தி, அச்சுதப் பெருமாள் கோயிலும், அக்ரகாரமும் கோட்டூரில் கட்டுவதற்கு நிலம் வாங்கினான். (Vol. 4 No. 108) அவ்வரசன் காலத்துக்குப் பின், அக்கோயிலும் ஊரும் சீர்கெட்டுப் போய்விட்டன. ஆனால், கோபுரம் ஒன்றுமட்டும் இதற்குச் சான்று பகர்கின்றது. இப்போது நரசிம்ம தீர்த்தக்குளக்கரையில் சிறிது உடைந்துபோனநிலையில் பூசையின்றி அமைக்கப்பட்ட திருவுருவம் அச்சுப் பெருமானே என்கின்றனர். அதன் அழகும், பெருமிதமும் காண்பவர் மனதைக் கொள்ளை கொள்ளும்.

திருமங்கையாழ்வார், நாதமுனிகள், திருக்கச்சிநம்பி, வரதராசப்பெருமாள் முதலானவர்களுக்குக் கோயில்களும், கோவிந்தராசர் கோயிலில், திருமலை நம்பி, இராமநுசர் (கி. பி. 1220) கூரத்தாழ்வார், மதுரகவியாழ்வார் முதலியவர்களின் கோயில்களும் பல்வேறு காலத்தில் கட்டப்பட்டன. அடிப்புளியில் கி. பி. 1300 - க்கு முன் பெரியாழ்வார் கோயில் கட்டப்பட்டது. இப்போது, திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் அதனைப் புதுக்கி வருகிறார்கள்.

சாளுவ நரசிம்மனால், திருமலையிலும் திருப்பதியிலும் இராமாநுச கூடங்கள் கட்டப்பட்டு அவற்றிற்குத் தன் ஆசார்யரான கந்தாடை இராமாநுச ஐயங்காரைத் தலைவராகஅவன் நியமித்தான். இவற்றின் வரலாறுகள் விரிப்பிற் பெருகும்.

## விழாக்கள்.

திருமலையில் புரட்டாசித் திருநாள் முதன் முதல் பிரமதேவனால் தொடங்கப்பட்டதென்பது புராணங்களால் அறியக்கிடக்கின்றது.

திருவேங்கடமுடையானாகிய மூலமூர்த்தி, தானே தோன்றியவர் என்று நூல்கள் கூறுகின்றன.

பல்லவர் காலத்துக்குமுன், அப்பெருமானது கோயில் சிறிய அளவுடையதாய் இருந்தது. ஊரும் விரிவாக இல்லை. அக்காலத்தில் பிரமோற்சவம் எவ்வாறு நடைபெற்று வந்தது என்று அறிவதற்கு ஆதாரம் இல்லை. கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியில், சாமவை என்னும் பல்லவ அரசி, மணவாளப் பெருமாள் என்னும் வெள்ளி விக்கிரகத்தை அமைத்துப் புரட்டாசித் திருவிழாவிற்காகத் திருச்சுகனூரில் உள்ள நிலங்களை அளித்தாள். அதன் பின் புரட்டாசித் திருவிழாச் சிறப்புற நடைபெற்றது. திருமலை ஒழுகின்படி அவ் விழா, திருச்சுகனூரிலே சிலகாலம் நடந்திருத்தல் வேண்டும். அஃது இராமாநுசர் காலத்தில் திருமலையில் நிகழ்ந்து வந்தது.

புரட்டாசி மாதத்திலே யன்றி, வைகாசி, மார்கழி நீங்கலாக மற்றைய பத்து மாதங்களிலும், ஒவ்வொருவரால் இத் திருவிழா நடத்தப்பட்டதாகக் கூறப்படினும் புரட்டாசித் திருவிழாவே முதன்மைபெற்றது. கல்வெட்டுக்களில் இவ்விழாக்கள் திருக் கொடித் திருநாள் எனப்படுதலால், ஒவ்வொரு மாதமும் விழாவின் போதுகொடி யேற்றுதல் உண்டு என்று தெரிகிறது. (Ins. Vol. IV. No. 129) ;"...............தம்முடைய உபயமாக ஆநி மாஸத்தில் திருவோண நக்ஷத்ரம் அங்குரார்ப்பணமும் சதயம் திருமுளையும் தம்முடைய நக்ஷத்ரம் மிருகசீரஷம் தீர்த்தவாரியுமாக விடாயாற்றி வரைக்கும் நாள் 13-க்கு திருக்கொடி திருநாள்" என வருவதால் புரட்டாசியைத் தவிர மற்றைய மாதங்களில் திருவோணத்தில் தீர்த்தவாரி நடக்க வேண்டும் என்னும் நியதி இல்லை என்க.

ஊஞ்சல் விழா, கோடைத் திருநாள், திருப்பள்ளி ஓடத் திருநாள் முதலாகப் பல விழாக்களும் அக்காலத்தில் நடந்தன. அத்யயனோத்ஸவமும், அதன் இறுதில் தண்ணீரமுது வழி திருத்து விழாவும் இப்போது போலவே அப்போதும் நடை பெற்றன. அத் யயனோத்ஸவத்தில் கடைகொழி நாச்சியார் திருவத்யயனம் என்ப தொன்று நடந்து வந்ததாக (Vol. II No. 95. 27-9-1491) அறி கின்றோம். அதன் வரலாறு தெரியவில்லை. திருமலை ஒழுகிற் குறிப் பிட்டபடியே திருவத்யயனத்தில் இயற்பா முதலாக நூற்றந்தாதி ஈறுக இருபத்து மூன்று நாட்கள் திவ்வியப் பிரபந்தம் ஓதப்பட்டு

வந்த தென்பது கி. பி. 1485 - ல் ஏற்பட்ட (Vol. II. 83) கல்வெட்டினால் தெரிகிறது.

புஷ்பயாகம் என்னும் விழா, விடாயாற்றிக்கு முன் நடந்து வந்தது. அன்று உற்சவ மூர்த்தியைத் திருமேனி முழுதும் பூக்களால் அலங்கரித்துப் பன்னிரண்டு முறை திருவாராதனம் நடத்துவர். இப்போது அவ்விழா நடை பெறுவதில்லை. திருவேங்கடமுடையானுக்குக் கல்யாண உற்சவத்தை (வைவாஹிகோத்ஸவம்) ஐந்து நாள் செய்யுமாறு, பெரிய திருமலை ஐயங்கார் குமாரரான சின்னண்ணு என்னும் திருவேங்கட நாதர் கி. பி. 1546 - ல் ஏற்பாடு செய்து அதன் செலவுக்காக 120 - ரேகை கெட்டிப் பொன் வருவாயுள்ள மல்லவரம் என்னும் ஊரை நன்கொடையாக அளித்தார். இப்போது இவ்விழா நடக்காவிடினும் இக் கல்யாணவிழா திருமலையில் ஏறக்குறை நாள்தோறும் அன்பர்களால் நடத்தப்பட்டு வருகின்றது.

திருமலையில் நடக்கும் விழாக்கள் எல்லாம் பண்டைக் காலத்து முறைப்படியே இன்னும் நடந்து வருகின்றன. திருப்பதி வரலாறுகளிற் காண்க.

திருப்பதியில் கோவிந்தராசருக்கு ஒவ்வொரு வைகாசி மாதமும், இராமாநுசர் ஏற்பாட்டின்படி திருக்கொடித் திருநாள் நடக்கின்றது. வீரநரசிங்க யாதவராயன் மனைவியாகிய யாதவ நாய்ச்சியார் என்பவர் கி. பி. 1245-ல் ஆனித் திருவிழாவை ஏற்படுத்தி, அதற்காக ஒரு திருத்தேர் கட்டி, மற்றும் வேறு திருப்பணிகளும் செய்து வைத்தார். அதன் பின் ஆனிவிழா நடந்து வந்தது. பெரும்பான்மையான விழாக்கள் திருவேங்கட முடையானுக்கும் கோவிந்தராசனுக்கும் ஒரு வகையாகச் செய்யப்பட்ட போதிலும் ஒரே காலத்தில் நடைபெறாமல், அன்பர்கள் சேவிப்பதற்குத் தகுதியாக வெவ்வேறு காலங்களிற் செய்யப் படுகின்றன.

## வேறு செய்திகள்.

திருவேங்கடமுடையானுக்குப் பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை புழுகு காப்புமுறை கி. பி. 1496 - ல் நடந்தது. பின்னர், ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் அது நடைபெற வேண்டுமென்று கி. பி. 1534-ல் ஏற்பாடு செய்யப்பட்டது. இது பெருமானுக்குப் புனுகுக் குழம்பால் காப்பிடும் முறையாகும். இப் புனுகு, மிதித்த

புழுகு எனப்பட்டது. பலவகைப்பட்ட வாசனைப் பொருள்களைக் கலந்து செய்யப் பட்டமையால் இவ்வாறு கூறப்பட்டது போலும். இப் புழுகு காப்பு 'புளிக் காப்பு' எனத் தவருக வழங்கப்படுகிறது.

சாளுவ நரசிம்மன் காலத்தில், மகமதியர் கலகம் நேர்ந்தது. அப்போது தான் கோவிந்தராஜர், ஆழ்வார், எம்பெருமானர்களோடு, திருவேங்கட முடையானும், பாபவிநாச தீர்த்தத்திற்கு அருகில் ஒரு மறைவான குகையில் வைக்கப்பட்டதால் அங்கு ஓராண்டு திருவாராதனம் கொண்டருளினர்கள். (திருமலை ஒழுகு பக். 130) பாமினி இராஜ்யத்துச் சுல்தான் மூன்றும் மகமதுஷா என்பவன் கி. பி. 1483—84-ல் விஜயநகர இராஜ்யத்தைக் கைபற்றப் படையெடுத்து வந்தபோது இச்செய்தி நிகழ்ந்திருத்தல் வேண்டும். அப்போது சாளுவ நரசிம்மன், பெரிய பெருமாளின் பாது காப்புக்காகக் கல்வேலியொன்று கட்டிவைத்தான் என்பது தெரிகிறது. அக்கல் வேலி எது என்று இப்போது புலனுகவில்லை.

## தாளப்பாக்கம் பாடகர்கள்.

தாளப்பாக்கம் பாடகர்கள் நந்தவரீக பிராமணர்கள். பாரத்வாஜ கோத்திரமும் ஆச்வலாய சூத்திரமும், ரிக் சாகாவும் உடையவர்கள். இவர்களுள் முதன்மை யானவர் அன்னமாச்சாரியார். இவர் தமது பதினுரும் பிராயம் தொடங்கி (கி. பி. 1424) 92-ம் வயதுவரை திருவேங்கட முடையானைப் பாடி, பத்தி நெறியை இன்னிசை மூலமாய்ப் பரப்பினவர். இவர் இளமையிலே (16 - ம் வயதில்) திருவேங்கடமுடையானை ப்ரத்தியட்சமாகக் கண்டு அவர் அருள் பெற்றவர். கந்தாடை இராமாநுஜ ஐயங்கார் இவர் காலத்தினரே. அத்யாத்ம சங்கீர்த்தனலு, சிருங்கார சங்கீர்த்தனலு, சிருங்கார மஞ்சரி என்னும் நூல்களைப் பாடினர். இப் பாட்டுக்கள் எல்லாம் பக்திச்சுவை நனிசொட்டச் சொட்ட அமைந்திருக்கின்றன. இவற்றைச் செப்பேடுகளில் அழகான தெலுங்கு எழுத்தில் எழுதி வைத்திருக்கிறர்கள். அவற்றுள் சிலவற்றை அச்சிட்டு எங்கள் கழகம் (S. V. O. Institute) வெளியிட்டிருக்கிறது. இவர் திரு மகனுராகிய பெத்த திருமலாச்சார்யர் என்பவரும் பல பாட்டுக்களை எழுதி வைத்துள்ளார். இப் பாடல்கள், இலக்கியமாகவும், இசை இன்பம் செறிந்த பக்தி நெறியாகவும் விளங்குகின்றன. சின்ன திருமலை ஐயங்கார் என்பவர், பெரிய திருமலை ஐயங்

காரின் திருமகனார். இவர் பாடல்களும் மிக உயர்ந்தவை. இம்மூவர் பாடல்களும் 15 - ஆயிரத்துக்கு மேற்பட்டவை.

இவர்களுள் அன்னமையங்கார் முதலில் ஸ்மார்த்தராயிருந்து பின்னர் இராமானுச சித்தாந்தத்தை மேற் கொண்டார் என்கிறார்கள். இவர்களுக்காகச் சாளுவ நரசிம்ம ராயனும், கிருஷ்ண தேவ ராயனும் பல ஊர்களை வரியில்லாமல் தானமாக விட்டனர். இவர்கள் அவற்றின் வருவாயைக் கொண்டு திருவேங்கடமுடையானுக்கும் கோவிந்தராசருக்கும், ஆழ்வார்களுக்கும் பல கைங்கர்யங்களைச் செய்து திருவேங்கடமுடையானது பெருமையை உலகுக்கு எடுத்துக் காட்டினார்கள்.

## ஜீயர்கள்.

இராமானுசர் காலத்தில், திருமலையில் திருநந்தவனத் திருப்பணியை அநந்தாழ்வான் மேற் கொண்டது போலப் பல ஏகாங்கிகளும் மேற்கொண்டிருந்தனர். இராமானுசர் காலத்திற்குப் பின்னும் பலர் நந்தவன கைங்கர்யங்கள் செய்து வந்தனர். அவர்களுள் முதல்வராகிய முல்லைத் திருவேங்கட ஜீயர் கி. பி. 1387 - முதல் 1392 - வரையில் அரிசனலையன் திருநந்தவனக் காப்பாளராய் இருந்தனர் (T. T. 4357) என்பது கல்வெட்டில் காணப்படுகிறது. அவர்க்கு முன்னையோர் பெயர் கல்வெட்டுக்களில் காணப்படவில்லை. திருநந்தவனத்தைப் பாதுகாத்த ஜீயர் அனைவரும் கோயில் கேள்விக்கு உரியவர் என்று சொல்ல முடியாது. இராமானுசர் திருவேங்கடச் செல்வத்திற்கும், திருப்பணிகட்கும் குறைவுவராது இருப்பதற்காக, அவற்றை மேற் கொண்டு திருத்தொண்டில் ஈடுபட்டிருக்கச் சந்நியாசிகளாகிய ஜீயர்களை ஏற்படுத்தினார். இப்போது திருமலையில் உள்ள பெரிய ஜீயர் மடத்தில் இராமானுசரே கி. பி. 1053 - ல் எழுந்தருளியிருந்து, தம் பதவியில் அப்பன் சடகோபராமானுஜ ஜீயரை நியமித்தருளினார். அவருக்குப் பின் பலர் ஜீயரராயினர். அவர்கள் வந்த முறையும் பெயர்களும், மடத்துத் தலைவர்களாய் எழுந்தருளியிருந்த காலமும் பிறவும் பெரிய ஜீயர் மடத்திலுள்ள ஜீயர் பரம்பரைப் பட்டயத்தால் விளங்கும்.

முல்லைத் திருவேங்கட ஜீயருக்குத் திருமலைத் தானத்தார் கி. பி. 1390 - ல் செய்து கொடுத்த சிலா சாஸனத்தில் (Vol. I No. 187) 'கோயில் கேட்கும் ஜீயர்கள் நிர்வாகம் இரண்டும்' என்று பொதுப்

படக் குறிக்கப் பெற்றிருத்தலால், திருவேங்கட ஜீயர் கோயில் கோள்வியுடையராய் இருத்தல் வேண்டும் என்றும், அவருக்கு இள வரசாக மற்றொரு ஜீயர் இருந்திருத்தல் வேண்டும் என்றும் தெரி கின்றன. 'கோயில் கேட்கும்' என்னும் பெயர் முதல் முதலாக இக் கல்வெட்டில்தான் காணப்படுகின்றது. பின்னர்க் கி. பி. 1445-ல் கோயில் கேள்வி ஜீயராயிருந்தவர் எம்பெருமானர் ஜீயர் என்பது T. T. 369 - ல் காணப்படுகின்றது. இவர் கி. பி. 1493 - வரை ஜீயராகவிருந்தார். இவருக்கு முன்னும், முல்லைத் திருவேங்கட ஜீய ருக்குப் பின்னும் எவரும் இருந்ததாகக் கல்வெட்டுச் சான்றுகள் இல்லை. இவ் எம்பெருமானர் ஜீயர் திருமங்கை யாழ்வார் கோயி லுக்குத் தருமகருத்தர். ஆதலின் இவர் சின்ன ஜீயராதல் வேண்டும். இன்றும், அக்கோயில் தருமகருத்தர் சின்ன ஜீயரே யாவர். இவர் காலத்துப் பெரிய ஜீயர் திருப்பதி உடையவர் கோயிலுக்குத் தரும கர்த்தரான எதிராஜ ஜீயர்.

திருமலை யொழுகில் காணப்படும் ஜீயர்களின் வரிசை முறை கல்வெட்டுக்களில் அமைக்கப்பட்டில்லை. மணவாளமாமுனிகள் காலத்திலிருந்து எழுந்தருளியிருந்த ஜீயர்களின் பெயர்களே ஒழுங்கு முறை தவருது கல்வெட்டில் காணப்படுகின்றன. மணவாள மாமுனிகள் கி. பி. 1503-லிருந்து மூன்றாண்டுகள் பெரிய ஜீயராய்த் திருமலையில் எழுந்தருளியிருந்து திருவேங்கடமுடையான் செல் வத்திற்கும் திருப்பணிகளுக்கும் தலைவராய் இருந்தார். வரிசை முறையாகவந்த ஜீயர்கட்கு (பெரிய ஜீயர், சின்ன ஜீயர்) முன் இருந்த அரசர் முதலியோர் மடங்கள் கட்டிவைத்து, போற்றிவந்த னர். இவர்கட்கு அக்காலத்தில் கோயில் நிருவாக அதிகாரங்கள் முழுதும் சொந்தமாக விருந்தன. இராமானுசர் ஏற்படுத்திய கட்டளை அது.

கோயில் நிர்வாகம் இல்லாமல் சில ஜீயர்கள் திருமலையில் நந்த வனத் திருப்பணி செய்து வந்தனர் என்று நாம் கூறினேம். அவர் களுள், ஆதிவண் சடகோப ஜீயர் என்பவர் கி. பி. 1506 - க்கு முன் திருமலையில் ஒரு மடம் கட்டி வைத்துப் பலருக்குத் தமது சமய உண்மைகளை யறிவித்துச் சிறந்திருந்தார். அவர், நந்த வனத்தை ராயர் குளக்கரையில் அமைத்துத் திருவேங்கடமுடை யானுக்குத் திருமாலைத் திருத்தொண்டு நடத்திவந்தனர். திருவேங் கடவனுக்கும் கோவிந்தராசனுக்கும் திருப்போனகம் அமுது செய்

விக்க 260 - பணத்தை, கி. பி. 1528 - ல் அளித்தனர். இவரது சீடர்களுள் ஒருவன், பெருமாளுக்கு ஏற்படுத்திய நிவேதனத் திருப்போனகத்தில், அவன் பங்கை (விட்டவன் விழுக்காடு) இவர் பெற்றுக்கொள்ளும் உரிமையுடையராய் இருந்தார். இவருக்குப் பின் நாராயண ஜீயர், பராங்குச ஜீயர், ஸ்ரீநிவாச ஜீயர், முதலிய பலர் பேரும் புகழும் பெற்று வைணவ சமயத்தைத் தாங்கள் அறிவுரைகளின் ஊற்றத்தால் வளர்த்து வந்தனர்.

கோயில் பிரசாதங்களை விற்றல், பல நூறு ஆண்டுகட்கு முன்னேயே நடந்து வந்தது. அந் நடைமுறை புதிதாக ஏற்பட்டதன்று. கி. பி. 1536 - ல் ராச்ச ராசாவின் புத்ரர் சாளுவதிம்மரஸயர் என்பார். 1900 - பணத்தைத் (தாளில்பாக்கம்) தாளப்பாக்கம் அந்நமய்யங்கார் குமாரராகிய திருமலை ஐயங்காரிடமிருந்து பெற்றுக் கொண்டு நாள்வழி ப்ரசாதத்தையும், அதிரசம் பதின்மூன்றையும் விற்று விட்டிருக்கிறார். (Ins. Vol IV No. 93)

திருமலையில், பக்தர்கள் தங்கள் மயிரை மொட்டை யடித்துக் கொள்ளுகிறார்கள். இது எதற்காக ஏற்பட்டது? எப்போது ஏற்பட்ட தென்று சரியாய்த் தெரியவில்லை. ஆனால், திருவேங்கட உலாவில்,

"............ ............ .......... வந்தவரைத்
தன்னடிமை யாக்கித் தலைமயிரைக் கண்டிப்பான்" (390)

என்று கூறும் ஒரு தொடர் காணப்படுகின்றது. இது கொண்டு திருவேங்கடவன் தன் இடத்திற்கு வருகின்றவர்களைத் தனக்கு அடிமை யாக்கிக் கொண்டு, அதற்கு அடையாளமாக அவர்கள் தலை மயிரைப் போக்குவிக்கின்றான் என்று அறிகிறோம். முற்காலங்களில் ஒருவனை அடிமையாக்கிக் கொண்டதற்கு அறிகுறியாக அவனுக்கு மொட்டை அடித்தல் வழக்கம். குற்றவாளிகளாகச் சிறைக்கு வந்தவர்களையும் மொட்டை யடித்தல் சில ஆண்டுகளுக்கு முன்வரை வழக்கத்தில் இருந்து அண்மையில் நிறுத்தப்பட்டது.

ஒரு சிலர், பெருமாளுக்குத் தங்கள் தலை முடியைத் தந்தால், அது தங்கள் தலையையே கொடுத்தது போல் ஆகும் என்று கருதிச் செய்து கொண்ட பிரார்த்தனையால், தங்கள் உயிர்க்காப்பிற்காக இதனைச் செய்கின்றனர் என்று சொல்லுகிறார்கள். இவ் உலா கி. பி. 15 - ம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. அதற்கு முன் எப்

போது முடிகொடுக்கும் இவ்வழக்கம் ஏற்பட்டதென்பது தெரிய வில்லை. எனினும், இவ்வழக்கம், 500 - ஆண்டுகளுக்கு முன்பே நடைமுறையில் இருந்துவந்தது என்பது தெளிவு.

வைணவப் பெருமக்களுள் சிலர் தங்கள் கடமைகளைச் செலுத் துங்கால், திருமலை யடிவாரத்திலேயே அவற்றைச் செய்திருக் கிறார்கள். இதனை,

> "—கள் ஸமு....ஸ்ரீவைஷ்ணவரில் (பெருமக்கள்)
> திருமலை இல் திருவடி வாரத்திலே திருவா—
> —கடமை செலுத்துவதாநோம் (முக்கொ)

என்னும் கல்வெட்டினால் அறிகின்றோம். (T. T. Ins. Vol. I—165) இவ்வாறு அவர்கள் செய்ததற்குக் 'காரணம் திருமலை யைத் தங்கள் காலினால் மிதித்தல் பாவமெனக் கருதியும், இராமா நுசர் முதல்முதல் அடிவாரத்திலேயே தங்கி இராமாயணத்தைப் பாடங்கேட்ட வரலாற்றை யறிந்தும் திருமலை மேல் ஏறுவதற்கு அஞ்சியதே யென்றும், அன்றி, திருமலைமேல் ஏறுவதற்குரிய வசதி யில்லாமையே என்றும் இரண்டு வகையாகக் கூறலாம். அவர்கள் கடமை செலுத்தியது பிரார்த்தனைக் காணிக்கையும், திருமுடி களை தலும் என்று கொள்ளலாம்.

திருவேங்கடமுடையானுக்குத் தொன்று தொட்டே திருமுன் காணிக்கை செலுத்தும் வழக்கம் இருந்தது. திருவேங்கட உலாவில்,

> "மெய்த்தமணி வீழாமல் விந்திகை விந்திகையாய்
> வைத்த கருகூலம் வளராதோ" (414)

என்றும்,

> "வெற்றிப் புழுகொழுகும் மேனியான் காணிக்கை
> நிற்றல்பற் றுயம் நிரப்புவோன்." (40)

என்றும், வருவன வற்றால் கி. பி. 15.ம் நூற்றாண்டிலேயே இக்காணிக்கை மிகுதியாகக் கிடைத்து வந்ததென்பது தெரிகிறது. கல் வெட்டுக்களில் இக்காணிக்கை திருமுன் காணிக்கை என்று காணப்படுகின்றது.

திருமலை ஒழுகிற் கூறப்பட்டுள்ள படியே, திருவேங்கட முடையான் மடைப் பள்ளிக்கு விறகு (எரி கரும்பு) முறை செய் பவனுக்குச் சிங்க முறையான் என்பதே பெயராகக் கல்வெட்டு

களில் (Vol. III—Pages 112 and 137) "தேவையாள், பணி முறை, சிங்கன் முறையான்', எனக் காணப்படுகிறது. இப்போதும் திருமடைப் பள்ளியிலுள்ளவர் விறகைச் 'சிங்கன் முறை' என்றே கூறுகின்றனர்.

தேவையாள் என்பவர் கோயில் மடைப்பள்ளிப் பரிசாரகர் என்று கல்வெட்டுக்களை மொழி பெயர்த்தவர் குறிப்பிட்டுள்ளார். திருமலை ஒழுகில், தேவியின் ஆட்கள் என்பதே பிழையற்றதென்றும், தேவயாள், தேவையாள் என்பவை தவறான சொற்கள் என்றும் கூறபட்டுள்ளன.

திருப்பதியில் ஸ்ரீநிவாசபுரம், நரசிங்கபுரம், அச்சுதராயபுரம், ராமாநுசபுரம், ரகுநாதபுரம் எனப் பல பிரிவுகள் அடங்கி இருந்தன. இவற்றுள் இராமாநுசபுரம் கட்டியம் யாதவராயனால் கோவிந்தராசர் கோவிலை அடுத்து அமைக்கப்பட்டது. மற்றவற்றுள் அச்சுதராயபுரம் என்பது ஆழ்வார் தீர்த்தத்திற்கு அருகில் இருந்து அழிந்துவிட்டது. இரகுநாதபுரம் என்பது பெரிய ரகுநாதன் கோவிலைச்சுற்றியுள்ள இடம். ஸ்ரீநிவாசபுரம் என்பது, அடிப் புளியை யொட்டித் தெற்காக அமைந்திருத்தல் வேண்டும். நரசிங்கபுரம், நரசிம்ம தீர்த்தத்தை ஒட்டியிருத்தல் வேண்டும். தவிர, திருப்பதியில் பெரிய இராசவீதியும் இருந்தது. அஃது இப்பொழுதுள்ள (காந்தி ரோடாக) கிழக்கு மேற்குக் கடைத் தெருவாக இருத்தல் கூடும்.

திருமலை ராயன், பெரிய இராசவீதியிலிருந்த தன் அரண்மனையில், நாள்தோறும் திருவேங்கடமுடையானுக்கு இடையர்கள் நெய் அளந்து கொடுத்ததைத் தானே நேரில் சரிபார்த்து வந்தான் என்பது கி. பி. 1552-ம் ஆண்டில் உண்டான (G. T. 372) கல் வெட்டினால் புலனாகின்றது.

திருமலைக் கோயிலில் உள்ள முன்கோபுர வாயிற்படிக்கு அவாவறச் சூழ்ந்தான் திருவாயில் எனவும், துவாரபாலகர் மண்டபத்திற்கு வென்று மாலையிட்டான் திருமண்டபம் எனவும் பெயர்கள் வழங்கிவந்தன. இக்கோயிலின்கண் ஐந்து பேரங்கள் இருக்கின்றன. ஒன்று மூலபேரமாகிய திருவேங்கடமுடையான். இவருக்குப் பெரிய பெருமாள் என்றும் பெயர் உண்டு. இரண்டாவது வேங்கடத்துறைவாராகிய உக்கிர ஸ்ரீநிவாசன் திருவுரு. மூன்றுவது உருவம் மணவாளப் பெருமாளாகிய போக ஸ்ரீநிவாச

ருடையது. நான்காவது மலைகுனிய நின்றாராகிய உத்ஸவமூர்த்தி. ஐந்தாவது மூர்த்தி பலிபேரமாகிய கொலு ஸ்ரீநிவாசன் என்பவர். இவ் வைந்து பேரங்களும் மிகச் சிறந்தவைகளே.

கல் வெட்டுக்களில் காணப்படும் செய்திகள் அனைத்தையும் பல தலைப்புக்களில் தொகுத்து எழுதினால் திருமலை திருப்பதிக் கோயில் வரலாறுகளும் பிறவும் தெளிவாக விளங்கும். விரிவஞ்சி இத்துடன் அமைகிறேன்.

வேங்க டங்கள்மெய் மேல்வினை முற்றவும்
தாங்கள் தங்கட்கு நல்லன வேசெய்வார்
வேங்க டத்துறை வார்க்குந மவெனல்
ஆங்க டமைய துசுமர்ந் தார்கட்கே.

திருப்பதி,
19–12–'53.

கோ. பாலசுந்தர நாயகர்,
பதிப்பாளர்.

# பொருளடக்கம்.

---

குறிப்பு :—27 ம் பக்கத்துக் கீழ்க் குறிப்பு 2-ல் இறந்துபோகும் உடலுடையவன் என்பதனை இறுதியான உடலுடையவன் என்பதாகக் கொள்க.



अखिल भुवन जन्म स्थेम भङ्गादिलीले विनत विविध भूतव्रात रक्षैकदीक्षे ।
श्रुतिशिरसि विदीप्ते ब्रह्मणि श्रीनिवासे भवतु मम परस्मिन् शेमुषी भक्तिरूपा ॥

அகில புவந ஜன்ம ஸ்தேம பங்காதி லீலே
விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே !
ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரம்ஹணி ஸ்ரீநிவாஸே
பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா ||

ஸ்ரீ:
ஓம் வராஹாய நம:
ஸ்ரீ வேங்கடேசாய நம:
ஸ்ரீ நரஸிம்ஹாய நம:
ஸ்ரீயை பத்மாவத்யை நம:
ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே வரவரமுநயே நம:

# திருமலை ஒழுகு

ஸ்ரீரங்கேசாதி திவ்யதேசங்களிலே தத்ததாகம ஸித்தங்களாயும்
தத்தத் திவ்யக்ஷேத்ரமாஹாத்மியஸித்தங்களாயும்
பகவதநுக்ரஹ மூலங்களாயும் உண்டான
பகவத் தர்மங்களை உத்தரிப்பித்தருளின எம்பெருமானுர் அநுக்ரஹித்த

## திருமலை திருப்பதி ஐதிஹ்ய மாலை.



ஸ்ரீ திருவேங்கடமுடையான் கலியுகாதியிலே ஆச்ரிதனை தொண்டைமான் சக்ரவர்த்திக்கு ஆபந் நிவாரகமாகத் திருவாழி திருச்சங்கைப் ப்ரஸாதித்த காலந்தொடங்கி, எம்பெருமானுர் திருவரங்கந் திருப்பதியிலே விஷ்ணுதத்வ [1] ப்ரதிஷ்டாபநாசார்யராய் எழுந்தருளி யிருக்கிற காலத்திலே, சில நாளளவும், திருக்கைகளிலே திருவாழி திருச்சங்கு இல்லாமலிருக்க, அப்போது ஸந்நிதியில் இருக்கும் வைகானஸர்கள், திருவேங்கடமுடையான் திருமேனிக்கு உசிதோபசாரங்களைப் பண்ணுமல், [2] உத்கடப்ரவ்ருத்திகளைப் பண்ணிக்கொண்டிருக்க, தேசாதிபதியானவன் கண்டு, அவர்களுக்கு உக்ரசிக்ஷைகளைப் பண்ணினதினுலே, ஸ்தலத்திலே பெரியோர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இல்லாமலிருக்க, அந்தக் காலத்திலே சில சைவ ஜனங்கள், அந்தத்தேசாதிபதி ஆஸ்தானத்திலே

1. நிலை நாட்டும் ஆசார்யராய். 2. கூடாத செயல்களை.

வந்து, "தங்கள் தேவதையான குமாரஸ்வாமியானவர் இந்த மலையிலே வந்து தபஸ்ஸைப் பண்ணுகிறார்" என்று வாமன புராணத்திலே ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்ம்யத்திலே த்ரிதீயாத்யாயத்திலே விஸ்தாரமாய் இருக்கையாலே, "இந்தக் கோனேரிக்கரையில் இருக்கும் ஸ்வாமியானவர் குமாரஸ்வாமி; இவர் தபஸ்ஸைப் பண்ணுகிறவராகையாலே, அவராயுதங்களான பாசாங்குசங்கள் இல்லையென்றும், ஸ்வாமியென்னும் பேரான ஸுப்ரஹ்மண்யன் பேராலே தீர்த்தத்துக்கு ஸ்வாமி புஷ்கரணியென்று பேருண்டாச்சுது என்றும், இந்தப் பர்வதம் சிவக்ஷேத்திரமென்றும், நடுவில் சில வைஷ்ணவர்கள் கூடி ராஜ பக்ஷபாதங் கொண்டு, விஷ்ணு விக்ரகங்களைப் பண்ணிக் கொண்டுவந்து கோயிலிலே வைத்து உத்ஸவாதிகளை நடப்பித்தார்க"ளென்றும், வாமன புராண வசனங்களுக்கு, புராணாந்தரங்களோடு சமானார்த்தமாகப் [1] பூர்வோத்தர பராமரிசம் பண்ணாமல், [2] ஆபாததః ப்ரதீயமான அர்த்தங்களைச் சொல்லிக் கொண்டு நிற்க, ராஜாவும் இரண்டுங் கேட்டு, விசாரமிட்டு [3] அத்ய பர்யந்தத்துக்கும் இந்தப் பர்வதம் விஷ்ணு க்ஷேத்திரமென்றும், இதிலே நித்ய வாசம் பண்ணுகிறவர் விஷ்ணுவென்றும், இந்தத் தீர்த்தம் விஷ்ணு தீர்த்தம் என்றும் ப்ரஸித்தமாய் ஸ்ரீ வைஷ்ணவர்கள் தானே இவர்க்குப் பூஜா மஹோத்ஸவாதிகளையும் நடப்பித்தார்களே; இப்போது சைவஜனங்கள் இப்படிச் சொன்னார்களே யென்றும் விசாரமிட்டுக் கொண்டிருக்க, அப்போது ஸ்தலத்திலே பெரியோர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இல்லாமையாலே, இருந்த பேர்கள் ராஜ ஸ்தானத்திலே போய்ப் புராணார்த்தங்களைச் சொல்லி விஷ்ணுவென்று நிர்வஹிக்க மாட்டாமல் அசக்தராய்க் கோயிலிலே எழுந்தருளியிருக்கிற எம்பெருமானார் சந்நிதிக்கு இந்த விர்த்தாந்தத்தை எழுதி யனுப்ப, எம்பெருமானாரும் இத்தைக் கேட்டருளிச் சீக்கிரமாகத் திருப்பதியிலே எழுந்தருளி, தேசாதிபதியை ஆசீர்வாதம் பண்ணி, அஷ்டாதச புராணங்களிலே வேங்கடாசல விஷயமான புராணங்களிலே யிருக்கிற வேங்கடாசல மாஹாத்மிய வசனங்களைப் பூர்வோத்தர விரோதமின்றிக்கே [4] ஏகவாக்யதாபந்நமாம்படி உபந்யஸித்தும், ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்தியையும் [5] அவிகீதமான

1. முன் பின் விசாரியாமல். 2. மேலெழுந்தவாரியாகத் தோன்றும். 3. இன்று வரைக்கும். 4. ஒரு பொருளுக் கியைந்ததாம்படி. 5. வேதம் முதலியவற்றிற்கு முரணில்லாத.

சிஷ்டாசாரங்கள், உக்தி அனுஷ்டானங்களையும் உபந்யசித்தும், இவரே ஸ்ரீ மஹாவிஷ்ணுவென்று அருளிச் செய்ய,

ராஜாவுங் கேட்டு, உபயவாதி புராணங்களின் வசனங்களாலே ஒருநிச்சய மின்றிக்கே மத்யஸ்தனு யிருக்க, அப்போது எம்பெருமானாரும் ராஜாவைப் பார்த்து,

தர்சயந் பக்தவாத்ஸல்யம் யோ ததௌ ஹஸ்தகே சுபே।
சங்கசக்ரே ந்ருபேந்த்ராய சக்ரவர்த்தீதி யம் விதுஃ ||
அத ஏவாரிசங்காப்யாம் ஸந்த்ருச்யேதே விநா கரௌ।

[ दर्शयन् भक्तवात्सल्यं यो ददौ हस्तगे शुभे ।
शङ्खचक्रे नृपेन्द्राय चक्रवर्तीति यं विदुः ॥
अत एवारिशङ्खाभ्यां सन्दृश्येते विना करौ । ]

என்று ப்ராஹ்ம புராணத்திலே ஸப்தமாத்யாயத்திலே இருக்கிறபடியே, கலியுகாதியிலே யிருந்த ஸ்வாமியானவர், தம்முடைய பக்தனை தொண்டைமான் சக்ரவர்த்திக்குச் சத்ரு ஸம்ஹாரார்த்தமாகச் சங்க சங்கரங்களைக் கொடுத்தாரென்று தொடங்கி, திருவாழி திருச்சங்கு இன்றியே இருக்கிருர் என்று, விசேஷித்துப் புராணர்த்தத்தை யருளிச்செய்ய, அதனுலும் ராஜாவுக்கு நிர்த்தாரணம் பிறவாம லிருக்க, அப்போது எம்பெருமானர் ப்ரத்யக்ஷமாகவே ஒரு நிச்சயம் பிறக்கும்படி ஒருவார்த்தை சொல்லுகிறேன் என்ருர். (அஃதாவது) "நான் ஸ்ரீ மஹாவிஷ்ணு வென்று சொன்னேன்; சைவர்கள் சுப்ரஹ்மண்யன் என்ருர்கள்; இந்த ஸம்சயம் போகைக்கு நான் விஷ்ணுவுக்கு அசாதாரணமான சங்க சக்ரங்களைப்பண்ணிக் கொண்டுவந்து, ஸ்வாமி சந்நிதியிலே வைக்கிறேன்; சைவர்கள் சுப்ரஹ்மண்யனுக்கு அசாதாரணமான பாசாங்குசங்களைப் பண்ணிவைக்கக் கடவர்கள்; எந்த ஆயுதங்களை எடுத்துத் தரித்தாரோ அந்த ஆயுத தரரான தேவராகக் கடவர்" என்ன,

ராஜாவுங் கேட்டு "அப்படியே செய்யுங்கோள்" என்ன, இரண்டு வாதிகளும் அந்தந்த ஆயுதங்களைப் பண்ணிக்கொண்டு ராஜாவையும் கூட்டிக்கொண்டு திருமலை ஏறி, ராத்ரி காலத்திலே, ஸ்வாமி கர்ப்பக்ருஹத்திலே வைத்து ராஜ முத்திரையும் பண்ணுவித்துக் காவலாயிருக்க, பின்பு ப்ராதஃகாலத்திலே கதவைத்திறந்து

பார்க்கும்போது ஸ்வாமியானவர் சங்கு சக்கரங்களைத் தரித்துக் கொண்டிருக்க, பின்பு ராஜாவுங்கண்டு [1] ஸந்துஷ்டனாய் எம்பெருமானார் திருவடிகளிலே [2] ப்ரதிபந்நனாய், இவர் சொற்படிக்கு அந்தச் சைவர்களை அவர்கள் சொன்ன [3] அஸத்யானுகுணமாக நிக்ரஹித்து, தேசத்துக்குப் புறம்பாகத் துரத்திவிட்டு, எம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயித்து க்ருதார்த்தனாயிருக்க,

பின்பு எம்பெருமானாரும், இந்தத் திருமலையிலே எழுந்தருளியிருக்குமவரே ஸ்ரீ வைகுண்டநாதனைப் ஸ்ரீ ய:பதியான ஸ்ரீ மஹாவிஷ்ணுவென்று சகல தேசங்களிலும் அறியும்படி நிர்வஹித்து, ஸ்ரீ வைகாநசாகமத்தாலே சம்ப்ரோக்ஷணமும் பண்ணுவித்து, நித்யாராதனமும் கண்டருளும்படி ஸங்கல்பித்து ஸ்ரீவிஷ்ணு தத்வப்ரதிஷ்டாப நாசார்யராய் இருக்கிறவர், ஸ்ரீய:பதிக்கு அசாதாரணமான திருவாழி திருச்சங்கு சாத்தி வைத்த மாத்ரமன்றிக்கே, பூர்வம் [4] நிசுளமான திவ்ய விமானத்திலே ஸ்ரீவைகாநச சாஸ்த்ர ப்ரகாரத்திலே நாலு திக்குகளிலும், வராக, நாரஸிம்ம, வைகுண்டநாத, ஸ்ரீ வேங்கடேச, தேவதைகளையும், எழியருளப் பண்ணுவித்தும், விஷ்ணு பரிகரங்களான சேஷ, [5] சேஷாசன, கருட, துவார பாலகர்களையும் தத்தத் ஸ்தானங்களிலே ப்ரதிஷ்டை பண்ணுவித்தும், சந்நிதியிலே திவ்யைச்வர்யம் உண்டாம்படிக்குத் திருமார்பு நாய்ச்சியாரான அலர்மேல் மங்கையை,

த்விபுஜா வ்யூஹலக்ஷ்மீः ஸ்யாத் பத்த பத்மாஸநப்ரியா ।
ஸ்ரீநிவாஸாங்கமத்யஸ்தா ஸுதராம் கேசவப்ரியா ॥

[ द्विभुजा व्यूहलक्ष्मीः स्यात् बद्धपद्मासनाप्रिया ।
श्रीनिवासाङ्कमध्यस्था सुतरां केशवप्रिया ॥ ]

என்று வராஹபுராண ஸித்தமான்படியே, [6] த்விபுஜையான வ்யூஹ லக்ஷ்மியாய்ச் சேவை ப்ரசாதிக்கும்படி ஸங்கல்பித்துச் சுக்லத்வாதசியும் சுக்ரவாரமும், உத்தர பல்குனீ நக்ஷத்ரமும் கூடின ரத்ன மஞ்சரிகா யோகத்திலே திருமார்பிலே சாத்துவித்தும், திருவேங்கடமுடையானுக்கு ஆதிகாலமாரப்ய நித்ய திருமஞ்சனம் கொண்டரு

1. மகிழ்ந்தவனாய். 2. பக்தியுடையவனாய். 3. பொய்க்குத் தக்கபடி. 4. உயர்ந்த. 5. சேனை முதலியார். 6. இரு கைகளை யுடையவளான.

ளும்படியைக் கேட்டருளி, இப்படி நடந்தால், திருமேனிக்கு உசிதோப சாரங்கள் பூர்ணமாக உண்டாக மாட்டா என்று,

கிஞ்ச லக்ஷ்ம்யாபிஷேகஸ்து வாஸரே பார்கவே ஹரே: ।
ஸாந்நித்யகாரீ ஸததம் ஸர்வஸம்பத்ப்ரதாயக: ॥

[ किञ्च लक्ष्म्याऽभिषेकस्तु वासरे भार्गवे हरेः ।
सान्निध्यकारी सततं सर्वसम्पत्प्रदायकः ॥ ]

என்று வைகாநஸ(ாகமத்தில்) சாஸ்த்ரத்தில் ஆனந்தஸம்ஹிதையிலே இருக்கிறபடியே சுக்ரவாரத்திலே அலர்மேல்மங்கை நாய்ச்சியார் திருமார்வினின்று மிழிந்தருளித் திருமஞ்சனங் கொண்டருளுகிறத்துக்கு முன்னாக ஸ்வாமியுந் திருமஞ்சனங் கொண்டருளும்படி கட்டளை பண்ணியும்,

அஷ்டமீந்துகலாகாரலலாடஸ்த்தோர்த்வ புண்ட்ரக: ।

[ अष्टमीन्दुकलाकारललाटस्थोर्ध्वपुण्ड्रकः । ]

என்று பாத்மபுராணீயமாய்,

நாஸிகாமூலமாரப்ய ரேகாத்விதயஸம்யுதம் ॥
தாரயேதூர்த்வ புண்ட்ரந்து ஹரே: பாலதலே சுபே ।

[ नासिकामूलमारभ्य रेखाद्वितयसंयुतम् ॥
धारयेदूर्ध्वपुण्ड्रन्तु हरेः फालतले शुभे । ]

என்கிறபடியே ஸ்ரீவைகாநஸ சாஸ்த்ர ஸித்தமாய் ஸ்ரீய:பதிக்கு அஸாதாரணமாய் [1]ரேகாத்விதய ரூப்மான திருமண்காப்பை [2]நாசாதி கேசாந்தமாகச் சாத்துவித்து, இப்படிக் கட்டளை பண்ணின மறுநாள் சுக்ரவாரமாய் அன்று திருமஞ்சனம் கொண்டருளும் போது ப்ரதமம் ஆகாசகங்கா தீர்த்தத்தாலே திருமஞ்சனம் பண்ண, அதனாலே, திருநெற்றியிலே சாத்தின ஊர்த்வ புண்ட்ர ரேகையானது அழிந்து, அந்த ரேகைக்கு மூலமான நாசாதியிலே சாத்தின [3] அர்த்த சந்த்ராக்ருதியான திருமண்காப்பு அழியாமலிருக்க, இந்தப் பிறைத் திருமண்காப்பை எம்பெருமானார் கடாக்ஷித்தருளி, பூர்வம், ஜகந்

1. இரு கோடுகளின் வடிவமான. 2. மூக்கு முதல் தலைவரை.
3. பாதி சந்திரன் வடிவமான.

மோஹினியான அவதார தசையிலே திருநெற்றியிலே இருந்த பிறைத் திருமண்காப்பு அங்கே யிருந்த தேவாசுரர்களுக்கு மோஹகமாய் இருந்தாற் போல, இந்த ஜகந்மோஹனமாய் இருக்கிற திவ்ய மங்கள விக்ரஹத்திலே, நாசாதியிலே காண்பிக்கிற பிறைத் திருமண்காப்பும், ஸ்வாமி திருமுக மண்டலத்துக்குச் சோபாவகமாய் ஆச்ரிதர்களுக்கு [1] த்ருஷ்டி சித்தாப ஹாரியாய் இருக்கையாலே, இந்தப்படியும் சில நாள் சாத்தியருள வேணுமென்று திருவுள்ளத்திலே எண்ணிக் கொண்டிருக்க, அப்படியே பகவதநுக்ரஹமும் அர்ச்சக முகத்தாலே உண்டாக, எம்பெருமானும், பின்பு திருவேங்கட முடையான் சுக்ர வாரத்திலே திருமஞ்சனங் கொண்டருளின பின்பு, கர்ப்பூர [2] ரேணுக்களாலே திருநெற்றியிலே ரேகாத்வய ரூபமாகச் சாத்தியருளிய திருமண் காப்பை மூன்று நாள் தரித்துக் கொண்டிருக்கும் படிக்கும்,

ஆதௌ க்ருதயுகே ஜம்பூத்வீபே பாரத வர்ஷகே |
கங்காயா தக்ஷிணே பாகே யோஜநாநாம் சதத்வயே ||
ஸப்தயோஜனமாத்ரேண பூர்வாம்போதேஸ்து பச்சிமே |
மாஸே பாத்ரபதே விஷ்ணுதித்யாம் விஷ்ணுஸமந்விதே ||
ஸித்தயோகே ஸோமவாரே கிரௌ நாராயணாஹ்வயே |
ஸ்வாமிபுஷ்கரிணீ தீரே பச்சிமே பூத்யபச்சிமே ||
ப்ருந்தாரகாணாம் ப்ருந்தைஸ்து ப்ரார்த்திதோ லோகரக்ஷகஃ |
ஆவிர்பபூவ பகவாந் ஸ்ரீநிவாஸஃ பரஃ புமாந் ||

[ आदौ कृतयुगे जम्बूद्वीपे भारतवर्षके ।
गङ्गाया दक्षिणे भागे योजनानां शतद्वये ॥
सप्तयोजनमात्रेण पूर्वाम्भोधेस्तु पश्चिमे ।
मासे भाद्रपदे विष्णुतिथ्यां विष्णुसमन्विते ॥
सिद्धयोगे सोमवारे गिरौ नारायणाह्वये ।
स्वामिपुष्करिणीतीरे पश्चिमे भूत्यपश्चिमे ॥
बृन्दारकाणां बृन्दैस्तु प्रार्थितो लोकरक्षकः।
आविर्बभूव भगवान् श्रीनिवासः परः पुमान् ॥ ]

---

1. கண்ணையும் மனதையும் கவரத்தக்கதாய். 2. பொடிகளாலே.

என்று ஸ்ரீபாத்ம புராணத்திலே 33-வது அத்யாயாவஸாநஸ்தலத்திலே இருக்கிறபடியே, திருவேங்கடமுடையானுக்குத் திருவவதார [1]வாஸரமான சோமவாரத்திலே தாம் எண்ணினபடியே பகவதநுக்ரஹமுண்டான படியாலே நாசாதியிலே பிறைத் திருமண்காப்பாகச் சாத்திக்கொள்ளும்படிக்கும், திரு நெற்றியிலே ரேகாத்வய ரூபமாக முத்துத் திருமண்காப்பும், திருக்கண் மலருக்குச் சீதள த்ரவ்ய விசேஷத்தாலே அஞ்சனக் காப்பும் சாத்திக்கொண்டு, சேஷதினமெல்லாம், எல்லார்க்கும் ஸேவை ப்ரசாதித்தருளும்படிக்கும், சூரனுயிருக்குமவன், தன்னுடைய சௌர்ய சாதனமான ஆயுதத்துக்கு ப்ரதமம் சந்தன [2]குசுமங்களைத் தரிப்பித்த பின்பு தான் தரிக்குமாப் போலே, திருவேங்கட முடையானும் நித்யம் த்ரிசந்த்யையிலும் திருமாலை சாத்தியருளும்போது தம்முடைய விஜய பரம்பரைகளுக்கு ப்ரதான சாதனமான திருவாழி திருச்சங்கு, திருப்பொற் றுழ்வார்களுக்குத் திருமாலை சாத்திய பின்பு, திருமார்பு நாய்ச்சியார், [3]திருவபிஷேகம் முதலான திவ்யாவயவங்களுக்கும் திருமாலை சாத்தும்படிக்கும், சுக்ரவாரந் தோறும், திருவேங்கட முடையான் திருமஞ்சனம் கொண்டருளும் போது, "இறையு மகலகில்லேன்" என்று [4]நித்யாநபாயினியாய் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையான அலர்மேல்மங்கை நாய்ச்சியார் திருமார்பினின்றும் இறங்கியருள, தத்கால மாத்ர [5]விச்லேஷத்தைச் சகிக்க மாட்டாமலிருக்கும் ப்ரகிருதியை எம்பெருமானர் சிந்தித்து, தத் அபராவதாரமாய், தத் ப்ராண சகியாய்ப் பூமி யம்சையாய்த் திருவவதரித்தருளின ஆழ்வார் திருமகளானவர் திருத்துழாய் பரிமளத்தோடே முளைக்குமாப் போலே பகவத் ப்ரேமத்தோடே அவதரித்தருளினது தொடங்கி எம்பெருமானை அநுபவிக்கைக்கு ஆசைப்பட்டு, அது கிடையாமையாலே, அவனைப் பெறுகைக்கு உபாய விசேஷங்களிலே கைவைத்தபடியையும், அவன் பக்கல் தூதுவிட்ட படியையும், அவனுடைய ஸ்திதி, கமந, சயநாதிகளுக்கு யோக்யமான திருப்பதிகளை அநுபவித்த படியையும், இப்படி அநேக விரகதசையை அநுசந்தித்த படியையும், ப்ரகாசிப்பிக்கிற நாய்ச்சியார் திருமொழியைத் திருவேங்கட முடையான் புருஷ ஸூக்தாத்யநேக ஸூக்த பாராயணத்துடனே திருமஞ்சனம்

---

1. தினமான. 2. பூக்களை. 3. திருமுடி.
4. எப்போதும் பிரியாதவளாய். 5. பிரிவை.

கொண்டருளினவனந்தரம், அலர்மேல்மங்கை நாய்ச்சியார் திருமஞ்சனம் கொண்டருளும்போது (இந்தப் பிரபந்தத்தை) அநுசந்திக்கும் படிக்கும்,

திருமலை ஸம்ஸ்தானமானது காடும் மலையுமாய்த் திவ்ய நகரத்தை விஸ்தாரமாக்கிக் கட்டுகைக்கு யோக்ய மல்லாமையினாலே, பூர்வ காலத்திலே செண்டிவாளனென்பாளொரு பக்தனானவன் கோயிலுக்கு மேற்காய்த் திருமதிளோரமாய் ஒருவீதியைக் கட்டுவித்து, அதிலே, கைங்கர்யபரர் மாத்திரம் நித்ய வாசமாய் இருக்கும்படி பண்ணினான். அந்தக் காலத்திலே தேசாதிபதிகளான விஷ்ணு பக்தர்கள், பெருமாள் உத்ஸவம் கொண்டருளும்படிக்குத் திருவீதி கட்டுகைக்கு சமதடமில்லாமையாலே,

தேவஸ்தாநஸ்ய பரித: வீதிகாகரணாக்ஷமே।
ஸமீபே வா புரீம் க்ருத்வா தத்ர தேவோத்ஸவம் சரேத் ||

[ देवस्थानस्य परितः वीथिकाकरणाक्षमे ।
समीपे वा पुरीं कृत्वा तत्र देवोत्सवं चरेत् ॥ ]

என்று வைஷ்ணவாகமங்களிலே இருந்தபடியே வேங்கடத் துறைவார் ப்ரமோத்ஸவ ஆரம்பதினத்திலே திருக்கொடியாழ்வான் ஏறியருளினபின்பு, திருமலையிழிந்து மஹாநகரமாய் ராஜாஸ்தானமான திருச்சுகனூரிலே எழுந்தருளியிருந்து நித்யமாக [1]ப்ராதஸ்ஸாயங்களிலே வாகனத்தோடே திருவீதியெழுந்தருளி ஸமஸ்தோபசாரங்களும் கண்டருளி உத்ஸவ ஸேவாபரரையும் [2]உஜ்ஜீவிப்பித்து ஒன்பதாந் திருநாளிலே சாயங்காலத்திலே திருமலை யேறியருளித் [3]துவஜாவரோஹணம் கொண்டருளும்படி பண்ணின கட்டளையை எம்பெருமானார் கேட்டருளிச் சிந்தித்து, இந்தத் திவ்ய க்ஷேத்திரத்திலேயே தானே ப்ரதிஸம்வத்ஸரம் ஸ்வாமி உத்ஸவம் கொண்டருள வேணுமென்று திருவுள்ளமாய்த் திருக்கோனேரிக்குக் கீழ்க்கரையாகத் தக்ஷிணோத்தரமாக ஒரு குரோசமாத்ரம் ஒரு திருவீதியையும் கல்பித்து, அதிலே சில கைங்கர்ய பரரையும் நித்யவாசமாகவிருக்கும்படி கட்டளைபண்ணி, உத்ஸவ காலங்கள் வந்தவாறே அந்தத் திருவீதியிலே [4]உத்தராபி முகமாய்ப் புறப்பட்டருளித்

1. காலைமாலைகளிலே. 2. கடைத்தேறச் செய்து.
3. கொடியிறக்குதல். 4. வடக்கு முகமாய்.

திரும்பி, தக்ஷிண (விஜய)மாய் எழுந்தருளும்படி கட்டளை பண்ணி வைத்தும்,

வேங்கடத்துறைவார் திருவவதாரதினத்திலே வைபவத்தாலே திவ்யநகராபிவிருத்திக்குச் சாதகர் அன்று என்கிற ஐதிஹ்யமானது ஸ்தலத்திலே ப்ரஸித்தமாய் இருந்தபடியாலே, இனி, திவ்யநகராபிவிருத்திக்கும், திருவேங்கடமுடையான் கனகலதாயோகத்திலே திருவவதரித்தாலும் சந்நிதியிலே திவ்யைச்வர்யம் [1] உத்தரோத்தரமபிவ்ருத்தமாம்படிக்கும், அப்போது உத்ஸவமூர்த்தியாய்த் திருவாராதனம் கொண்டருளுகிற வேங்கடத்துறைவாரைக் கௌதுகபேரமாகவும், கௌதுகமான மலைகுனியநின்ற பெருமாளை உத்ஸவமூர்த்தியாய்த் திருவாராதனம் கொண்டருளும்படிக்கும், யந்த்ரோத்தாரண பூர்வகமாக ஆவாஹனம் பண்ணித் திருவாராதனம் கொண்டருளும் படிக்கும் சங்கல்பித்தும்,

செங்கனிவாயன் திருவம்சத்திலே பிறந்த பரமபாகவதர்கள் திருக்கைகளாலே, திருவேங்கடமுடையான் நித்யதிருவாராதனம் கொண்டருளும்படிக்கும்,

> கோக்ஷீரைः ஹேமகும்பஸ்தைः வல்மீக விவரோதரம்।
> அநுஸ்யூதாச்சிந்நதாரை ரபிஷேகம் ப்ரசக்ரமே ॥
> க்ரியமாணபிஷேகேண வல்மீகவிவராந்தராத் ।
> ஆவிர்பபூவ பகவாந் வாராஹவபுரீச்வரः ॥
>
> [ गोक्षीरैः हेमकुम्भस्थैः वल्मीकविवरोदरम् ।
> अनुस्यूताच्छिन्नधारै रभिषेकं प्रचक्रमे ॥
> क्रियमाणाभिषेकेण वल्मीकविवरान्तरात् ।
> आविर्बभूव भगवान् वाराहवपुरीश्वरः ॥ ]

என்கிறபடியே பூகோளவராஹத்திலே ஷஷ்டாத்யாயத்திலேயும் வராஹ பத்ம புராணங்களிலும் ப்ரஸித்தமாய் [2] ஸ்வயம் வ்யக்தமாய் ஆவிர்ப்பவித்த ஞானப்பிரானும், திருவேங்கடமுடையானுக்கு முந்தின கல்பத்திலே திருவவதரித்ததாலும்,

> ரத்யாபல்யந்தரே தேவம் பலிஹோமவிவர்ஜிதம் ।
> ஆராதயே தப்ரதாநம் ந குர்யா துத்ஸவாதிகம் ॥

---

1. மேன்மேலும் வளரும்படிக்கும். 2. தானே தோன்றிய.

[ रथ्याबल्यन्तरे देवं बलिहोमविवर्जितम् ।
आराधये दप्रधानं न कुर्या दुत्सवादिकम् ॥ ]

என்று ஸ்ரீ வைகாநஸசாஸ்த்ரத்திலே ஆநந்தஸம்ஹிதையிலே யிருக்கையாலே ஒரு க்ஷேத்ரத்திலே இரண்டு விக்ரஹங்களுக்கு ஸமப்ராதாந்யேந பூஜா மகோத்ஸவாதிகள் நிஷித்தமென்று அந்த ஞானப்பிரானுக்கு பலிபீடார்ச்சந நித்யஹோம மகோத்ஸவாதிகள் ஒன்றுமின்றிக்கே,

மத்ஸ்தாபிதவராஹஸ்ய பூர்வம் ஸ்யாத் பூஜநம் ஹரே!
தர்சனம் ஸ்னானதானாத்யை ரித்யுக்தோऽத ஸ்ரீய: பதி: ।
ததாஸ்த்விதி வரம் தத்வா காரயாமாஸ தத்ததா ॥

[ मत्स्थापितवराहस्य पूर्वं स्यात् पूजनं हरे!
दर्शनं स्नानदानाद्यै रित्युक्तोऽथ श्रियः पतिः ।
तथास्त्विति वरं दत्त्वा कारयामास तत्तथा ॥ ]

என்று ப்ராஹ்ம புராணத்திலே அஷ்டமாத்யாயத்தி லிருந்தபடியே திருவேங்கடமுடையானுக்கு முன்பாகத் த்ரிஸந்த்யையிலும் திருவாராதனமும், அமுது செய்தருளுகையும் நடக்கும்படிக்கும், அவ்விடத்திலே உத்ஸவமூர்த்தியையும் ஏறியருளப்பண்ணுவித்துத் திருவாராதனம் கொண்டருளும்படிக்கும், அத்யயநோத்ஸவம் மாத்ரம் ஒரு நாளாகக் கொண்டருளும்படிக்கும்,

ஸ்ரீவேங்கட வராஹாய ஸ்வாமிபுஷ்கரிணீ தடே ।
ச்ரவணர்க்ஷே துலாமாஸே ப்ராதுர்பூதாத்மநே நம: ॥

[ श्रीवेङ्कटवराहाय स्वामिपुष्करिणीतटे ।
श्रवणर्क्षे तुलामासे प्रादुर्भूतात्मने नमः ॥ ]

என்கிறபடியே, அவர் திருநக்ஷத்ரமான ஐப்பசி மாதத்தில் ச்ரவண நக்ஷத்திரத்தில் ஸ்ரீவராக ஜயந்தியும் விசேஷோத்ஸவமாகக் கொண்டருளும்படிக்கும்,

நித்யம் பிலேந சாகத்ய தேவம் நத்வா ந்ருபோத்தம: ।
ராஜ்யம் சகார தர்மேண புஞ்ஜாநோ போகமுத்தமம் ॥

[ नित्यं बिलेन चागत्य देवं नत्वा नृपोत्तमः ।
राज्यञ्चकार धर्मेण भुञ्जानो भोगमुत्तमम् ॥ ]

என்று பூகோளவராஹத்திலே தசமாத்யாயத்திலே சொல்லுகிற படியே "தொண்டைமான் சக்ரவர்த்தியானவன் கலியுகாதியிலே திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பூர்ணபக்திமானாய் அவருடைய அனுக்ரஹத்தாலே ராஜ்யத்தைத் தர்மமாகப் பரிபாலனம் பண்ணிக் கொண்டு ஸமஸ்தபோகங்களையும் புஜித்துக்கொண்டு, நித்யமாகத் தன் அரண்மனைக்கும் திருமலைக்குமாக வரும்படி ஸ்வாமியானவர் ஒரு பிலத்தைக்காட்ட, அதில் ப்ரவேசித்து ஸந்நிதியிலே போய்ப் பெருமாளைச் சேவித்து வாராநிற்க, இப்படியிருக்கிற நாளிலே,

ஸ்திதே கதாசித் க்ஷிதிபே ஸ்ரீநிவாஸஸ்ய ஸந்நிதௌ ।
சத்ரவச்ச பலோத்ரிக்தா ருருது ஸ்தஸ்ய வை புரீம் ॥

[ स्थिते कदाचित् क्षितिपे श्रीनिवासस्य सन्निधौ ।
शत्रवश्च बलोद्रिक्ता रुरुधु स्तस्य वै पुरीम् ॥ ]

என்று ப்ராஹ்ம புராணத்திலே சொல்லுகிறபடியே ஸாமந்தராஜாக்களிவனை ஜயிக்கும்படி வந்து, பட்டணத்தைச் சூழ்ந்துகொள்ள, அப்போது சக்ரவர்த்தியும் அவர்களைத் துரத்திக்கொண்டுபோய் யுத்தம் பண்ண, இப்படிப் பரஸ்பரம் யுத்தம் நடக்கச்செய்தே சக்ரவர்த்திக்குப் பலம் [1] க்ஷயித்துப் போய், அத்தாலே [2] பராஜயப்பட்டு ஸ்வதேசத்திலே ஓடிவந்து திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பக்தியாலே,

ஸ்ரீந்ருஸிம்ஹம் நமஸ்க்ருத்ய புநః ப்ராப்ய பிலோத்தமம் ।
ஸ்ரீநிவாஸம் யயௌ த்ரஷ்டும் ஸ்ரீபூமிஸஹிதம் ந்ருபః ॥
தம் த்ருஷ்ட்வா ஸஹஸாऽऽயாந்தம் ஜாஹ்நவீ ஹாதே தராரமே ।
ப்ரணமந்த மவோசத்தம் கிமகாலே ந்ருபாகதః ॥

[ श्रीनृसिंहं नमस्कृत्य पुनः प्राप्य बिलोत्तमम् ।
श्रीनिवासं ययौ द्रष्टुं श्रीभूमिसहितं नृपः ॥

1. அழிந்து போய். 2. தோல்வி யடைந்து.

तं दृष्ट्वा सहसाऽऽयान्तं जुगूहाते धरारमे ।
प्रणमन्त मवोचत्तं किमकाले नृपागतः ॥ ]

என்று பூகோள வராஹத்திலே தசமாத்யாயத்திலே யிருக்கிற படியே, பிலத்வாரத்தாலே பிரவேசித்து, அகாலத்திலே சந்நிதியிலே வந்து நிற்க அப்போது அந்தரங்க தசையிலே சேவித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீ பூமிகள் ஆகிய இரண்டு தேவிகளும் மறைந்து, அந்தஃபுரத்திலே பரபுருஷன் வந்தானென்று சங்கோசப்பட்டு ஸ்ரீ தேவியானவர் தமக்கு நித்யவாசஸ்தலமான திருவேங்கடமுடையான் திருமார்பிலே ஏறியருள, பூதேவியானவர் வெளிப்பட்டு, பூர்வ காலத்திலே ரங்கதாஸன் திருநந்தவன கைங்கர்யார்த்தமாக வெட்டினதாய், ஸமீபஸ்தமான கிணற்றிலே குதித்தாள்" என்னும் கதையானது ஸ்தலத்திலே பண்டித பாமர சாதாரண்யேந அவிகீதமாக உண்டாகையாலும், அந்தப் பூமிப்பிராட்டியை அர்ச்சாரூபமாக ஏறியருளப் பண்ணுவித்து, அவர் சமீபத்திலே ஒரு தீர்த்த நயினாரையுங்கூட எழுந்தருளப்பண்ணி, அந்தக் கிணற்றிலே சேர்த்தியாக எழுந்தருளப் பண்ணுவித்து, அவர்களுக்கு நித்யமாகத் தளிகைகள் அமுது செய்யப் பண்ணும்படியும்,

" ஆளவந்தார் ஒரு காலவிசேஷத்திலே திருவேங்கட யாத்ரை செய்தருளி, மங்களாசாஸனம் செய்தருளின போது ஒருநாள் ப்ராத : காலத்திலே அழகப் பிரானார் [1]ஸ்நபநத்திற்கு உதவும்படி திருமலைநம்பி பாபவிநாசத்திலேயிருந்து திருமஞ்சனம் கொண்டு வருகைக்கு வர்ஷோபாதியாலே கூடாமலிருக்க, அப்போது ஆளவந்தார் தாமே ரங்கதாஸன் கைங்கர்யமான கிணற்றில் நின்றும் திருமஞ்சனம் எடுத்துச் சமர்ப்பித்துத் திருமஞ்சனம் கொண்டருளப் பண்ணி, அந்தக் கிணற்றுக்கு 'அழகப் பிரானார்' என்று திருநாமம் சாத்தினார் " என்னும் கதை ஸ்தலத்திலே பிரசித்தமாய் இருக்கையாலே, இத்தை எம்பெருமானார் கேட்டருளி, நம்முடையார் எல்லோரும் அந்தக் கிணற்றை அழகப்பிரானார் என்றே சொல்லக்கடவர்கள் என்று கட்டளைபண்ணியும்,

வநமத்யே தரோர்மூலே ஸ்வாமிபுஷ்கரிணீ தடே ।
திஷ்டந்தம் புண்டரீகாக்ஷம் ஸ்ரீபூமிஸஹிதம் ஹரிம் ॥

1. திருமஞ்சனத்திற்கு.

சிஞ்சாவ்ருக்ஷஸ்ய மூலே து ப்ராதுராஸீஜ்ஜநார்தந: ।
திந்த்ரிணீ வ்ருக்ஷமூலஸ்தம் வல்மீகஸ்தம் பரம் ஹரிம் ।

[ वनमध्ये तरोर्मूले स्वामिपुष्करिणीतटे ।
तिष्ठन्तं पुण्डरीकाक्षं श्रीभूमिसहितं हरिम् ॥

चिञ्चावृक्षस्य मूले तु प्रादुरासीज्जनार्दनः ।
तिन्त्रिणीवृक्षमूलस्थं वल्मीकस्थं परं हरिम् ॥ ]

என்று பூகோள வராஹத்திலும், வாமநத்திலும் இருந்தபடியே ஒரு கல்பவிசேஷத்திலே திருவேங்கடமுடையான்,

உந்நித்ர திந்த்ரிணீசத்வ மேஷ்யத்யய மஹோரக: ।

[ उन्निद्रतिन्त्रिणीशत्व मेष्यत्ययमहोरगः । ]

என்று புராணப் பிரசித்தியின்படியே திருவனந்தாழ்வா னம்சமான திருப்புளியாழ்வார் கீழாக ஆவிர்ப்பவித்தருள, இப்படிச் சிலநாள் சென்றபின்பு, ரங்கதாசன் என்பாரொரு பரமபாகவதன் தக்ஷிண தேசத்திலிருந்து திருமலையிலேவந்து நித்யவாசம் பண்ணிக்கொண்டு எம்பெருமான் திருமேனிப் பரிவாலே ஒரு திருக்கோயில் கட்ட வேண்டுமென் றெண்ணிச் சுவாமியின் பின்னே யிருக்கிற [1] திந்த்ரிணீ வ்ருக்ஷமானது, உறங்காப் புளியாய், ஒருகொம்பு தளிரும், ஒருகொம்பு காயும், ஒருகொம்பு பூவும், ஒருகொம்பு இலையும், ஒரு கொம்பு பழமுமாய், இப்படி விசித்ராகாரமாய்த் திருமேனிப் பரிவாலே குடை பிடித்தாப்போலே, தழைந்துகொண் டிருக்கிறதைக் கண்டு, என்செய்வோமென்று விசாரமிட்டிருக்க, அன்று ராத்ரி, அந்தத் திந்த்ரிணீ வ்ருக்ஷமானது அவ்விடம் விட்டு ஸ்வாமிக்கு ஈசான்யபாகத்திலே [2] ஒரு சரபாததூர விப்ரக்ருஷ்டமாய், எழுந்தருளி யிருக்க, பின்பு ரங்கதாசனும் கண்டு ஆச்சரியப்பட்டு, இந்த வ்ருக்ஷம் திருவனந்தாழ்வான் அம்சமென்று ப்ரதிபத்தி பண்ணிக் கொண்டு,

ஆகாசஸ்தம் ததா த்ருஷ்ட்வா பீதநீலாக்ருதிம் சுபம் ।
பார்ச்வஸ்த சங்கசக்ராப்யாம் கதாஸிப்பாம் விராஜிதம் ॥

1. புளிய மரமானது. 2. ஓர் அம்பு செல்லும் தூரமாக.

தேவஸ்ய பரிதோ பூமௌ சிலாகுட்யம் ததாகரோத் ।
வாஸஸ்தாநம் சகாராசு தாருபி: ஸுமநோஹரை: ||

[ आकाशस्थं तदा दृष्ट्वा पीतनीलाकृतिं शुभम् ।
पार्श्वस्थशङ्खचक्राभ्यां गदासिभ्यां विराजितम् ।।
देवस्य परितो भूमौ शिलाकुड्यं तदाऽकरोत् ।
वासस्थानं चकाराशु दारुभिः सुमनोहरैः ।। ]

என்று பூகோளவராஹத்தி லிருந்தபடியே ஒரு திருக்கோயில் கட்டி ஞனென்று புராணத்திலே ப்ரசித்தி யுண்டானபடியாலும், ஒரொரு காலங்களிலே திருவேங்கடமுடையானும், அந்தத் திருப்புளியாழ்வார்கீழாக ஆஸ்தானமாய் இருந்து, ப்ரஹ்மாதி தேவதைகளுக்குச் ஸேவை ப்ரஸாதித்தருளினர் என்று ஸ்தலத்திலே சிஷ்டகோஷ்டியிலே அவிகீதமான ஐதிஹ்யம் நடக்கையாய், இப்போது எல்லார்க்கும் ப்ரத்யக்ஷமாகவே வ்ருக்ஷச்சாயையானது வ்ருக்ஷமுள்ள விஸ்தாரம் மாத்திரம் காண்பித்துக்கொண்டு, சூர்யகதியாலேகிழக்கு மேற்காகப் போகாமையாலும், அந்த வ்ருக்ஷம் திருவனந்தாழ்வான் அம்சமென்று நிச்சயிக்கையாலும், அலர்மேல்மங்கை நாய்ச்சியார் தாமே, அத்தாணிப்புளிக்கு நைருதி திக்பாகத்திலே ஸ்வாமிக்கு வலப்பார்சுவத்திலே பின்பக்கத்தில் அடைந்துகொண்டு நிற்கும் ஒருசம்பக வ்ருக்ஷத்தின் கீழாய் இருந்து ப்ரஹ்மாதி தேவதைகளுக்குச் சேவை ப்ரசாதித்தாரென்னும் ஒரு ஐதிஹ்யம் உண்டாகையாலும், அந்த வ்ருக்ஷமும் சர்வ காலத்திலும் புஷ்பிதமாயும் பல்லவிதமாயும் இருக்கையாலும், இப்படி இதர வ்ருக்ஷ விலக்ஷணமான இரண்டு விருக்ஷத்தையும் ரங்கதாசன் திருநந்தவன கைங்கர்யம் பண்ணும்போது,

தேவாஜ்ஞயா வர்ஜயித்வா தாவுபௌ தேவஸேவிதௌ ।
திந்த்ரிணீம் சம்பகஞ் சோபௌ பாலயேத்தௌ நகோத்தமௌ ||

[ देवाज्ञया वर्जयित्वा तावुभौ देवसेवितौ ।
तिन्त्रिणीं चम्पकञ्चोभौ पालयेचौ नगोत्तमौ ।। ]

என்றும்,

1. தளிர்களை யுடையதாயும்.

மம சாஸ்தாநிகாம் சிஞ்சாம் லக்ஷ்ம்யாஸ்தாநஞ்ச சம்பகம் ।
[ मम चास्थानिकां चिञ्चां लक्ष्म्यास्थानञ्च चम्पकम् । ]

என்றும் பூகோளவராஹத்திலும், ப்ராஹ்ம புராணத்திலும் இருந்த படியே திருவேங்கடமுடையான் தங்களிருவர்க்கும் ஆஸ்தான ஸ்தலமாயிருக்கிற இரண்டையும் [1]சேதிக்க வேண்டாவென்று நியமிக்கையாலும்,

ஆஸ்தாந சிஞ்சா தேவஸ்ய ரமாயாச்சம்பகம் தரும் ।
[ आस्थानचिञ्चा देवस्य रमायाश्चम्पकं तरुम् । ]

என்று பூகோளவராஹத்திலே ப்ரசித்தமான இரண்டு விருக்ஷத்துக்கும் நித்யாராதனம் நடக்கும்படிக்கும், பூர்வ காலத்திலே 'வீரநரஸிம்ஹ தேவ'னென்பானொரு கஜபதியானவன் தீர்த்தயாத்ராபரனாய் சேதுதரிசனம் பண்ணவேணுமென்று தக்ஷிணதேசத்திலே புறப்பட்டு வாராநிற்க, மார்க்கமத்யத்திலே ஸ்ரீ வேங்கடாசல வைபவத்தைக் கேட்டுத் திருமலையேறி ஸ்வாமி புஷ்கரிணீ ஸ்நாநத்தைப் பண்ணி ஞானப்பிரானையும் வேங்கடத்தரியையும் ஸேவித்துப் பின்பு, ஸேவாக்ரமத்தின்படியே திருவேங்கடமுடையானையும் ஸேவித்து க்ஷேத்ரோபவாஸம் முதலான நியமங்களோடே இருந்து, [2]"கலௌ வேங்கடநாயக:" என்கிற பிரபாவத்தைக் கேட்டு, ஸ்வாமி திருவடிகளில் பக்தி பரவசனாய், ஏதாகிலும் ஸ்வாமி சந்நிதியிலே ஒரு கைங்கர்யம் பண்ணவேண்டுமென் றெண்ணி, வித்வத் ஜனங்களைக் கேட்க,

பூஷணானாம் கிரீடச்ச வாஹநாநாம் பரோ ரத: ।
கோபுரஞ்ச விமாநாநாம் ரத்நாநாம் வஜ்ரமுத்தமம் ।
வர்ணாநாம் ப்ராஹ்மண: ச்ரேஷ்ட: ஆச்ரமாணாம் து வை யதீ ॥

[ भूषणानां किरीटश्च वाहनानां परो रथः ।
गोपुरञ्च विमानानां रत्नानां वज्रमुत्तमम् ।
वर्णानां ब्राह्मणः श्रेष्ठः आश्रमाणां तु वै यती ॥

1. வெட்ட. 2. கலியுகத்தில் திருவேங்கடமுடையான் சிறந்தவன்.

என்று ஆகம சாஸ்திரங்களிலே யிருக்கிறதே; இதிலே உன் மன திற்கு ருசித்ததைப்பண்ணாய் என்ன, அவனும் கேட்டு ஸந்துஷ்ட ளுய் ஒரு திருக்கோபுரத்தைக் கட்டவேண்டுமென்று நிச்சயித்து, அதற்குச் சாதகர்களான மனுஷ்யர்களையும் த்ரவ்யங்களையும் கொடுத்து நிர்ணயம்பண்ணி, உத்தியோகம் பண்ணுவித்து, திருமலை யிழிந்து, காசி, காஞ்சி யென்னும் திவ்ய நகரம், ஸ்ரீரங்காதி க்ஷேத் திரங்கள் முதலான புண்ணிய க்ஷேத்திரங்களிலே போய் ஸேவித்து, சேது தரிசனம் பண்ணி, மீளவும் திருமலையேறி ஸ்வாமியைச் சேவித்துக் கட்டுகிறதிருக்கோபுரத்தையுங் கண்டு ஸந்துஷ்டனாய்த் தானதர்மாதிகளையும் பண்ணிப் பூர்ண மனோரதனாய் இருக்க, அன்று ராத்திரி, அந்தக் கஜபதி ஸ்வப்பநத்திலே ஒரு சர்ப்பம் முன்னேவந்து நின்று, "வாராய், கஜபதியே, இந்தத் திருமலை என் சரீரமாய் இருக்கும்; இதிலே நீ கோபுரத்தைக் கட்டுவிக்கையாலே, என் தேகத்திலே, அதிக பாரம் உண்டாய்ப் பீடையும் அதிகமாய் இருக்கிறது; ஆகையாலே, என் ஸ்வாமியானவன் ஸந்நிதியிலே போனால் என் உடம்பில் பீடை போம்" என்று சொல்லிக் கோயி லிலே புகுந்து ஸந்நிதியிலே போய்த் திருவேங்கடமுடையான் வைகுண்ட ஹஸ்தத்திலே சுற்றிக்கொண்டிருக்க, ராஜாவும் இப்படி ஸ்வப்பநத்தைக் கண்டு, [1] ப்ரபுத்தனாய், பீதனாய், வித்வத் ஜனங்க ளோடே சொல்லி 'இந்த ஸ்வப்பநத்துக்குத் தாத்பரியம் ஏதெ'ன்று கேட்க, அவர்களும், இந்தப் பர்வதம் சேஷாசல மென்று வராஹ வாமனாதி புராணங்களிலே ரிஷிகள் சொன்னார்களே; இப்படிச் சேஷாகாரமான இந்தப் பர்வதத்தை வெட்டவும் இதன் மேலே கற்களைக் குவிக்கவுமாகிற இந்த வ்யாபாரமானது சேஷனுக்குப் [2] பீடாவஹமாய்ப் பாரமாய் இருக்குமென்று சொல்ல, பின்பு ராஜாவுங் கேட்டுப் பயப்பட்டுக் கோபுரத்தையும் அப்பால் கட்ட வேண்டாவென்று [3] மொண்ணையாய் நிறுத்தி, திருவேங்கடமுடை யானுக்கு இவ்வளவு மாத்திரம் கைங்கர்யமே திருவுள்ளத்துக்கு உகப்பாயிருந்ததென்று ஸந்துஷ்டனாய், சேஷனிடத்திலே அபசாரப் பட்டோமே என்று பயப்பட்டு, இதற்காகத் திருவேங்கடமுடை யானுக்கு ஒரு நாகாபரணத்தைப் பண்ணுவித்துச் சந்நிதியிலே ஸமர்ப் பித்து, 'இத்தைச் சாத்தியருள வேண்டு'மென்ற பின்பு, ஸந்நிதிப்

1. விழித்தெழுந்த, அச்சமுடையவனாய். 2. நோயுண்டாக்குவதாய், 3. மொட்டையாய்.

பேரானவர்கள் எங்கே சாத்துவோமென்று சந்தேகிக்க, அப்போது திருவேங்கடமுடையானும் ஒருபக்தன்மேலே ஆவேசித்துப் "பூர்வ காலத்திலே சேஷனுக்கும் வாயுவுக்கும் ஸம்வாதம் உண்டான போது,

ஏவம் வ்ருத்தே விவாதே து தத்ராகாத்தரிரீச்வர: ।
கிமேததிதி தௌ ப்ருஷ்ட்வா சேஷேணோக்தோऽதிவிஸ்தராத் ॥
ப்ராஹோத்வ்ருத்தம் ததா சேஷம் பாவிகார்யம் ஸ சிந்தயன் ॥

[ एवं वृत्ते विवादे तु तत्रागाद्धरिरीश्वरः ।
किमेतदिति तौ पृष्ट्वा शेषेणोक्तोऽतिविस्तरात् ।
प्राहोद्वृत्तं तदा शेषं भाविकार्यं स चिन्तयन् ॥ ]

என்ற ப்ராஹ்ம புராணத்தின் படியே, நாம் வாயு பக்ஷபாதியாயிருக்க, அத்தாலே சேஷனுக்கும் துக்கமுண்டாய்,

சேஷோ கதமத: பச்சாத் தஸ்மிந்நேவ நகோத்தமே ।
வாயவ்யே ஸ்வாமிஸரஸ: நாகதீர்தே மநோரமே ॥
உத்தரே சிகரே புண்யே ஸாந்நித்யம் ஜகதீபதே: ।
தபஸ்தேபே மஹாகோரம் திவ்யம் வர்ஷஸஹஸ்ரகம் ॥

[ शेषो गतमदः पश्चात्तस्मिन्नेव नगोत्तमे ।
वायव्ये स्वामिसरसः नागतीर्थे मनोरमे ॥
उत्तरे शिखरे पुण्ये सान्निध्यं जगतीपतेः ।
तपस्तेपे महाघोरं दिव्यं वर्षसहस्रकम् ॥ ]

என்கிறபடியே இங்கே வந்து நாகதீர்த்தக் கரையிலே யிருந்து நம்மைக் குறித்துத் தபஸ்ஸைப் பண்ணுகிறார்; அவர் பக்கல் நமக்கு இப்போது பூர்ண ஸ்நேஹம் உண்டானபடியாலே லோகத்திலே பிதாவானவன் தன் புத்ரனைக் கையாலெடுத்து [1] உபலாலிக்குமாப் போலே, நாமும் கையிலே தரிக்கிறோம்" என்ன, பின்பு ஸந்நிதிப் பேர் எல்லாரும் ஸந்தோஷப்பட்டு வைகுண்ட ஹஸ்தத்திலே சாத்தினார்கள்; அன்று தொடங்கி எம்பெருமானார் மங்களசாஸன பர்யந்தம் ஒரு திருக்கையிலே தானே நாகாபரணம் இருக்க, பின்பு

1. சீராட்டுவது போல,

இத்தை எம்பெருமானார், ராஜா கண்ட ஸ்வப்நத்தின்படியே கடாக்ஷித்தருளி, மற்றைத் திருக்கைக்கும் வேணுமென்று ஒரு நாகாபரணத்தைப் பண்ணுவித்து, சுற்றிக் கொண்டிருக்கிறதாய்[1] அங்கதங்களோடே ஒன்றாக்கி, ஸேவாபரரான ஆச்ரித ஜனங்களுக்கு மனோ நயனங்களுக்குப் போக்யமாம்படி சாத்துவித்தும்,

புண்யே ஸ்வாமிஸரஸ்திரே பச்சிமே ந்ருஹரிம் ஹரிம் ।
பக்த்யா பரமயா யுக்த: பூஜயாமாஸ சங்கர: ॥

[ पुण्ये स्वामिसरस्तीरे पश्चिमे नृहरिं हरिम् ।
भक्त्या परमया युक्तः पूजयामास शङ्करः ॥ ]

என்று ஸ்காந்த புராணத்திலே ஸ்வர்ணமுகரீ மாகாத்மியத்திலும்,

நீலகண்டஸ்து தத்தீரே த்யாயந் ந்ருஹரிமாதராத் ।
உமயா ஸஹ விச்வேச: கஞ்சித்காலமுவாஸ வை ॥

[ नीलकण्ठस्तु तत्तीरे ध्यायन् नृहरिमादरात् ।
उमया सह विश्वेशः कञ्चित्कालमुवास वै ॥ ]

என்று வாமந புராணத்திலும்,

ஸத்பக்த நீலகண்டார்ச்ய ந்ருஸிம்ஹாய நமோ நம: ।

[ सद्भक्तनीलकण्ठार्च्यनृसिंहाय नमो नमः । ]

என்று வராஹ புராணத்தில் அஷ்டோத்தர சதநாமாத்யாயத்திலும் இருக்கிறபடியே திருமலையிலே ருத்ரனுக்காக ஸ்வாமிபுஷ்கரிணீ[2] பச்சிமதீரத்திலே ஆவிர்ப்பவித்த அழகியசிங்கரான வேங்கடத்தரியானவர் ஆதி காலந் தொடங்கி நித்யமாகவே வைகாநஸ ஆகம ப்ரகாரத்தாலே திருவாராதனமும் கொண்டருளாநிற்க, மத்யே ஒரு காலவிசேஷத்திலே சைவ ஜனங்கள் வந்து 'தங்கள் தேவதையான சிவனுக்குப் பிரத்யக்ஷமான அழகியசிங்கர் சமீபத்திலே நாங்கள் சிவப்ரதிஷ்டை பண்ணிக் கொள்ளுகிறோம்' என்ன, அப்போது ஸ்தலத்திலே வசிக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள், அர்ச்சகர்கள் எல்லாருமாக ராஜா ஸ்தானத்திற்குப் போய், ஸ்ரீ வைகுண்டத்திலே

1. தோள்வளைகளோடே, 2. மேற்குக் கரையிலே.

க்ரீடாசலம் இந்தப் பர்வதம் என்று வராஹ, வாமன, மார்க்கண்டேய, ப்ரஹ்மாண்டாதி புராணங்களிலே ஸுஸ்பஷ்டமாகச் சொன்ன இந்த விஷ்ணு க்ஷேத்ரத்திலே சிவப்ரதிஷ்டை அநுசிதம் என்று நிவர்த்திப்பிக்க, அவர்களும் ராஜ மூலமாகப் புறப்பட்டுப் போக, பின்பு ஸ்தலத்திலிருக்கும் பெரியோர்களானவர்கள், இப்படி தேவதாந்தரங்களுக்கும் ஸாதகரான இந்த அழகியசிங்கர் முன்புபோலே பிரஸித்தராய், ஆராத்யராய் இருந்தால், கலியுக மாகையாலே, ஒரு பாபபுத்திக்கு ஒரு துர்ப்புத்தி பிறந்தால் தேவதாந்தர ஸ்தானமாகவும் காட்டும் ஆகையாலும், இந்த அழகியசிங்கர், லக்ஷ்மீவிசிஷ்ட ராகாமையாலே உக்ரமூர்த்தி யாகையாலும் இவர்க்கு நித்யாராதனம் [1]லுப்தமாம்படி அப்ரஸித்தராக்கி வைத்த வ்ருத்தாந்தங்களை எம்பெருமானார் கேட்டருளித் திருவுள்ளத்திலே சிந்தித்து, இவர், புராண ப்ரஸித்தராகையாலும், ஆழ்வார் ஸ்ரீஸூக்திக்கு விஷயமாகையாலும், இவருக்கு நித்யாராதனம் லோபமானால் ஸ்தலத்துக்கு [2]அநிஷ்டாவஹம் என்றெண்ணி, இவர் தனிக் கோயிலிலே இருக்கையாலே யன்றோ, பூர்வத்துக்கு அமர்யாதை வந்தது என்று நிச்சயித்து, இவருக்குத் திருவேங்கடமுடையான் கோயிலிலேதான் எழுந்தருளி யிருக்கும்படி நிச்சயித்து, ஸ்வாமிக்கு ஈசான்ய திக்பாகத்திலே [3]உக்ரவேஷம் [4]சமிக்கும்படி விமாநாபிமுகமாய் ப்ரதிஷ்டைபண்ணி, நரஸிம்ஹ அர்ச்சனம் உண்டான ஸ்தலத்திலே [5]பராபிபவம் வாராது என்கிற சாஸ்த்ரார்த்தத்தையும் உட்கொண்டு நித்ய திருவாராதனம் நடக்கும்படிக்கும்,

மார்க்கண்டேய மஹாமுனியானவர் திருவேங்கட யாத்திரை பண்ணும்போது திருமலையிலே மார்க்க மத்யத்திலே,

ஆருஹ்ய வேங்கடம் சைலம் மத்யேமார்கம் ததர்ச ஹ ।
நரஸிம்ஹகுஹாஸ்தாநம் லோகவிக்யாதவைபவம் ॥

ஸக்ஷ்மீந்ருஸிம்ஹ ! ப்ரஹ்லாத வரதாநந்தவைபவ ! ।
தாஸாநுதாஸம் தேவேச ! மாம் பாஹி மதுஸூதந ! ॥

இதி ப்ரணம்ய சுத்தேந ஸ்வாமிபுஷ்கரிணீம் கத꞉ ।

---

1. இல்லாமற் போகும்படி. 2. துன்பம் உண்டாக்குவது.
3. அச்சந்தரும் தோற்றம். 4. தணியும்படி.
5. பிறரால் உண்டாகும் துன்பம்.

[ आरुह्य वेङ्कटं शैलं मध्येमार्गं ददर्श ह ।
नरसिंहगुहास्थानं लोकविख्यातवैभवम् ॥

लक्ष्मीनृसिंह ! प्रह्लादवरदानन्तवैभव ! ।
दासानुदासं देवेश ! मां पाहि मधुसूदन ! ॥

इति प्रणम्य शुद्धेन स्वामिपुष्करिणीं गतः । ]

என்கிறபடியே, அழகியசிங்கர் மார்க்கண்டேயனுக்குப் பிரத்யக்ஷமானரென்று மார்க்கண்டேய புராணத்திலே இருந்தபடிக்கு அவர் ஆவிர்ப்பவித்த குஹாப் பிராந்தத்திலே ஒரு கோயிலைக்கட்டி அழகிய சிங்கரை ஸ்ரீவைகாநஸ ஆகம ப்ரகாரத்தாலே ப்ரதிஷ்டை பண்ணி அவருக்கு நித்யாராதனம் நடத்தியும்,

அனந்தாழ்வான் புஷ்பங்களை எடுத்து நித்யம் திருமாலை சேர்த்தும் ஸ்வாமிக்குச் சமர்ப்பித்துக் கொண்டுமிருக்க, திருவேங்கடமுடையானும் அனந்தாழ்வான் பண்ணும் கைங்கர்யத்திலே தாம் உகந்தபடியையும் அவர் [1] பாவசுத்தியையும் எல்லோரும் அறிய வேணுமென்கிற திருவுள்ளத்தாலே, ஒரு புரட்டாசி மாசத்திலே ப்ரஹ்ம திருநாளிலே ஏழாந் திருநாளில் ராத்திரி காலத்திலே தாமும் அலர்மேல் மங்கையுமாக ராஜ குமாரனும் ராஜ கன்னிகையுமாய் அவர் உத்தியான வனத்திலே எழுந்தருளி, [2] புஷ்பாபசயம் பண்ணிக் கொண்டு, வெளிப் புறப்படுகிற வேளையிலே, அனந்தாழ்வான் கண்டு, கள்ளன் வந்து புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு போகிறானென்று (எண்ணி) அவனைப் பிடிக்க வேணுமென்று துரத்த, ராஜ குமாரனும் அப்ரதக்ஷிணமாகவே கோயிலைச்சுற்றி, மீளவும் திருநந்தவன வாசலிலே காண்பித்து மறைந்துபோக, அநந்தாழ்வானும் பின்தொடர்ந்துகொண்டுபோய்த் திருநந்தவன வாசலிலே காணமல்போனரென்னும் ஐதிஹ்யமானது, திருவேங்கடமுடையானுக்குப் ப்ரதிஸம்வத்ஸரம் [3] அனுஷ்டேயம் ஆகவேணுமென்று, ஏழாந் திருநாளிலே [4] உத்யான விஹாரார்த்தமாக எழுந்தருளும்போது, கோவிலை அப்பிரதக்ஷிணமாக எழுந்தருளும்படி கட்டளை பண்ணியும்,

---

1. தூய எண்ணத்தையும். 2. பூப்பறித்தல்.
3. அநுஷ்டிக்கத் தக்கது. 4. பூந்தோட்டத்தில் உலாவுவதற்காக.

க்ரிமிகண்டன் என்பான் ஒரு [1] அவ்யபதேச்யன் அநேக [2] ஜன் மார்ஜித பாப பரவசனுய் ஸ்வராஜ்யமான சோழ தேசத்திலே அநேக விஷ்ணு த்ரோஹங்களைப் பண்ணியும், காவேரி தீரத்திலே கண்வ மஹா முனிக்கு ப்ரத்யக்ஷமான ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் திவ்ய க்ஷேத்ரமான திருச்சித்திரகூடத்திலே ஸ்ரீகோவிந்தராஜப் பெரு மாள் திருக்கோயிலை [3] மூலதோஹரநியாகப் போகும்படி பண்ண, அத்தை எம்பெருமானர் கேட்டருளி, புராண ஸித்தமாய் ஸ்ரீகுலசே கரப் பெருமாள், திருமங்கை மன்னன் ஆகிய இருவரும் விரும்பிய தான திவ்ய ஸ்தலமானது மூலதோஹரநியாய்ப் போக வொண்ணு தென்று சிந்தித்து, [4] பவிஷ்யத் ஞானத்தாலும் பரிபூர்ண ராகையால் அந்த ஸ்தலத்திலே மீளவும் பகவதாவிர்ப்பாவம் உண்டாகைக்குத் திருமலை அடிவாரத்திலே ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் திருவேங்கட முடையான் [5] அபிமானாந்தர்ப்பூதராய் எழுந்தருளி யிருக்கிறதைப் பற்றி, நித்யம் திருவேங்கட முடையான் ராத்ரி திரு அர்த்த ஜாமப் பிரஸாதம் அமுது செய்தருளிய பின்பு, அர்ச்சகர் ஸ்ரீ சடகோபனைப் போர்த்துக் கையிலே எழுந்தருளிப் பண்ணிக்கொண்டு, [6] சத்ர, சாமராத்யோபசாரங்களோடே வென்று மாலையிட்டான் திருமண் டபத்திலே தக்ஷிணுபி முகமாய் நின்றருள, அப்போது ஸந்நிதிப் பேரானவர்கள் கட்டியம் விண்ணப்பம் செய்து, "அருளப்பாடு திருச்சித்திரகூட கைங்கர்ய துரந்தரராய், திருவேங்கடமுடையான் செங்கோல் முத்ரா நிர்வாஹகரான சேனைமுதலியார்" என்று (சொல்லி) கோயில் பாரபத்யம் பண்ணும் ஸ்ரீ வைஷ்ணவனுக்குப் பரிவட்டம், ஸ்ரீ சடகோபன் ப்ரஸாதிக்கும்படி கட்டளை பண்ணியும்,

திருவேங்கடமுடையான், ஆழ்வார் திருவரங்கப் பெருமா ளரையருக்காக அத்யயனேத்ஸவத்திலே இதர ஸ்தலங்களைப்போ லன்றிக்கே இயற்பா முதலாக நாலாயிரமும் (கேட்டருளும்படியான ஸங்கல்பத்தை) இருபத்து மூன்று நாளாக ப்ரதிஸம்வத்ஸரம் கேட் டருளும்படிக்கும், அநந்தரத்திலே ஞானப்பிரான் ஒருநாள் கேட் டருளும்படிக்கும், பின்பு இப்படியே ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் கேட்டருளும்படிக்கும், இப்படி, சில உத்ஸவங்கள் திருவேங்கட

1. பெயர் கூறத்தகாதவன். 2. பிறப்புக்களில் ஈட்டிய பாவங் களுக்கு வசப்பட்டவனுய், 3. அடியோடு பாழாக. 4. எதிர்கால அறிவாலும். 5. அன்புக்குப் பாத்ரரானவராய். 6. குடை, சாமரை முதலிய உபசாரங்களோடு.

முடையானோடு ஏககால மின்றிக்கே காலபேதேந கொண்டருளும் படிக்கும்,

திருவேங்கடமுடையான் ஸந்நிதியிலே ப்ரதிதினம் [1]ஸ்நபந பேரமான அழகப்பிரானார் ராத்ரிகாலத்திலே நித்யம் [2]சய்யா பேர மாய்த் திருப்பள்ளிக் கட்டிலிலே கண்வளர்ந்தருளும்படி ஸ்ரீ வைகா நஸ ஆகமத்தில் இருந்தபடியே கொண்டருளினாலும், முன்பு, ஆழ் வார் திருமகள் கிருஷ்ணனோடு அனுபவத்தை ஆசைப்பட்டு மார் கழி மாஸம் முப்பது நாளிலும், நித்யம் ஒருபாட்டாக முப்பது பாட் டான ப்ரபந்தத்தை அருளிச் செய்கையாலும், "வேங்கடவற் கென்னை விதிக்கிற்றியே" என்று, இதர அர்ச்சாவதாரங்களை விட்டு ப்ரதமம் திருவேங்கடத்தானையே விரும்புகையாலும், விபவ, அர்ச் சாவதாரங்களுக்கு ஐக்யம் உண்டாகையாலும், ஸ்ரீ வைகாநஸாக மத்திலே, ஒரு ஸம்ஹிதையிலே மார்கழி மாசமெல்லாம் ஸ்ரீ கிருஷ் ணன்தானே சய்யா பேரமாய் இருக்கும்படிக்கு விதி காண்கை யாலும், [3]பேரத்ரய பக்ஷத்திலே கிருஷ்ணனே சய்யா பேரமாக விதிக்கையாலும், மார்கழிமாதம் முப்பதுநாளிலும் கிருஷ்ணன் தானே திருப்பள்ளிக் கட்டிலிலே கண்வளர்ந்தருளி ஜகத்தை வாழ் விக்கும் படிக்கும்,

திருமலைநம்பிதாமும் ஆளவந்தார் நியமனத்தின்படியே திரு மலையிலே நித்ய வாசம்பண்ணிக்கொண்டு, த்ரிசந்த்யையிலும் திரு வேங்கடமுடையானை ஸேவித்துக்கொண்டு, நித்யம் ஆகாசகங்கா தீர்த்தத்திலிருந்து திருமஞ்சன கைங்கர்யத்தையும் செய்துகொண்டு மங்களாசாஸனபரராய் இருக்கும் காலத்திலே, எம்பெருமானார் ஆளவந்தார் நியமனத்தின்படியே ஸ்ரீ ராமாயண பாடார்த்தமாகக் கோயிலிலிருந்து திருமலை அடிவாரத்திலே எழுந்தருள, நம்பியும் இவருக்காக ஒருஸம்வத்ஸரம் நித்யம் ப்ராதஃ காலத்திலே திருமஞ் சன கைங்கர்யத்தையும் செய்து ஸ்வாமியையும் ஸேவித்து, மஹா ப்ரஸாதமும் கொண்டு, எம்பெருமானார்க்குச் சமர்ப்பித்து, திருமலை அடிவாரத்திலே ஒரு திந்த்ரிணீ வ்ருக்ஷத்தின் கீழாக ஒரு குண்டுக் கல்லின் சமீபத்திலே பாடத்தையும் ப்ரஸாதித்து, மத்யாஹ்ந காலத் திலே யாகாநுயாகங்களையும் செய்தருளிச் சாயங்கால ஸேவைக்கு மீளவும் எழுந்தருளுவர்.

---

1. திருமஞ்சன உருவமான. 2. பள்ளி கொள்ளும் திருவுருவாய்.
3. மூன்று விக்ரகங்கள் இருக்கலாம் என்னும் கருத்தில்.

இப்படிச் சில நாள் நடவாநிற்க, திருவேங்கடமுடையானை த்யானித்து, "தேவரீர், அத்யபர்யந்தத்துக்கும், ஆளவந்தார் கடாக்ஷ விசேஷத்தாலே த்ரிசந்த்யையிலும் ஸேவை ப்ரஸாதித்தீர்; இப்போது ஸ்ரீராமாயண பாடார்த்தமாக மத்யாஹ்நஸேவை இல்லை" என்று எண்ணிக்கொண்டு கண்வளர, அன்று ஸ்வப்நத்திலே திருவேங்கடமுடையானும் நம்பியைப்பார்த்து, "உமக்கு மத்யாஹ்ந ஸேவையும் தந்தோம்" என்ன, நம்பியும் ப்ரபுத்தராய், பூர்வம் போலே திருமஞ்சன கைங்கர்யமும் செய்தருளி, திருமலை அடிவாரத்திலே யதாஸ்தாநத்திலே எழுந்தருள, எம்பெருமானாரும் திருப்பதியினின்றும் அங்கெழுந்தருள, அப்போது, அவ்விடத்திலே ம்ருக மத, கஸ்தூரி, கர்ப்பூர பரிமளங்கள் எங்கு முண்டாக, நம்பியும் எம்பெருமானாரும், இதென்? என்று விசாரித்து நாலுதிக்கிலும் பார்க்கும்போது அந்தத் திந்த்ரிணீ வ்ருக்ஷத்தின் கீழே குண்டுக் கல்லின்மேலே திருவேங்கடமுடையான் திருவடிகளிரண்டும் காண்பிக்க, அந்தத் திருவடிகளைக் கண்ட நம்பியும் தாம் கண்ட ஸ்வப்ந வ்ருத்தாந்தத்தை எம்பெருமானாரோடே அருளிச்செய்ய, பின்பு திருவுள்ளமானபடி கொண்டருள, இரண்டுபேரும் ஆச்சரியப் பட்டு அந்த ஸ்வயம்வ்யக்தமான திருவடிகளைச் சேவித்து, அதன் கீழாக ஆழ்வார்கள் பதின்மரையும், திருவடிகளோடு ஒரு திருமேனியாக ஏறியருளப் பண்ணுவித்து, திருவடிகளுக்கொரு திவ்யாலயமும் கட்டிவைத்து, ப்ரதிஷ்டார்ச்சனாதிகளெல்லாம் ஸ்ரீ வைகாநஸாகமப் ப்ரகாரத்தாலே பண்ணுவித்து, தீர்த்தப்ரசாதாந்வயமுஞ் செய்தருளி, பிரபந்தசேஷத்தையும் திருவடிகளடியிலே அநுசந்தித்துச் சாத்தி, அந்தத் திந்த்ரிணீ விருக்ஷமும் உறங்காப்புளியாய் இருக்கையாலே திருவனந்தாழ்வான் அம்சமென்று நிச்சயித்து, "கலௌ வேங்கட நாயக:" (कलौ वेङ्कटनायक:) என்றும்,

விசேஷத: க்ரூரகலௌ நராணாம் பாபாகராணாம் பரபீடகானாம் ।
பூகோலமத்யே த்ரவிடே ச புண்யே ஸ்ரீவேங்கடாத்ரி: கதிரேவ நான்ய: ॥

[ विशेषतः क्रूरकलौ नराणां पापाकराणां परपीडकानाम् ।
भूगोलमध्ये द्रविडे च पुण्ये श्रीवेङ्कटाद्रि र्गतिरेव नान्यः ॥ ]

என்றும்,

கலௌ புந: பாபலதாபிபூதே ஸ உத்பபூவாச்ரித வத்ஸலத்வாத் ।
அர்சாத்மநா ஸர்வஜநான் ஸுகோப்தும் ஸர்வாதிகோ வேங்கட
பூதரேந்த்ர: ॥

[ कलौ पुनः पापलताभिभूते स उद्बभूवाश्रितवत्सलत्वात् ।
अर्चात्मना सर्वजनान् सुगोप्तुं सर्वाधिको वेङ्कटभूधरेन्द्रः ॥ ]

என்றும் இத்யாதிகளில் சொல்லுகிறபடியே வர்ணாச்ரம பேதமின்றிக்கே மனுஷ்ய சாமாந்யேந ரக்ஷணார்த்தமாகத் திருவவதரித்த திருவேங்கடமுடையானை எல்லாரும் சேவித்துக் க்ருதார்த்தராகைக்கு ப்ராப்தி யுண்டாயிருக்கத் திருக்குலத்தடியாரான பாகவதர்களுக்குத் திருமலையேறி ஸ்வாமியைச் சேவிக்கக் கூடாமையாலே அவர்கள் திருமலைத் தென்சிகரத்திலே தீர்த்தபஞ்சகமென்று பிரஸித்தமான தீர்த்தங்களிலே [1]அந்யதமமான சண்டாள தீர்த்தத்திலே ஸ்நாநம்பண்ணி, அந்த ஸ்வயம்வ்யக்த திருவடிகளைக் கிட்டிப் [2]பிரதக்ஷிண ப்ரணாமாதிகளைப்பண்ணி தந்யரா யிருக்கும்படிக்கும்,

குஷ்யதே ஸங்கச ச்சோச்சை: கோவிந்தேதி புந: புந: ।

[ घुष्यते सङ्घश श्चोच्चैः गोविन्देति पुनः पुनः । ]

என்கிறபடியே நைமிசாரண்ய வாசிகளான சில பரமரிஷிகள், ஸூத முகத்தாலே ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்மியத்தைக் கேட்டு, திருவேங்கட யாத்ரை பண்ணும்போது அல்லாத பகவந் நாமங்களை உபேக்ஷித்து, "ஸதா கோவிந்த கீர்த்தநம்" (सदा गोविन्दकीर्तनम्) என்கிறபடியே 'கோவிந்தா' வென்கிற திருநாமத்தையே உச்சைஸ்வரபாக அடிக்கடி கூப்பிட்டுக்கொண்டு ஸ்ரீ வேங்கடாசல யாத்ரை பண்ணினார்களென்று ஸ்ரீ வாராஹ புராணத்திலிருக்கிற அர்த்த விசேஷத்தைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு, இந்த ஸ்ரீ வேங்கடாசலமானது [3]தேவதாந்தர கந்தமின்றிக்கே விஷ்ணு க்ஷேத்ரமென்றே லோகத்திலே பண்டித பாமர ஸாதாரண்யேந எல்லாரு மறிகைக்காக ஸ்ரீ வேங்கடாசல யாத்திரைபண்ணும் பரம பாகவதர்களும் அந்தப் பரமரிஷிகள்போல அடிக்கடி கோவிந்த நாமோச்சாரணம் பண்ணிக்கொண்டு யாத்ரை பண்ணும்படிக்கும்,

1. ஒன்றான. 2. வலம்வருதல், வணங்குதல்களை.
3. வேறு தெய்வங்களின் இயைபு இல்லாமல்.

க்ருதமாலா நதீதீரே விச்வம்பரக்ருதே ஹரி: ।
ஆவிராஸீத் ரகுவரோ விபீஷணபயாபஹ: ॥

[ कृतमाला नदीतीरे विश्वम्भरकृते हरिः ।
आविरासीत् रघुवरो विभीषणभयापहः ॥ ]

என்று வாஸிஷ்டராமாயணத்தி லிருக்கிறபடியே வைகையாற்றின் கரையிலே தென்மதுரைக்கு மேற்குத் திக்கிலே குருவித்துறை யென்னும் நகரத்திலே விச்வம்பரன் என்பான் ஒருமகாமுனி யான வன், சக்ரவர்த்திதிருமகனர் சமுத்திரக்கரையிலே விபீஷணுழ்வான் பக்கல்,

ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட! தத்தமஸ்யாபயம் மயா ।

[ आनयैनं हरिश्रेष्ठ ! दत्तमस्याभयं मया । ]

என்று அபயப்ரதானம் பண்ணின அநுக்ரஹத்திலே ஈடுபட்டுத் தனக்கந்த நிலையைக் காட்டியருள வேணுமென்று அவரைக் குறித் துத் தபஸ்ஸைப்பண்ண, அப்போது பெருமாளும் அந்த ஆச்ரித னிடத்தில் க்ருபையாலே அவன் ஸ்வப்நத்திலே தாமும் இளைய பெருமாளும், தநுர்த்தரராய் இருக்கிறதாயும், தம்முடைய ஸந்நிதி யிலே,

விபீஷணக்ருதே ஸர்வம் விஜ்ஞாப்ய ஹரிபுங்கவ: ।
யதேஷ்டம் குரு ராஜேந்த்ரேத்யுச்சரன் னஞ்ஜலிம் வ்யதாத் ॥

[ विभीषणकृते सर्वं विज्ञाप्य हरिपुङ्गवः ।
यथेष्टं कुरु राजेन्द्रेत्युच्चरन्नञ्जलिं व्यधात् ॥ ]

என்கிறபடியே மகாராஜர் ஸ்ரீ விபீஷணுழ்வான் நிமித்தமாக உசித வாக்யங்களைச் சொல்லி, திருவுள்ளமானபடி செய்தருளவேணு மென்று அஞ்ஜலிஹஸ்தராய்ச் சேவித்துக்கொண் டிருக்கிறதா யும், திருவடியும் [1] "ஸ ஏஷ தேச: காலச்ச" (स एष देशः कालश्च) என்று ஸ்ரீ விபீஷணுழ்வானை அங்கீகரிக்கைக்கு உசிதமாகச் சில விண்ணப்பங்களைச் சந்நிதியிலே கிட்டி நின்று விண்ணப்பம் செய் கிறதாயும்,

1. காலமும் இடமும் பொருத்தமானவை,

வாயுஸூநுர் மஹாதேஜா: விபீஷண முபஸ்திதம் ।
தர்சயந்தம் ததாகாசே நிர்திச்யோத்த்ருத பாணிநா ॥
[ वायुसूनु र्महातेजाः विभीषण मुपस्थितम् ।
दर्शयन्तं तदाकाशे निर्दिश्योद्धृतपाणिना ॥ ]

என்கிறபடியே அங்கதப்பெருமாளும் ஆகாசத்திலே வந்து நிற்கிற ஸ்ரீ விபீஷணப்பெருமாளை [1] அங்குளிநிர்த்தேசத்தாலே காட்டுகிறதாயும் இருந்தபடி (வாஸிஷ்ட ராமாயணத்திலிருக்கிறபடியே) ஸேவை ப்ரஸாதித்தருளக்கண்டு ப்ரபுத்தராய், அந்த ஸம்ஸ்தான விசேஷத்தைத் தமக்கு நித்யோபாஸ்யமாய் இருக்கும்படி, அர்ச்சாரூபமாக்கிக்கொண்டு அநேககாலம் ஆராதிக்கப்பட்ட சக்ரவர்த்தி திருமகனும் இளையபெருமாளும், அந்தக் குருவித்துறை என்னும் திவ்ய நகரத்தில் ஒருகலகம் ப்ரஸ்துதம் ஆகையால், ஒருபக்த முகத்தாலே தம்மைத் "திருமலை அடிவாரத்திலே கொண்டுபோங்கோள்" என்ன, அந்தப் பக்தனும், அப்படியே எழுந்தருளப்பண்ணிக்கொண்டு திருப்பதியிலே எம்பெருமானார் சந்நிதியிலே எழுந்தருளப்பண்ண, அப்போது எம்பெருமானாரும் திருமலைநம்பி ஸந்நிதியிலே படிக்கிற ஸ்ரீ ராமாயண (பாராயண)த்திலே விபீஷண அபய ப்ரதான சமயமாய் இருக்க, நம்பியும் எம்பெருமானாரும் இவர்கள் [2] அசிந்திதமாக எழுந்தருளினதைக் கண்டு திருவுள்ள முகந்து அவர்களெழுந்தருளின [3] ஆகமங்களெல்லாம் கேட்டு ஸந்துஷ்டராய், அன்று ஸ்ரீ விபீஷணாழ்வானை அநுக்ரஹித்தாற்போலே இப்போதும், இந்த அபயப்பிரதானசமயத்திலே நம்மையும் அநுக்ரஹிக்கைக்கு எழுந்தருளினார்களென்று நிச்சயித்து, முன்பு ராவண பவனத்தினின்றும் ஜனகநந்தினியானவள் வந்து, பெருமாள் சந்நிதியிலே சேர்ந்தாற்போலே இவர்க்குத் திருக்கல்யாணம் கொண்டருளப்பண்ண வேண்டுமென்றெண்ணி, ஒருபிராட்டி திருவவதரிக்கும்படி ஸங்கல்பித்து, சக்ரவர்த்திதிருமகனுக்குத் திருக்கல்யாணம் கொண்டருளப் பண்ணி, திருவடிதொழுது மங்களாசாஸனம் செய்தருளி, "கடைந்த பாற்கடல் கிடந்து", "காலநேமியைக் கடிந்து" இத்யாதி "எழ்மரங்களும் அடங்க எய்து வேங்கட மடைந்த மாலபாதமே அடைந்து நாளும் உய்ம்மினோ?" என்று ஆழ்வார் அருளிச்செய்த ஸ்ரீஸூக்தி

1. விரலாற் குறிப்பதாலே. 2. நினையாதிருக்கும்போது.
3. வருகைகளெல்லாம்.

யானது ஸத்யமாம்படிக்குத் திருமலையிலே திருவேங்கடமுடையான் சந்நிதியிலே எழுந்தருளப்பண்ணுவித்து, நித்யாராதனம் கொண்டருளும்படிக்கும்,

கலியுகாதியிலே, தொண்டைமான் சக்ரவர்த்தி, திருவேங்கடமுடையான் திருவடிகளிலே அந்தரங்க பக்தனாய், சகலவித கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டிருக்கிற காலத்திலே, திருமலைக்கு ஈசான்யதிக்பாகத்திலே யோஜனைதூர விப்ரக்ருஷ்டமான குருவை என்னும் கிராமத்திலே நித்யவாஸியாய்த் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே [1]நிரவதிக பக்திமானான, அடிவாரத்தில் ஒரு விஷ்ணு பக்த ச்ரேஷ்டன், தன் தேகயாத்திரைக்கு உசிதமான பாண்டங்களைப் பண்ணின பின்பு, தன்பக்தியாலே கையில் மண்ணை வழித்து நாலு புஷ்பங்களைப்பண்ணி, திருவேங்கடமுடையான் திருவடிகளைக் குறித்து நித்யம் சமர்ப்பிக்க, அவன் [2]சரம சரீரியாகையாலே அந்தப் புஷ்பங்கள் சக்ரவர்த்திசமர்ப்பித்த ஸ்வர்ண கமல புஷ்பங்கள் மேலே இருக்க, இத்தைச் சக்ரவர்த்தியும் ஒருநாள் அர்ச்சகமுகத்தாலே கேட்டுத் தானுங் கண்டு, இப்படிப்பட்ட பக்தனை அடியேனுக்கு அருளிச்செய்ய வேணுமென்று ஸ்வாமியைக் கேட்க, அவரும் 'கூடாது' என்ன, அவச்யம் சொல்லவேணுமென்ன, அந்தப் பக்தனும், "தன்னை ஒருவர்க்கும் பிரகாசம்பண்ண (காண்பிக்க) வேண்டா; பண்ணினால் சாவேன்" என்று முன்பே சொல்லியிருக்கையாலே, ஸ்வாமியும் சொல்லக் கூடாதென்ன, சக்ரவர்த்தியும் பெருமாளை நிர்ப்பந்தித்துக் கேட்க, பின்பு ஸ்வாமியும், தம்முடைய பக்தனுக்குச் சரமகாலம் வந்ததென் றறிந்து, தம்முடைய பக்தன் இன்னான், இன்ன ஊரிலே இருக்கிறான் என்று அருளிச்செய்ய, அவனைச்சேவிக்க வேணுமென்று சக்ரவர்த்தியும் புறப்பட, அப்போது, 'நீ யொருவனுமாகவே அவனைக் காண்கைக்குப் போவாய்' என்று பெருமாளும் அருளிச்செய்ய, அப்படியே சக்ரவர்த்தியும் புறப்பட்டு அவனூரிலே போய், அவன் முன்னே நிற்க, அப்போது அந்தப் பக்தனும் திவ்யஜ்ஞானி யாகையாலே எதிர் நின்றவனைச் சக்ரவர்த்தி யென்றறிந்து திருவேங்கடமுடையான் தன்னைப் பிரஸித்தனாக்கினான்; இனி இந்தச் சரீரம் வேண்டுவதில்லை யென்று தன் கையில் (உள்ள) பாண்ட நிர்மாண ஸாதனமான தட்டு மரத்தாலே தலையை அடித்துக்கொள்ள, அன்றைக்கு வெள்ளிக்

---

1. அளவற்ற. 2. இறந்து போகும் உடலுடையவன்.

கிழமை நாளாகையாலே திருவேங்கடமுடையானுக்கு அப்போது திருமஞ்சனகாலமாய், திருவபிஷேகம் முதலான திருவாபரணங்கள் களைந்த சமய மாகையாலே அந்த வடிவோடே நம்பிக்கு [1] ஸாக்ஷாத்கரித்து, அவனை அங்கீகரித்தருளுகையாலே, திருவேங்கடமுடையான் [2] ஆச்ரித பரதந்திரன் என்றும், [3] ஆபத்ஸகன் என்றும், மற்றும் சகல சேதனரும் அறிந்து தங்யராகவேணுமென்று எம்பெருமானரும் திருவுள்ளத்திலேவைத்து, அந்தக் குருவை என்கிற கிராமத்திலே திருவேங்கடமுடையானைத் திருவபிஷேகம் முதலான திருவாபரணம் இன்றிக்கே மொட்டைத் திருமுடியாகவும், அவர் அருகே தட்டும் கையுமாக நம்பியையும் விக்ரஹ ரூபேண எறியருளப் பண்ணுவித்துக் கோயிலைக் கட்டி அதிலே ப்ரதிஷ்டை பண்ணுவித்து நித்யாராதனமும் நடக்கும்படிக்கும்,

பெரிய திருமலைநம்பி திருமலையிலே திருவேங்கடமுடையானுக்கு நித்யமாகப் பாபவிநாச தீர்த்தத்தினின்றும் பெரிய திருமொழி யநுசந்தானத்துடன் திருமஞ்சன கைங்கர்யம் செய்தருளாநிற்க, திருவேங்கடமுடையானும் அவர் பண்ணும் கைங்கர்யத்திலே தம் திருவுள்ள முகந்தபடியை எல்லாரும் அறியவேணுமென்று திருவுள்ளமாய், ஒருநாள் நம்பி திருமஞ்சனம் கொண்டு வரும் வழியில் ஒரு [4] வ்யாதாகாரனுய்க் கையும் வில்லுமாய் நம்பி முன்னே நின்று, "தாதா, தாகித்தேன்; தீர்த்தந் தாரும்" என்ன நம்பியும் வ்யாதனைப் பார்த்து 'திருவேங்கடமுடையானுக்குக் கொண்டுபோகிறேன்; [5] இது மனுஷ்யார்ஹமன்று' என்று சொல்லித் திருமஞ்சனத்தைக் கொண்டு திருமொழி யநுசந்தான பூர்வமாகப் பகவதநுபவத்துடனே எழுந்தருள, வ்யாதனும் நம்பி யறியாதபடி அவர் பின்பு போகாநின்றுகொண்டு, கையிலுள்ள அம்பாலே திருமஞ்சனக் குடத்தைச் [6] சித்ரமாக்கி அந்தச் சித்ரத்தினின்றும் தாரையாகப் புறப்பட்ட தீர்த்தத்தைக் கையாலே எடுத்து அமுது செய்ய, நம்பியும் குடத்தில் திருமஞ்சனம் வெளிப்படுகையாலே குடம் லகுவானபடியைக் கண்டு விசாரமிட்டுத் திரும்பிப் பார்த்து வ்யாதனுடைய சேஷ்டிதத்தைக் கண்டு, "வாராய், வ்யாதனே! திருவேங்கடமுடையானுக்குக் கொண்டுபோகிற தீர்த்தத்

---

1. முன்னே தோன்றி. 2. தற்சார்ந்தோர் வயமானவன்.
3. துன்பத்தில் துணையாகுபவன். 4. வேடன் வடிவுடையவனுய்.
5. மனிதர்க் குரியதன்று. 6. துளையாக்கி.

திலே த்ரோகத்தைப்பண்ணினாய்" என்ன, அவனும் நம்பியைப் பார்த்து, "நீர் விசாரமிடவேண்டா; சமீபத்திலே தீர்த்தம் காட்டு கிறேன் வாரும்" என்று ஆகாசகங்கா தீர்த்த தீரத்திலே அழைத் துக் கொண்டுபோய் அந்த மடுவிலே தீர்த்தத்தைக் காணாமல் வில் லிலே பாணத்தை ஏறிட்டு ஒருகுண்டின் கீழே போகட்டு அந்தப் பாணத்தை மீளவும் பிடுங்கிக்கொண்டு நிற்க, பின்பு பாணம் பட்ட குண்டின் கீழாகத் தீர்த்ததாரை புறப்பட, பின்பு வ்யாதாகார னை திருவேங்கடமுடையானும், "தாதா இந்தத் தீர்த்தத்திலே நமக்கு நித்யமாகத் தீர்த்தம் கொண்டுவந்து தாரும்" என்று சொல்லி, தன்னுடைய ஈச்வரத்வத்தை ஸ்மரிப்பித்து மறைந்துபோக, பின்பு நம்பியும், அந்த ஆச்சரியத்தைப் பார்த்துத் திருவேங்கடமுடையான் லீலாரஸ விசேஷமானது நம்பிடத்தே இருந்தபடி என்? என்று மிக வும் திருவுள்ளமுகந்து அந்தத் தீர்த்தப்பாறையினின்றும் திருமஞ்ச னத்தைக் கொண்டுவந்து சந்நிதியிலே முன்புபோலே ஸமர்ப்பிக்கத் திருவேங்கடமுடையானும் அர்ச்சக முகத்தாலே அருளப் பாடிட் டருளி, "நம்பி, தேவரீர் கொண்டுவந்த தீர்த்தத்தாலே வழியிலே தானே தாகம் சமித்தது" என்று அருளிச்செய்ய, நம்பியும் இது ஒரு விஷயீகாரம் இருந்தபடியென்? என்று, மிகவும் உகந்து அன்று தொடங்கி நாடோறும் ஆகாசகங்காதீர்த்த தாரையினின்றும் திரு மஞ்சன கைங்கர்யத்தை நடத்திக்கொண்டு எழுந்தருள, சில நாளுக் குப் பின்பு நம்பி அவதார [1]ஸமாப்தியாக எம்பெருமானாரும் இத்தைக் கேட்டருளி அவர் திருவடிகளிலே [2] ப்ரேமாதிசயத்தாலும் அன்று நம்பியை வழியிலே கடாக்ஷித்த [3] திவஸம் அத்யயனோத்ஸவாநந்தர திவஸம் ஆகையாலும், அந்தத் திருமஞ்சன கைங்கர்யத்தைத் திரு வத்யயனத் திருநாள் முடிவிலே திருவேங்கடமுடையான் ப்ரதி ஸம்வத்ஸரம் கொண்டருளும்படி கட்டளைபண்ணியும்,

ப்ராஹ்ம புராணத்திலே ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்மியத்திலே தொண்டைமான் சக்ரவர்த்தி விருத்தாந்தம் சொல்லுகிற விடத்தே "சக்ரவர்த்திக்குத் திருவேங்கடமுடையான் ப்ரத்யக்ஷமாய் ஹிதோ பதேச முகேந வார்த்தை சொல்லிக்கொண்டு அவனுக்கு இஷ்ட தெய்வமாய் இருக்கிறநாளிலே சக்ரவர்த்தி சத்ருஜயார்த்தமாகத் தேசாந்திரங்களிலே புறப்பட்ட ஸ்தலங்களெங்கும் ஜயமுண்டாய் ஓரிடத்தில் அபஜயம் ப்ரஸ்துதமாய்ச் சத்துருக்கள் துரத்திக்கொண்டு

1. முடிவாக. 2. அன்பு மிகுதியாலும். 3. நாள்.

வர, சக்ரவர்த்தியும் ஓடிவந்து திருமலை யடிவாரத்தில் குகையிலே போய் ஸந்நிதியிலே நின்று தன்னுடைய [1] பராபவங்களை விண்ணப்பம் செய்யத் திருவேங்கடமுடையானும் அவன் வார்த்தைகளைக் கேட்டு ஹிதவசனங்களாலே அவன் துக்கங்களைப் போக்கடித்து, "வாராய் சக்ரவர்த்தியே, ஜன்மாந்த்ர பாபசேஷம் கிஞ்சித்து உண்டாகையாலே இந்தப் பராபவம் வந்தது; இனிமேல் வருங்காலமெல்லாம் [2] உனக்கதிசயம் வருகிறது; சத்துரு ஜயத்துக்குப் புறப்படாய்" என்ன, அவனும் கூடாதென்று சொல்ல, அப்போது திருவேங்கடமுடையானும் "நமக்கு அஸாதாரண ஆயுதங்களான திருவாழி திருச்சங்குகளை உனக்கு யுத்தத்துக்குச் சகாயமாகத் தருகிறோம்; இவர்களைக் கூட்டிக் கொண்டுபோ" என்ற பின்பு சக்ரவர்த்தியும் விஸ்வஸித்து, திருமலை யடிவாரத்திலே வந்து [3] ஹதசேஷமான சேனைகளோடே சிந்தாக்ராந்தனாயிருக்க அப்போது திருவேங்கடமுடையானும் அநந்த, கருட, விஷ்வக்ஸேநாதிகளான தம்முடைய அஸாதாரண பரிஷத் ஜனங்களோடே,

கருத்மந்நிஹ ஸர்வே வை வஸாம கிரிமூர்த்தநி ।
த்வம் கிரேர்தக்ஷிணம் ஸாநும் ஆஸாத்ய வஸ நித்யச: ॥
சேஷாகச்ச வஸ த்வம் ச தார்க்ஷ்யாத: சைலரூபத்ருத் ।

[ गरुत्मन्निह सर्वे वै वसाम गिरिमूर्धनि ।
त्वं गिरेर्दक्षिणं सानुं आसाद्य वस नित्यशः ॥
शेषागच्छ वस त्वं च तार्क्ष्याधः शैलरूपधृत् । ]

என்று வாமந புராணத்திலே சதுர்த்தாத்யாயத்திலிருந்தபடியே வைநதேய விஷ்வக்ஸேநாதிஷ்டித சேஷகிரி சிகரத்துக்கு மேற்காக ஒரு சிகரத்திலே அர்ச்சாரூபியாய் ஆவிர்ப்பவித்துச் சக்ரவர்த்திக்கு ஸேவை ப்ரஸாதித்து,

மா பைஷீ: புத்ர பத்ரம் தே சக்ரசங்கௌ ததாமி தே ।
தாப்யாம் கச்ச புரீம் திவ்யாம் தௌ தே சத்ரூந் ஹநிஷ்யத: ॥
இத்யுக்த்வா தௌ ததௌ தஸ்மை தாப்யாம் ஸஹ ஜகாம ஸ: ।
தௌ ச சத்ரூந் நிஹத்யாசு க்ருத்வா ராஜ்ய மகண்டகம் ॥

1. தோல்விகளை. 2. உனக்கு உயர்வு. 3. அழிந்ததுபோக எஞ்சியுள்ள.

[ मा भैषीः पुत्र भद्रं ते चक्रशङ्खौ ददामि ते ।
ताभ्यां गच्छ पुरीं दिव्यां तौ ते शत्रून् हनिष्यतः ॥
इत्युक्त्वा तौ ददौ तस्मै ताभ्यां सह जगाम सः ।
तौ च शत्रून् निहत्याशु कृत्वा राज्यमकण्टकम् ॥ ]

என்று ப்ராஹ்ம புராணத்திலிருக்கிறபடியே திருவாழி திருச்சங்கு களையும் அனுப்பியருள, பின்பு அந்தத் திவ்யாயுதங்கள் இரண்டும் சக்ரவர்த்தி சந்நிதானத்திலே திவ்ய புருஷாகாரமாய்ச் ஸாக்ஷாத்க ரித்து 'யுத்தத்துக்குப் புறப்படாய்' என்ன, சக்ரவர்த்தியும் பின்பு, திருவேங்கடமுடையான் வார்த்தையையும் விச்வஸித்து அவர்களைக் கூட்டிக் கொண்டு புறப்பட்டுச் சத்ருஜயம் பண்ணி மீளவும் திரு வேங்கடமுடையான் சந்நிதியிலே வந்து ஸேவிக்க, அகண்ட பூ மண்டலாதிபதியாய்த் திருவேங்கடமுடையான் திருவடிகளில் பக்தி பரிபூர்ண மனோரதனாய் அநேககாலம் சர்வபோகங்களையும் அனு பவித்துப் பின்பு திருவேங்கடமுடையான் க்ருபைக்குப் பாத்ரபூத னானன்" என்று ப்ராஹ்ம புராணக் கதை யிருக்கையாலே, அன்று சேஷகிரி சிகரத்திலே சக்ரவர்த்திக்கு [1] பரிஷத்தோடே சாக்ஷாத்க ரித்த ஸ்வாமிதானே இப்போதும் பரிஷத் திருவேங்கடமுடையா னென்று எல்லாருக்கும் ஸேவை ப்ரஸாதித்தருளுகிறார். இப்படிச் சேஷகிரி சிகரத்திலே ப்ராதுர்ப்பவித்த பரிஷத் திருவேங்கடமுடை யானுக்கு எம்பெருமானார் நித்யமாக அபக்குவங்களான விடாய்ப் பருப்பு, பானகம், பழம், தேங்காய் முதலானவைகளை அமுது செய் தருளும்படிக்குக் கட்டளைபண்ணியும்,

இப்படித் திருமலையிலே [2] அநுத்பூதங்களான தர்மங்களை [3] உத் பூதங்களாக்கியும், ஜீர்ணங்களான தர்மங்களை [4] உத்தரித்தும், தேவ தாந்தர கந்தம் வாரதபடிக்கும் திருவேங்கடமுடையான் [5] ஸௌ சீல்ய, ஆச்ரிதபாரதந்த்ரிய, ஆபத்ஸகத்வாதி கல்யாண குணங்களா னவைகளைத் தேசாந்தரஸ்தரும் அறியும்படியாகவும், ஸ்வாமி திருச் செல்வமானது நிருபத்ரவமாய், உத்தரோத்தரம் அபிவ்ருத்தமாம் படிக்கும், மங்களாசாஸனம் செய்தருளி இன்னமும் திருமலைக்கே அஸாதாரணங்களான சில தர்மங்களைப் ப்ரவ்ருத்திப்பிக்க வேணு மென்று திருவுள்ளமாய்,

---

1. ஸபையோடு. 2. இல்லாதிருக்கும் தர்மங்களை. 3. ஏற்பாடு செய் தும். 4. நிலை நாட்டியும். 5. தாழ்ந்தவரோடு கலந்து பழகும் தன்மை.

வைகுண்டலோகாத்கருடேந விஷ்ணோ: க்ரீடாசலோ வேங்கடநாம தேய: ।
ஆநீய ஸ ஸ்வர்ணமுகீஸமீபே ஸம்ஸ்தாபிதோ விஷ்ணு நிவாஸ ஹேதோ: ॥

[ वैकुण्ठलोकाद्गरुडेन विष्णोः क्रीडाचलो वेङ्कटनामधेयः ।
आनीय स स्वर्णमुखीसमीपे संस्थापितो विष्णुनिवासहेतोः ॥ ]

என்று மார்க்கண்டேய புராணத்தில் வேங்கடாசல மாஹாத்ம்யத்திலே ஸ்ரீ வைகுண்டத்தில் க்ரீடாசலமென்று ப்ரசித்தமாய்,

வைகுண்டாதாகதத்வாச்ச வைகுண்டாத்ரி ரிதி ஸ்ம்ருத: ।

[ वैकुण्ठादागतत्वाच्च वैकुण्ठाद्रिरिति स्मृतः । ]

என்றும்,

கத்வா து பரமம் தாம க்ரீடாசல மிஹாநய ।
ஹிரண்மயமஹாச்ருங்கம் பஞ்சோபநிஷதாத்மகம் ॥

[ गत्वा तु परमं धाम क्रीडाचलमिहानय ।
हिरण्मयमहाशृङ्गं पञ्चोपनिषदात्मकम् ॥ ]

என்று சுத்தவராஹபுராணத்திலும், பரமபதத்திலே க்ரீடாசலமென்று ப்ரசித்தமாய்,

அயம் கதாசித் தேவாநாம் ஸ்ரீநிவாஸ இவாபபௌ ।

[ अयं कदाचिद्देवानां श्रीनिवास इवाबभौ । ]

என்று ப்ரஹ்மாண்ட புராணத்திலே ஸ்ரிய:பதியினுடைய திவ்ய மங்கள விக்ரஹமென்றும்,

அநந்தோऽஹம் மஹாதேவ ! ஸ்தாஸ்யாமி கிரிரூபத்ருத் ।

[ अनन्तोऽहं महादेव ! स्थास्यामि गिरिरूपधृत् । ]

என்றும்,

த்வத்பணாமண்டலபுவி ஸ்தாஸ்யாமி ரமயா ஸஹ ।

[ त्वत्फणामण्डलभुवि स्थास्यामि रमया सह । ]

என்று வராஹபுராணத்திலே திருவனந்தாழ்வான் திருமேனி என்றும், இப்படிக் கல்பபேதேந விகல்பிக்கலாம் படியாய் [1] அப்ராக்ருதமான திருமலை யாழ்வாரை,

சுகாத்யா முநய: கேசித் ப்ருக்வாத்யாச்ச தபோதநா: ।
ப்ரஹ்லாதப்ரமுகா: புண்யா அம்பரீஷாதயோ ந்ருபா: ॥
விஷ்ணோரேவாபரம் தேஹம் மந்வாநாஸ்தம் நகோத்தமம் ।
பத்ப்யாமாக்ரமிதும் பீதா: பர்யந்தேஷ்வேவ வர்திந: ॥
தந்நிர்கத நதீஷ்வேவ குர்வாணா: ஸ்நாநதர்பணே ।
தப: குர்வந்தி வாஞ்சந்த: ஸாக்ஷாத்கர்தும் ஜநார்தநம் ॥

[ शुकाद्या मुनयः केचित् भृग्वाद्याश्च तपोधनाः ।
प्रह्लादप्रमुखाः पुण्याः अम्बरीषादयो नृपाः ॥
विष्णोरेवापरं देहं मन्वानास्तं नगोत्तमम् ।
पद्भ्यामाक्रमितुं भीताः पर्यन्तेष्वेव वर्तिनः ॥
तन्निर्गतनदीष्वेव कुर्वाणाः स्नानतर्पणे ।
तपः कुर्वन्ति वाच्छन्तः साक्षात्कर्तुं जनार्दनम् ॥ ]

என்கிறபடியே [2]பராவரதத்வஜ்ஞ ப்ரதானர்களான சுகாதி பரமரிஷிகளும், ப்ரஹ்லாத ப்ரமுகரான பரமபாகவதர்களும், அம்பரீஷாதிகளான ராஜரிஷிகளும், இந்தத் திருமலையாழ்வாரைத்தானே [3]ஸர்வஸ்மாத் பரனை ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்யமங்கள விக்ரஹம் என்று நினைத்து, ப்ராக்ருத சரீரம்கொண்டு பகவத் ஸாக்ஷாத்காரத்தை ப்ரார்த்தித்தார்களென்று ஸ்காந்த, வாமன, வராஹாதி புராணங்களிலிருந்தபடியையும், மயர்வற மதிநலம்பெற்ற ஆழ்வார்களும் அப்படியே ப்ராக்ருத சரீரங்கொண்டு மிதியாமல் திருமலை

1. உலகியலுக்கு அப்பாற்பட்ட.

2. உயர்ந்த, தாழ்ந்த, உண்மைப் பொருளை அறிந்தவர்களுள் சிறந்தவரான.

3. எல்லாப் பொருள்களைக் காட்டிலும் மேலானவனை-

அடிவாரத்திலேயிருந்து மங்களாசாஸனம் செய்கையையும்நினைத்து, ஸர்வஜ்ஞரான தாமும் முன்பொரு யாத்ரையிலே ஆழ்வார்களைப் போலே திருமலை ஏறாமல் அடிவாரத்திலே சிலநாளிருந்து, திருமலை நம்பி ஸந்நிதியிலே இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத்தைக் கேட்டுத் திருவேங்கடமுடையானையும் மங்களாசாஸனம் செய்தருளி, தமது ஐதிஹாஸகாசார்யரான திருமலைநம்பியும், தமக்குப் ப்ரியசிஷ்யரான அனந்தாழ்வானும் திருவேங்கடமுடையான் திருவுள்ளம் உகக்கும்படி கைங்கர்யங்களைப் பண்ணிக்கொண்டு வருகையாலே தாமும் திருவுள்ளம் உகந்துகொண்டு வருகிறவர், திருமலையில் நித்யவாஸிகளான மனுஷ்யர்களுடைய ப்ரவ்ருத்திகளானவை திருமலையாழ்வார் வைபவத்தையும், பூர்வகாலத்திலே க்ஷேத்ரவாஸிகளான பரம ரிஷிகள் அனுஷ்டான விசேஷங்களையும், திருவேங்கடமுடையான் திருவுள்ளமான சாஸ்த்ரார்த்தத்தையும் அறியாமல் ஸ்வேச்சா மூலமாய் இருக்கிறபடியைக் கண்டு இவர்கள் ஜ்ஞாஜ்ஞான மூலமாகப் பண்ணும் [1] உத்தீர்ணம்சங்களை நிவர்த்திப்பிக்கைக்காக ஒரு சாஸ்த்ரார்த்த மரியாதையைப் ப்ரசித்தமாக்க வேண்டுமென்று திருவுள்ளமாய்,

கேசித் கைங்கர்யநிரதாः கேசித் ப்ரஹ்மணி நிஷ்டிதாः ।
த்யாநநிஷ்டாஸ்தபோநிஷ்டாः கேசி துத்யானகாரிணः ॥
விக்ரஹாலோகநபராः தத்ராஸந் முநிபுங்கவாः ।

[ केचित् कैङ्कर्यनिरताः केचित् ब्रह्मणि निष्ठिताः ।
ध्याननिष्ठास्तपोनिष्ठाः केचिदुद्यानकारिणः ॥
विग्रहालोकनपराः तत्रासन् मुनिपुङ्गवाः । ]

என்று ஸ்காந்த புராணத்திலே ஸ்வர்ணமுகரீ மாஹாத்ம்யத்திலே இருந்தபடியை நினைத்துத் திருமலையிலே கைங்கர்ய பரரானவர்கள் மாத்திரமே நித்யவாஸம் பண்ணும்படிக்கும், திருமலை அடிவாரத்திலே வஸிக்கும் குணாநுபவ பரர்களும், ஸம்ஸாரிகளும் உத்ஸவ காலங்களிலே திருமலை ஏறி ஸ்வாமியைச் சேவித்து இழியும்படியாகவும்,

கந்தமூலபலாத்யாச்ச நோபபோஜ்யா ஸ்வதந்த்ரதः ।
தத்ரோத்பந்நாஸ்து ராஜேந்த்ர ! யதஸ்த்வப்ராக்ருதோ கிரிः ॥

1. வரம்பு கடந்த செயல்களை.

[ कन्दमूलफलाद्याश्च नोपभोज्याः स्वतन्त्रतः ।
तत्रोत्पन्नास्तु राजेन्द्र ! यतस्त्वप्राकृतो गिरिः ॥ ]

என்று ஸ்காந்தத்திலே ஸுவர்ணமுகரீ மாஹாத்ம்யத்திலே திருமலை அப்ராக்ருத ஸ்தாநமாகையாலே அதிலே உத்பந்நங்களாய்க் கோயிலுக்கு போக்யமாம்படி வைஷ்ணவ ஆகம ஸித்தங்களாய்க் கந்த மூலாதிகளான ஸகல பதார்த்தங்களையும்,

கந்தமூலமூலாநி வஸ்தூநி போஜ்யாநி ச ஹவீம்ஷி ச ।
நிவேத்ய புரதோ விஷ்ணோ: தத்ப்ரஸாதோபஜீவிந: ॥

[ कन्दमूलानि वस्तूनि भोज्यानि च हवींषि च ।
निवेद्य पुरतो विष्णोः तत्प्रसादोपजीविनः ॥ ]

என்று அந்த ப்ரகரணத்திலே தானே மீளவும் சொல்லுகையாலே ஸ்தலாந்தரத்திலிருந்து வந்தவைகளாய்த் தேவாலயத்துக்கும் போக்யமாகச் சொல்லப்பட்ட பதார்த்தங்களையும் ஸ்தலவாஸிகள் தங்கள் தங்கள் க்ருஹங்களிலே பாகம்பண்ணுமல், கோயிலிலே தானே பாகம் பண்ணுவித்து, திருவேங்கடமுடையான் அமுது செயதருளிய பின்பு அந்த மஹாப்ரஸாதம் கொண்டு, க்ருஹாராதனங்களுக்கும் நிவேதனம்பண்ணி, [1] காலோசித ஹவ்ய கவ்யாதிகளையும் நடப்பித்துத் தேஹதாரணத்தையும் பண்ணிக்கொள்ளும் படிக்கும்,

தேவார்ப்பிதைர்கந்தமால்யை: ஹவிஷா ச மஹர்ஷய: ।
ஆசரந்தோऽர்ச்சநாம் விஷ்ணோ ரூஷுஸ்தத்ர மஹீதரே ॥

[ देवार्पितैर्गन्धमाल्यैः हविषा च महर्षयः ।
आचरन्तोऽर्चनां विष्णो रूषुस्तत्र महीधरे ॥ ]

என்று ப்ராஹ்மோத்தரத்திலே ஏழாம் அத்யாயத்திலே இருக்கையாலே ஸ்தலவாஸிகள், தங்கள் க்ருஹாராதனத்திற்கும் திவ்யோத்யானங்களிலே பத்ரபுஷ்பாதிகளை [2] ஸங்ரஹியாமல், திருவேங்கடமுடையான் சாத்தியருளின பத்ர, புஷ்பாதிகளைக் கொண்டே

1. பொருத்தமான காலங்களிற் செய்யும் தேவர் கடன், பிதுர்க் கடன்களையும்.
2. சம்பாதிக்காமல்.

திருவாராதனத்திற்கு உபயோகித்துக் கொண்டு அந்தச் சேஷம் கொண்டே தாங்கள் உஜ்ஜீவிக்கும் படிக்கும், இது உபலக்ஷண மாய்த் திருப்பவளத்துக்குப் போக்யமாகப் பண்ணும் [1] பய:பரமாந்ந (ஸூபாஸூபாதிகளும்) ஸூப அபூபாதிகளும் க்ஷேத்ரவாஸிகள் தங்கள் தங்கள் க்ருஹங்களிலே பாகம் பண்ணுதபடிக்கும், கோயி லுக்கு அநுசிதங்களான சாக, பல, மூலாதிகளை க்ஷேத்ரவாஸிகள் தங்கள் தங்கள் க்ருஹங்களிலே உபயோகித்துக் கொள்ளும் படிக்கும்,

கலா வந்நகதப்ராணா: ப்ராணிந: ஸர்வ ஏவ ஹி ।

[ कलावन्नगतप्राणाः प्राणिनः सर्व एव हि । ]

எனகிறபடியே சகல மனுஷ்யர்களுக்கும் எப்போதும் தேஹதார ணம் அன்னமூலமாகையாலே, அன்னபாகம் மாத்ரம் க்ருஹங்க ளிலே பண்ணிக்கொள்ளும்படிக்கும் திருமலையிலே வஸிக்கிற சேத நர்க்கு [2] ஸந்தான—நிதனங்கள் ப்ராப்தமாகைக்கு முன்னே ஸ்தலாந் தரத்திலே கொண்டு போகைக்கும், அசிந்திதமாக நிதனங்கள் உண் டானாலும் அடிவாரத்திலே கொண்டு போய் அந்தச் சரம சரீர [3] சோதனம் பண்ணும்படிக்கும்,

ம்ருகபக்ஷிசுகாதீநாம் ரூபம் க்ருத்வா பராத்பர: ।
க்ரீடதே ரமயா ஸார்த்தம் ஸூரிபி ஸ்த்தத்ர பர்வதே ॥

[ मृगपक्षिशुकादीनां रूपं कृत्वा परात्परः ।
क्रीडते रमया सार्धं सूरिभिस्तत्र पर्वते ॥ ]

என்று வாமந புராணத்திலிருக்கிறபடியே திருமலையிலே உத்பந்நங் களான ம்ருக பக்ஷிகள் பகவத் ஸ்வரூபங்களாகையாலே அவை களை ஒரு தாமஸ புருஷர்களும் ஹிம்ஸியாதபடியும், உத்ஸவ காலத் திலே திக்பலியோக்யமான திவ்ய நகர வீதியிலே [4] பாதுகா வாஹ நாத்யாரோஹணம் ஆகா தென்றும்,

---

1. பாலாற் செய்யப்படும் சிறந்த அன்னம், பருப்பு, பட்சணங்களும்.
2. பிள்ளை பிறத்தல், இறத்தல்கள்.
3. உடலுக்குரிய ஈமக்கடன்.
4. பாதுகை வாகனங்களில் ஏறிச் செல்லுதல்.

வேங்கடாசலயாத்ராயாம் பாதமேகம் முநீச்வரா: ।
ப்ரஹ்மஹத்யாதிபாபக்நம் ஸம்ஸாரார்ணவதாரகம் ॥

[ वेङ्कटाचलयात्रायां पादमेकं मुनीश्वराः ।
ब्रह्महत्यादिपापघ्नं संसारार्णवतारकम् ॥ ]

என்று, வாமந புராணாதிகளிலே அநேக ஸ்தலங்களிலே இருக்கையாலே ப்ரஹ்மஹத்யாதி பாபநிவ்ருத்திக்கும் பகவத் ப்ராப்திக்கும் ஸாதநமாகச் சொன்ன திருவேங்கட யாத்திரையிலே தேஹயாத்ரா சேஷமான வாஹநத்யாரோஹணம் அநுசிதமாகையாலும், விசேஷித்துத் திருமலை ஏறும்போது பாதுகா வாஹநங்கள் ஆகா வென்றும்,

சண்டாலயவநாத்யைச்ச பதிதை: பாபிபி: நரை: !
நாரோடும் சக்யதே திவ்யோ ஹ்யப்ராக்ருத சிலோச்சய: ||

[ चण्डालयवनाद्यैश्च पतितैः पापिभि र्नरैः ।
नारोढुं शक्यते दिव्यो ह्यप्राकृतशिलोच्चयः ॥ ]

என்றும்,

சண்டாலயவநாத்யைஸ்து வேதபாஹ்யைச்ச நாஸ்திகை: ।
நாரோடுமபி யச்சக்ய: பாவந: பர்வதோத்தம: ||

[ चण्डालयवनाद्यैस्तु वेदबाह्यैश्च नास्तिकैः ।
नारोढुमपि यश्शक्यः पावनः पर्वतोत्तमः ॥ ]

என்றும், வாமந புராணாதிகளிலே இருக்கையாலே சண்டாளாதிகள் திருமலை ஏறுதபடிக்கும், இப்படிப்பட்ட விசேஷாசாரங்கள் தாம் திருமலையிலே எவ்வளவு ஸ்தலபர்யந்த மென்னில்,

இதி ப்ருஷ்ட: சிவ: ப்ராஹ ஸ்வாமிந்நித்யச்யுதம் வச: ।
ஸ்வாமிம் ஸ்த்வயா ஸதா யத்ர ஸ்தீயதே வேங்கடேச்வர ! ||
தத்ரைவ தேவ ஸ்தாதவ்யம் மயா வ்ருஷகிரீச்வர ।
இதி ப்ருஷ்ட: புந: ப்ராஹ நீலமேகஸமத்யுதி: ||
ஆகல்பஞ்ச வஸாமீஹ வேங்கடாசலபூதரே ।
த்வமப்யத்ர ம்ருடாநீச மஹாதேவ வஸ ப்ரபோ ||
உபத்யகாயா மஸ்யாத்ரே: சோசிஷ்கேச திகீச்வர ।

[ इति पृष्टः शिवः प्राह स्वामिन्नित्यच्युतं वचः ।
स्वामिं स्त्वया सदा यत्र स्थीयते वेङ्कटेश्वर ! ॥
तत्रैव देव स्थातव्यं मया वृषगिरीश्वर !
इति पृष्टः पुनः प्राह नीलमेघसमद्युतिः ॥
आकल्पं च वसामीह वेङ्कटाचलभूधरे ।
त्वमप्यत्र मृडानीश महादेव वस प्रभो ॥
उपत्यकायामस्याद्रेः शोचिष्केश दिगीश्वर ! ]

என்று வராஹ புராணத்திலே ஸப்தமாத்யாயத்தில் இருக்கிற படியே, திருமலையிலே திருவேங்கடமுடையான் தன்னை ஸேவிக்க வந்த ப்ரஹ்மாதி தேவதைகளை அனுப்புகிற ப்ரகாரத்திலே ருத்ரனானவன் ஸ்வாமியைப் பார்த்து, "தேவரீர் ஸந்நிதியிலே அடியேன் விடை கொண்டிருக்கிறேன்" என்ன, பின்பு, திருவேங்கடமுடையானும் "திருமலை யடிவாரத்திலே இவ்விடத்துக்கு ஒரு யோஜனை தூரம் விப்ரக்ருஷ்டமான ஆக்நேய திக்கிலே நித்யவாஸம் பண்ணாய்" என்று அருளிச் செய்கையாலே, ஸந்நிதியிலே இருக்க ஆசைப்பட்டவனுக்கு அடிவாரத்திலே ஒரு யோஜனை பரிமிதமான ஆக்நேய திக்கிலே இராய் என்று நியமிக்கையாலே, அந்த ஆக்நேய திக்கில் சிவஸ்தான பரியந்தம் ஸ்வாமி ஸந்நிதி என்று தோன்றுகையாலும்,

வேங்கடாத்ரிஸமம் ஸ்தாநம் ப்ரஹ்மாண்டே நாஸ்தி கிஞ்சந !

[ वेङ्कटाद्रिसमं स्थानं ब्रह्माण्डे नास्ति किञ्चन । ]

என்றும்,

ஸ்ரீமாந் வ்ருஷகிரிச்சாயம் பாவநாநாம் ச பாவநः ।

[ श्रीमान् वृषगिरिश्चायं पावनानां च पावनः । ]

என்றும் திருமலையாழ்வார் [1] ஸர்வோத்க்ருஷ்டமாய்ப் பரம பாவநமென்று பிரஸித்தமாய் இருக்கச் செய்தேயும்,

1. எல்லாவற்றிலும் உயர்ந்ததாய் மிகத் தூய்மையுடையதென்று.

தீர்த்தஸ்ய பரிதஸ்தீரே புண்யே யோஜநமாத்ரகே ।
தப: பரமமாஸ்தாய ந்யவஸந் முநிஸத்தமா: ॥
நிரந்தரம் ஹர்ஷயுக்தா: தத்ப்ரஸாதாபிலாஷிண: ।

[ तीर्थस्य परितस्तीरे पुण्ये योजनमात्रके ।
तपः परममास्थाय न्यवसन् मुनिसत्तमाः ! ॥
निरन्तरं हर्षयुक्ताः तत्प्रसादाभिलाषिणः ]

என்று சில பரம ருஷிகள் ஸ்வாமிபுஷ்கரணியைச் சுற்றியும் ஒரு யோஜனை விஸ்தார ப்ரதேசமானது விசேஷித்துப் பரம பாவநமாக நிச்சயித்துப் பகவத் ஸந்நிதிபோல் அத்யவஸித்துத் தபஸ்ஸைப் பண்ணிக்கொண்டு நித்ய வாஸமாய் இருந்தார்களென்று ஸ்வர்ணமுகரீ மாஹாத்மியத்திலே இருக்கையாலும், திருக்கோனேரிக்கு வளைய ஒரு யோஜனை தூரம் மாத்ரம் இந்த ஆசாரமரியாதை [1] அநுஷ்டேய மென்று இப்படிப் பரம பாவநமான ஸ்தலத்தைத் திருவேங்கடமுடையானுடைய திருக்கோயிலாகவே [2] ப்ரதிபத்தி பண்ணியும், இப்படித் திருமலையிலே ஸ்தல வாஸிகள் அனுஷ்டிக்க வேண்டிய ஆசாரங்களைத் திருவுள்ளத்திலே நிச்சயித்து, திருவேங்கடமுடையான் தம்முடைய ஸந்நிதியிலே நடப்பிக்கும்படி ஸங்கல்பித்து அருள வேணுமென்று நிர்த்தாரணம் பண்ணி, நம்பியோடே அருளிச் செய்ய, நம்பியும் இத்தைக் கேட்டுத் திருவுள்ளம் உகந்துகொண்டு இப்படிப்பட்ட எம்பெருமானார் ஸங்கல்பத்தைத் திருவேங்கடமுடையான் [3]ஸபலமாக்கக் கடவர் என்று சிந்தித்துக் கொண்டு கண்வளர, அன்று ராத்திரி, அவர் ஸ்வப்நத்திலே திருவேங்கடமுடையான் ஸாக்ஷாத்கரித்து, "வாரீர் நம்பியே, நாம் முன்பு எம்பெருமானாருடைய நியமனத்தின்படியே திருவாழி திருச்சங்கைத் தரித்து இஷ்டமானாற் போலே, இப்போது அவர் நியமனமும் நமக்கு இஷ்டமாயிருக்கும்" என்று அருளிச் செய்ய, நம்பியும் கேட்டு, ப்ரபுத்தராய் இருந்து, ஸ்வப்ந வ்ருத்தாந்தத்தை லோகத்திலே பண்டித பாமரர்கள் எல்லாரும் அறியும்படி பண்ணியருளவேணும் என்று ஸந்நிதியிலே விண்ணப்பம் செய்ய, அப்போது திருவேங்கடமுடையானும்

1. கடைப்பிடிக்கத் தக்கது.
2. சிறப்பாகக் கருதியும்.
3. நிறைவேற்றக்கடவர்.

ஒரு பக்தன் மேலே ஆவேசித்து, "நாம் ராமாவதாரத்திலே வஸிஷ்டாதிகளை ஆதரித்தாப்போலே, நம்முடைய ஸர்வ ஸ்மாத்பரத்வத்தை ஸ்ரீ பாஷ்ய நிர்மாண முகத்தாலே உண்டாக்கின ஸ்ரீ பாஷ்யகாரர் நியமனத்தையும் ஆதரிக்கிறோம்; நம்மைப் பற்றினவர்களெல்லாரும் இந்த எம்பெருமானார் நியமனத்தை ஆதரிக்கக் கடவர்கள்" என்று அருளிச் செய்ய, பின்பு எல்லாரும் இந்தப் பகவதநுக்ரஹத்தைக் கேட்டு ஸந்துஷ்டராயிருக்க, அப்போது திருவேங்கடமுடையான் திருவுள்ளத்துக்கு அந்தரங்கரான செங்கனிவாயன் என்பாரொரு அர்ச்சகர் ஸ்ரீ சடகோபனை எடுத்து எல்லார் தலையிலும் வைத்து, "பரம ரிஷிகளான பல பாகவதர்கள் இந்த ஸ்தலத்திலே அநுஷ்டித்ததாய்த் திருவேங்கடமுடையானுக்கு மிகவும் உவப்பான இந்த ஆசார மரியாதையை இந்தத் திருமலையிலே அநுஷ்டித்தவர்கள் எம்பெருமானார்க்கு அந்தரங்கர்; அநுஷ்டியாதவர்கள் ஸ்வாமியினுடைய திவ்யாஜ்ஞாரூபமான வேதத்துக்கு வெளிப்பட்டவர்கள்" என்று திவ்யாஜ்ஞையிட எல்லாரும் அங்கீகரித்தார்கள்.

இப்படிப் பகவதாஜ்ஞா ஸித்தமான ஸதாசார விசேஷங்களை ஸர்வரும் அநுஷ்டிக்கிற காலத்திலே, நம்பி சிஷ்யனாயிருப்பான் ஒரு வைஷ்ணவன் [1]ப்ரக்ருதிவச்யனாய்த் திருவேங்கடமுடையான் சாத்தியருளிய புஷ்பமாலிகையைத் தரித்துக்கொண்டு நிற்க, அன்று ராத்ரி நம்பி ஸ்வப்நத்திலே திருவேங்கடமுடையான் ப்ரத்யக்ஷமாய், 'வாரீர், நம்பியே, உம்முடைய சிஷ்யன் ப்ரக்ருதிவச்யனாய் நமக்குப் பரிமளத் துரோகம் பண்ணினான்" என்றருளிச் செய்ய, நம்பியும் கேட்டு ப்ரபுத்தராய் "திருமாலைகள் ஒன்றையும் ஒருவர்க்கும் ப்ரஸாதிக்க வேண்டா; கலிதோஷத்தாலே அநுகூலர்க்கும் பாபபுத்தி பிறக்கையாலே இந்த ஸ்தலத்திலே அமர்யாதைகள் வருகின்றன; ஆகையாலே அடியேன் விண்ணப்பத்தை ஸத்தியமாக ஸங்கல்பித்தருள வேணும்" என்ன, ஸ்வாமியும் இந்த வார்த்தையைக் கேட்டு அர்ச்சக முகத்தாலே நாம் அர்ச்சாவதார பரிக்ரஹம் பண்ணினது ஆச்ரிதர் அபீஷ்டங்களைக் கொடுக்கைக்கு ஆகையாலே, உம்முடைய ப்ரீத்யர்த்தமாக இன்று தொடங்கி நாம் தரித்த புஷ்ப மாலிகை முதலியவைகளை ஒருவர்க்கும் கொடோம் என்ன, இந்த வ்ருத்தாந்தங்களை எல்லாம் எம்பெருமானார் கேட்டுத் திருவுள்ள முகந்துகொண்டு, இப்படி க்ஷேத்ர மாஹாத்மிய ஸித்தமாயும்,

1. உலகியலுக்கு வசப்பட்டவனாய்.

பகவதநுக்ரஹ மூலமாயும் நடக்கும்படி கட்டளைபண்ணி, இந்தத் தர்மங்களை மேல்வரும் காலங்களிலும் பரிபாலனம் பண்ணிக் கொண்டு வருகைக்கு,

வர்ணினோ நைஷ்டிகீ புத்தி: வைராக்யே யதி த்ருச்யதே ।
ஸங்கல்ப்ய புத்திம் தாம் தீர: காஷாயம் தாரயேத் படம் ॥

[ वर्णिनो नैष्ठिकी बुद्धिः वैराग्ये यदि दृश्यते ।
संकल्प्य बुद्धिं तां धीरः काषायं धारयेत्पटम् ॥ ]

என்று ஈச்வர ஸம்ஹிதா வசநத்தின்படியே, ப்ரஹ்மசாரியானவன் [1] ஆச்ரமாந்தரங்களில் விரக்தனாய், [2] ஊர்த்வரேதஸ்ஸாய், [3] மந்த்ரபுரஸ்ஸரமாகக் காஷாய வஸ்திரத்தைத் தரித்தவன் [4] நைஷ்டிக ப்ரம்ஹசாரியாகையாலே, அப்படிப்பட்ட அதிகாரியை ஸம்பாதித்து அவனுக்குத் திருவேங்கடமுடையான் ஸ்ரீசடகோபன், பரியட்டம்முதலான வரிசைகளை ப்ரஸாதிப்பித்து, திருவேங்கடமுடையான் கைங்கர்யத்திலே நியமித்துத் திருவேங்கடமுடையான் திருச்செல்வத்திலே தாழ்வு வாராதபடிக்குப் பராமர்சித்துக் கொண்டு, உத்தரோத்தரம் அபிவ்ருத்தமாம்படிக்கும், ஸ்வாமி ஸந்நிதியிலே நடக்க வேண்டிய ஆசாரங்கள் குறைவற்றிருக்கும்படிக்கும் கைங்கர்யபரர்க்கு அபசாரம் வாராதபடி ஹித உக்திகளைச் சொல்லி அவர்களைக் கொண்டு ஸ்வாமி கைங்கர்யம் நித்யமாக நடக்கும்படிக்கும், திருவேங்கடமுடையான் திருமேனிக்கும் திருப்பவளத்துக்கும் ஒக்கும்படி ஸமஸ்தமான [5] ஔபசாரிக, [6] ஸாம்ஸ்பர்சிக, [7] ஆப்யவஹாரிகங்களான உபசாரங்களை நடப்பித்துக் கொண்டு வருகைக்கும், தேசாதிபதிக்கும் எம்பெருமானர் திருவடிகளிலே பக்தி யுண்டாம்படி ஹிதோபதேசம் பண்ணுகைக்கும், அவன் மூலமாகத் திருவேங்கடமுடையான் ஸமஸ்தமான திருப்பணி, திருவாராதனம் கொண்டருளும்

1. இதர ஆச்ரமங்களில் வெறுப்புடையனாய்.
2. சுக்கிலம் மேல் நோக்கிச் செல்லும்படி செய்பவனாய்.
3. மந்திரங்களைச் சொல்லிக் கொண்டே.
4. வாழ்நாள் முழுதும் பிரமசாரி.
5. முகமன் செய்தல்.
6. திருமேனிக்குப் பாங்கான செயல்கள் (தொடுதல்).
7. உண்ணச் செய்யும் செயல்கள்,

படிக்கும், இப்படி அநேக பகவத் தர்மங்களை உண்டாக்குகைக்கும், இப்படி உண்டானவைகளைப் பரிபாலனம் பண்ணும்படிக்கும், ஸ்ரீ ராமாவதாரத்திலே குறைபடாமல் நித்திய கைங்கர்ய துரந்தரரான [1] திருவடி முத்ரையாக ஒரு [2] முத்ராங்குளீயகத்தைப் பண்ணுவித்து, திருவேங்கடமுடையான் நியமனங் கொண்டு அந்த ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவர் நித்யமாக அதனைத் தரித்துக் கொண்டிருக்கும்படிக்கும், திருவடி முத்ராங்கிதமான ஒரு கண்டையை, திருமுத்ராங்கிதமான ஒரு கட்டாரியிலே கட்டிக் கைங்கர்ய யாத்ரா காலங்களிலே கண்டா நாதத்துடனே(யும்) திருவடி முத்ராங்கித்மான ஒரு த்வஜத்தையும் பிடித்துக் கொண்டு, ஸேனைமுதலியாரைப் போலே செங்கோல் முத்ரா நிர்வாஹகராகைக்கும், ஸந்நிதியில் அனைத்துக் கொத்துப் பரிகரங்களும் அந்த ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவருக்கு [3]விதேயராய், ஸ்வாமி கைங்கர்யங்களைக் குறைவு வாராமல் நடத்தும்படிக்கும், திருவடி முத்ராங்குளீயகத்தைக் கொண்டு ஸ்வாமி ஸ்ரீ பண்டாரத்துக்கு நித்யம் ராத்ரி காலத்திலே திருவாசல்தோறும் முத்ரைபண்ணும்படிக்கும், இது முதலான அநேக பகவத் தர்மங்களை உத்தரிக்கைக்கும், ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவருக்கு ஸேனாபதி ஜீயர் என்று திருநாமம் சாத்தி, அருளப்பாடு ப்ரஸாதித்துக் கைங்கர்ய நிர்வாஹகர் என்று நியமித்தும், பின்பு திருப்பதியிலே ஸ்ரீ கோவிந்தப்பெருமாள் கைங்கர்யங்களும் தாழ்வு வாராதபடி தமக்குச் சிஷ்யனை கடியம் யாதவராயருக்கு அருளிச் செய்து, ஸ்ரீ கோவிந்தப் பெருமாள் திருச்சித்ரகூடமாஹாத்ம்ய ஸித்தமான திருவானித்திருநாளைப் பிரதி ஸம்வத்ஸரம் கொண்டருளும்படிக்கும் கட்டளை பண்ணியும், ஸ்ரீகோவிந்தப்பெருமாள் திருச்செல்வமானது உத்தரோத்தராபிவ்ருத்தமாம்படிக்கும்,

ஸ்ரீ சைலோபாத்யகாயாம் யதிகுலபதிநா ஸ்தாபிதாம் ஸ்ரீநகர்யாம்
கோதாம் கோவிந்ததாம்நி த்யுதிமதி பகவத்தக்ஷிணே வ்யூஹ
[லக்ஷ்மீ: ।
இத்யாவாஹ்யார்ச்யமாநா மவரகரத்ருதோத்புல்லகல்ஹாரஹஸ்தாம்
ஸேவே ஸ்ரீ பட்டநாதாஹ்வயமுநிதநயாம் தேவஸம்பத்ஸம்ருத்யை ||

---

1. அனுமான்.
2. முத்திரை மோதிரத்தை.
3. கீழ்ப்படிந்தவராய்.

[ श्रीशैलोपत्यकायां यतिकुलपतिना स्थापितां श्रीनगर्याम्
गोदां गोविन्दधाम्नि द्युतिमति भगवद्दक्षिणे व्यूहलक्ष्मीः ।
इत्याचाद्यार्च्यमाना मवरकरधृतोत्फुल्लकल्हारहस्ताम्
सेवे श्रीभट्टनाथाह्वयमुनितनयां देवसम्पत्समृद्ध्यै ॥ ]

என்று அபியுக்தர் சொன்னபடியே சூடிக்கொடுத்த நாய்ச்சியாரை வாமஹஸ்தத்திலே கல்ஹார புஷ்பத்தைத் தரிக்கும்படிக்கும், த்விபுஜையாயிருக்கும் வ்யூஹ லக்ஷ்மிபோலே ஐச்வர்ய ப்ரதையாய் இருக்கும்படிக்கும், ஸ்ரீ கோவிந்தப்பெருமாள் வலப்பார்சுவத்திலே திருப்ரதிஷ்டை கொண்டருளப்பண்ணி, யந்த்ரோத்தாராதிகளைப் பண்ணுவித்துத் திருவாராதனம் கொண்டருளும்படிக்கும் கட்டளை பண்ணி, ஸ்ரீ கோவிந்தப்பெருமாள் நைமித்திகோத்ஸவ காலங்களான திருப்பள்ளி ஓடத் திருநாள், திருத்தோப்புத் திருநாள், திருவூறல் திருநாள், திருப்பாரிவேட்டை, டோலா மஹோத்ஸவம் முதலான உத்ஸவம் கொண்டருளும்போது ஆழ்வார்திருமகளும் கூட எழுந்தருளி உபசாரங் கொண்டருளும்படிக்கும், "வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே" என்று பகவதநுபவம் பண்ணும்போது ப்ரதமத்திலே திருவேங்கடமுடையானை அநுபவிக்கைக்கு ஆசைப்படுகையாலே, திருவாடிப்பூரமான தம்முடைய திருநக்ஷத்திரத்திலே திருமலை அடிவாரத்திலே எழுந்தருளி ஸ்வயம் வ்யக்தமான திருவடிகள் ஸந்நிதானத்திலே கூடல் வளைச்சுக் கொண்டாடும்படி கட்டளை பண்ணியும், தநுர்மாசத்திலே மார்கழி நீராட்டமென்பதொரு உத்ஸவத்தை [1] ஸாப்தாஹிகமாகக் கொண்டருளும்படிக்கும், மறுநாள் திருத்தேர் உத்ஸவம் கொண்டருளும்படிக்கும், கனு என்னும் நாளானது மனுஷ்யோத்ஸவாதிகளுக்கு நிஷித்தமானாலும், ஸ்திரீகளுடைய சில [2] காம்ய வ்ரதாநுஷ்டானத்துக்கு [3] ப்ரசஸ்தமென்று ஜ்யோதிஸ் சாஸ்திரத்திலே இருந்தபடியாலே, அந்தக் கனு நாளையிலே ஆழ்வார் திருமகளுக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் திருமாலை சாத்தியருளி ஜகத்தை வாழ்விக்கும்படிக்கும், திருவேங்கடமுடையானும் ஸ்ரீ கோவிந்தப்பெருமாளும் [4] பின்னதிகரணஸ்தரானாலும் ஸ்ரீவைகானஸாகமத்திலே ஏக ஸம்ஹிதா ஸித்தங்களான நித்யாரா

---

1. ஏழு நாளாக. 2. விரும்பிய விரதங்களை அநுஷ்டிப்பதற்கு.
3. அவசியம் என்று. 4. வேறு வேறிடத்துள்ளவர்.

தன, உத்ஸவாதிகள் கொண்டருளுகையாலே, ஒரு கோயிலிலே எழுந்தருளியிருக்கும் பஞ்சபேரங்களைப் போலே ஐக்யந் தோன்றும் படி கட்டளை பண்ணியும், ஸ்ரீ கோவிந்தராஜனுக்கும் திருவேங்கட முடையானுக்கும் மங்களாசாஸனபரராயிருக்கும் பெரியோர்க ளான பரம பாகவதர்களுக்குக் கோவிந்தராஜன் திருக்கோவிலுக்கு வடவண்டை மாடத் திருவீதி கட்டுவித்து, ஸ்ரீ ராமாநுஜபுரமென்று திருநாமம் சாத்தி அதிலே அவர்கள் நித்யவாஸம் பண்ணும்படிக்கு க்ஷேத்ர [1] ஆராமங்களையும் கொடுத்து அவர்களை ப்ரதிஷ்டை பண்ணி யும், இப்படித் திருமலை திருப்பதியிலே அநேக பகவத் தர்மங்களை யும், ஸ்ரீ வைஷ்ணவ தர்மங்களையும் ப்ராவர்த்திப்பித்துப் பின்பு, கோயிலுக்கு எழுந்தருளுகிறதாகப் புறப்பட்டு, பெருமாள் கோயி லிலே எழுந்தருளினர்,

சேஷோ வா ஸைந்யநாதோ வா ஸ்ரீபதிர்வேதி ஸாத்விகை: ।
இதி ஸர்வைர் விதர்க்யாய யதிராஜாய மங்களம் ॥

[ शेषो वा सैन्यनाथो वा श्रीपतिर्वेति सात्त्विकैः ।
इति सर्वैर्वितर्क्याय यतिराजाय मङ्गलम् ॥ ]

என்றும்,

பாஷண்டத்ருமஷண்ட தாவதஹந: சார்வாகசைலாசநி:
பௌத்தத்வாந்த நிராஸவாஸரபதி: ஜைநேப கண்டீரவ: ।
மாயாவாதி புஜங்கபங்ககருட: த்ரைவித்ய சூடாமணி:
ஸ்ரீரங்கேச ஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோऽயம் முநி: ॥

[ पाषण्डद्रुमषण्डदावदहनः चार्वाकशैलाशनिः
बौद्धध्वान्तनिरासवासरपतिः जैनेभकण्ठीरवः ।
मायावादिभुजङ्गभङ्गगरुडः त्रैविद्यचूडामणिः
श्रीरङ्गेशजयध्वजो विजयते रामानुजोऽयं मुनिः ॥ ]

என்றும் சொல்லுகிறபடியே [2] ஸர்வாத்மோஜ்ஜீவநார்த்தமாக ஸ்ரீய: பதி - சேஷ - சேஷாசநாதிகளவதாரமோ என்னும்படி திவ்யாவதார வைபவமுடையராய், வைதிக ஸார்வபௌமரான எம்பெருமானார் தாமே,

---

1. பூஞ்சோலைகளையும். 2. எல்லா உயிர்களும் கடைத்தேற.

சுகாத்யா முநய꞉ கேசித் ப்ருக்வாத்யாச்ச தபோதநா꞉ ।
ப்ரஹ்லாதப்ரமுகா꞉ புண்யா அம்பரீஷாதயோ ந்ருபா꞉ ॥
விஷ்ணோரேவாபரம் தேஹம் மந்வாநாஸ்தம் நகோத்தமம் ।
பத்ப்யாமாக்ரமிதும் பீதா꞉ பர்யந்தேஷ்வேவ வர்திந꞉ ॥
தந்நிர்கத நதீஷ்வேவ குர்வாணா꞉ ஸ்நாநதர்பணே ।
தப꞉ குர்வந்தி வாஞ்சந்த꞉ ஸாக்ஷாத்கர்தும் ஜநார்தநம் ॥

[ शुकाद्या मुनयः केचित् भृग्वाद्याश्च तपोधनाः ।
प्रह्लादप्रमुखाः पुण्याः अम्बरीषादयो नृपाः ॥
विष्णोरेवापरं देहं मन्वानास्तं नगोत्तमम् ।
पद्भ्यामाक्रमितुं भीताः पर्यन्तेष्वेव वर्तिनः ॥
तन्निर्गतनदीष्वेव कुर्वाणाः स्नानतर्पणे ।
तपः कुर्वन्ति वाच्छन्तः साक्षात्कर्तुं जनार्दनम् ॥ ]

என்கிறபடியே [1]பராவரதத்வ விதக்ரேஸரரான சுகாதிகளான பரம யோகிகளும், ப்ரஹ்லாதாதிகளான பரம பாகவதர்களும் திருமலையாழ்வாரோடு அதில் ஸர்வ ஸாலபனைய் [2]வர்த்திக்கின்ற திருவேங்கடமுடையானோடு [3]வாசியற ஸமான ப்ரதிபத்திபண்ணி ப்ராக்ருத சரீரங் கொண்டு [4]ஸ்பர்சியாமல் இருந்தபடியையும், அப்படியே மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களும், "சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை" என்றும், "செங்கயல் திளைக்கும்சுனைத்திரு வேங்கட மடைநெஞ்சமே" என்றும், "திருவேங்கட மாமலை ஒன்றுமேதொழ நம்வினை ஓயுமே," "திருவேங்கடம் நங்கட்குச் சமன்கொள் வீடுதரும் குன்றமே," "உய்யக்கொள்வான் நின்ற வேங்கடம் நீணிலத்துள்ளது," "தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு," "வேங்கடமேவிண்ணோர் தொழுவதுவும்," "மெய்ம்மையால் வேங்கடமே மெய்வினை நோய்தீர்ப்பதுவும்," "வேங்கடத்துச்சி" இத்யாதி ஸ்தலங்களிலே திருமலையாழ்வாரைத் திருவேங்கடமுடையானோடு பேதமின்றிக்கே,

1. உயர்ந்த. தாழ்ந்த உண்மைப் பொருளை யறிந்தவருட் சிறந்தவரான.
2. எழுந்தருளியிருக்கின்ற.
3. வேறுபாடில்லாமல்.
4. தொடாமல்.

தங்களுக்குப் பரம [1]ப்ராப்யம் என்றும் கொண்டு, திருமலையாழ்வாரை மிதியோமென்று அடிவாரத்திலே யிருந்து மங்களாசாஸனம் செய்தும் போந்தபடியை அடியொற்றி, திருமலையிலே ஆழ்வார்களைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணாதே திருமலை அடிவாரத்திலே திருமலையாழ்வாரோடு ஒரு திருமேனிகளாய் எழுந்தருளி யிருக்கும்படி ப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணுவித்த நல்லடிக் காலத்திலே, திருச் சித்திரகூடத்தினின்றும் எழுந்தருளின ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளைத் திருமலை அடிவாரத்திலே, திருவேங்கடமுடையானோடு விசேஷமாகவே ஸ்ரீ வைகாநஸாகம ப்ரகாரத்தாலே திருப்ரதிஷ்டை கொண்டருளும்படி ஸங்கல்பித்து, அத்யயனோத்ஸவம் முதலான சில உத்ஸவங்களும், [2]பரஸ்பராவிரோதமாகக் கொண்டருளும்படி கட்டளையிட்ட நல்லடிக் காலத்திலே, காசி ராஜா ஸந்தானார்த்தமாகக் குடும்பஸஹிதனாய் வந்து திருவேங்கடமுடையானைச் சேவித்திருக்கத் திருவேங்கடமுடையானும், [3]"தேஹி மே ததாமி தே" என்று புராண ஸித்தமான லீலா விசேஷத்தை எல்லாருமறிந்து ஆச்ரயித்து உஜ்ஜீவிக்க வேணுமென்று, ராஜமஹிஷீ ஸ்வப்நத்திலே "நான் உனக்கு ஸந்தானம் தருகிறேன்; நீ உன் பூமியை எனக்குத்தா" என்று கேட்டருள, அவளும் [4]பர்த்ருபரதந்த்ரையாகையாலே பர்த்தா அநுமதி வேணுமென்ன, திருவேங்கடமுடையானும், ஆகில், நமக்கு மன்னரான ஸ்ரீ கோவிந்தப் பெருமாள் அநுமதி வேணுமென்று அருளியதாக ஸ்வப்ந வ்ருத்தாந்தம் உண்டாகையாலே, ஒரு கோயிலில் [5]பஞ்சபேரங்களுக்கு உண்டான ஐக்யம் போலே, இவர்க்கும் அச்சாவதார ஐக்யம் தோன்றுகையைக் கடாக்ஷித்துத் திருவேங்கடமுடையான் த்ரிஸந்த்யையிலும் திருவாராதனம் கொண்டருளும்போது வேத பாராயணம் கேட்டருளுகிற ஸமயத்திலே, திருவேங்கட மஹாத்ம்யத்தோடு திருச்சித்திரகூட மாஹாத்ம்யமும், அப்படியே ஸ்ரீ கோவிந்தராஜனும் சித்திரகூட மாஹாத்ம்யத்தோடு திருவேங்கட மாஹாத்ம்யத்தையும் கேட்டருளும்படிக்கும், திருமாலைக் காலத்திலே திரு

1. அடையத்தக்கது.
2. ஒன்றுக்கொன்று முரண் இல்லாமல்.
3. எனக்கு நீ தந்தால் உனக்கு நான் தருவேன்.
4. கணவனுக்கு வசப்பட்டவள்.
5. ஐந்து விக்கிரகங்களுக்கு.

வேங்கடமுடையான் நித்யாநுஸந்தானம் கேட்டருளும் போது 'ஊன்வாட உண்ணாது,' 'வாடமருதிடை போகி,' என்கிற திருமொழி இரண்டையும் கேட்டருளும்படிக்கும், ஸ்ரீ கோவிந்தப்பெருமாளும் அப்படியே 'ஒழிவில்காலம்,' 'உலகமுண்ட பெருவாயா' முதலானவைகளைக் கேட்டருளும்படிக்கும், திருமலை திருப்பதி ஆகிய இரண்டு ஸ்தலமும் ஒருஸ்தல மென்கைக்கு ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருமாளிகைகளில், உத்ஸவகாலங்களிலே, திருவேங்கடமுடையான், கோவிந்தராஜன், அலர்மேல் மங்கை நாய்ச்சியார், திருமகளார் ஸம்பாவனை என்று இரண்டு ஸ்தலத்திலும் ஏக ரீதியாக ஸம்பாவனை பண்ணும்படிக்கும் நியமித்தருளினார் என்று வேங்கடத்தைப் பதியாக வாழும் பெரியோர்கள் அருளிச்செய்வர்கள்.

## திருவேங்கடமுடையான்
## அருளிச்செயல்கள் கேட்டருளும் ப்ரகாரம்.

மார்கழிமாஸம் முப்பதுநாளிலும் [1]ப்ராஹ்ம முகூர்த்தத்திலே திருக்காப்பு நீக்கும்போது முதல்தேதி மாத்ரம் திருவாராதனங் கொண்டருளி யமுதுசெய்தருளின பிற்பாடு, திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி அநுஸந்தானம் ஆரம்பம்; மறுதினம் முதல் திருவாராதன காலத்தில் அநுஸந்தானம்; மத்யாஹ்நத்தில் உபதேசரத்ன மாலை; ஸாயங்காலத்தில் திருவாய்மொழி நூற்றந்தாதி அநுஸந்தானம்; திருக்கார்த்திகை தொடங்கி அத்யயனோத்ஸவம் கொண்டருளுமளவும், உபதேச ரத்னமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி அநுஸந்தானம்; மற்றைய மாஸங்களிலே ப்ராத காலத்திலே திருமாலை சாத்தி யருளும்போது திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி யநுஸந்தானம்; மத்யாஹ்நகாலத்திலே திருமாலை சாத்தியருளும் போது சிறிய திருமடல் அநுஸந்தானம்; ஸாயங்காலத்திலே நித்யாநுசந்தானம் அநுஸந்தேயம்; [2]தத்ப்ரகாரபேத :—ப்ரதமம், திருப்பல்லாண்டு, பூச்சூடல், காப்பிடல், சென்னியோங்கு, விண்ணீலமேலாப்பு, ஊனேறுசெல்வத்து, அங்கணெடுமதிள், தாயே தந்தை, ஊன்வாட உண்ணாது, வாடமருதிடை, ஒழிவில்காலம், உலகமுண்ட பெருவாயா, கங்குலும் பகலும், ஆழி எழ, அமலனாதி பிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆகியவை அநுஸந்தேயங்கள். நாய்ச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, பெரியதிருமொழி,

1. விடியற் காலையில். 2. அந்த வகைகளில் வேற்றுமை.

திருவாய்மொழி இவைகளின் திருமொழிகளை அநுஸந்திக்கும் போது அந்தந்த ப்ரபந்தங்களின் தனியன்கள் வேண்டா ஏக தேசத்திலே திருமொழிகளை அநுஸந்திக்கையாலே. அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆகிய ப்ரபந்தங்கள் இரண்டையும் பூர்ணமாக அநுஸந்திக்கையாலே, தனியன் அநுஸந்தானம் உண்டு; [1] ஏவம் பூர்வாச்சார்யாணாம் நியம:.

நித்யாநுஸந்தானத்தோடே "கங்குலும் பகலும்", மத்யாஹ்நம் திருமாலை சாத்தியருளும்போது சிறிய திருமடல் ஆகிய இவைகளை அநுஸந்திக்கைக்கு [2] நிதானம்:—

பூர்வகாலத்திலே, அற்றபற்றர் சுற்றிவாழும் அந்தணீர் அரங்கத்திலே, நித்யவாஸம் செய்துகொண்டு, பெரிய பெருமாள் திருமேனியிலே பரிவுடையராய் இருப்பார் ஒருவர், கோனேரியிலே நீராடி ஸமஸ்தாநுஷ்டானங்களையும் செய்தருளி, ஞானப்பிரானையும் திருவடி தொழுது, ஸேவாக்ரமத்தின்படியே உள்ளே எழுந்தருளி, எம்பெருமானாரையும் திருவடிதொழுது வென்று மாலையிட்டான் திருமண்டபத்திலே சென்று பெரியதிருவடி, த்வாரபாலர்களையும் ஸேவித்து எம்பெருமானார் திருமுன்பே அவர் புருஷகாரமாகத் திருவேங்கடமுடையானைத் தண்டம் ஸமர்ப்பித்து 'தாயேதந்தை' யென்னும் திருமொழியை யநுசந்தித்து உள்புகுந்து குலசேகரன்படியருகே நின்று, "[3] ஆபாதசூடமநுபூய ஹரிம் சயானம்"; என்கிற வாஸனையாலே, பூவார்கழல்கள் தொடங்கித் திருவபிஷேகமளவாக நன்றாக அநுபவித்துப் பூர்வ வாஸனையாலே அவசமாக, கங்குலும் பகலும் என்னும் பத்துப் பாட்டையும் தேவகானத்திலேயிட்டுப் பாடி நிற்கப் பின்பு எம்பெருமானும் உகந்து, அர்ச்சக முகத்தாலே "வாரீர் அரையரே, முன்பு ஆழ்வார் நம்பக்கல் மோஹித்து [4]நாயிகா தசாபந்நராய் நம்மை அநுபவித்த ப்ரகாரத்தை இப்போது நீர் [5]அநுகரித்துக் காட்டுகையாலே நமக்கு இனிதாய் இருந்தது இந்தத் திரு

1. இப்படிப் பூர்வாசாரியர்கள் கட்டளை.

2. காரணம்.

3. பள்ளிகொண்டுள்ள திருமாலைத் திருவடிமுதல் திருமுடிவரை அனுபவித்து.

4. தலைவியின் நிலையை யடைந்து.

5. அதே போல் செய்து.

வாய்மொழி; இப்படியே நம்பக்கல் கலியனும் [1]வ்யாமோஹத்தாலே நாயிகாதசாபந்நராய் அநுபவித்த சொல்லிலே ஒன்றைச்சொல்லி, அநுகரித்துக் காட்டீர்" என்ன, அப்போது ஆழ்வார் அரையரும் [2]அதிமுக்தஹ்ருதயராய் அவனருளிச்செய்யும் ஈரச்சொல்லிலே ஈடு பட்டவராய், 'காரார்வரைக்கொங்கை' என்று தொடங்கிக் கலியன் மடலூர்ந்து பகவதநுபவம்பண்ணும் ப்ரபந்தத்தைப் [3]பரவச காத்ர ராய் நாயிகாதசாநுபவத்தை அநுகரித்து அருளிச்செய்ய, திருவேங் கடமுடையானுங் கேட்டுத் திருவுள்ள முகந்து, பூவார்கழல்களான ஸ்ரீ சடகோபன், திருமாலை வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்தருளப் பெற்று க்ருதார்த்தராய் இருக்க, அப்போது ஸந்நிதியிலிருக்கும் பெரியோர்களான அஞ்ஜனவெற்பனூர், எம்பெருமானூர், திரு வேங்கட ஜீயர் முதலானூர்கள் எல்லாருமாகத் திருவுள்ள முகந்து, இந்த மத்யாஹ்ந ஸமயத்திலே திருமாலை சாத்தியருளும்போது, சிறிய திருமடல் அநுசந்திக்கக் கேட்டருளித் திருமாலை சாத்தி யருளக் கண்டவர்கள். இந்தப் பகவதாஜ்ஞையாலே திருவீதி எழுந்தருளும்போதும், இந்தத் திருமடல் தானே கேட்டருளக் கடவர் என்றும்,

முன்பு, அழகிய மணவாளப் பெருமாள் இங்கு [4]வலசையாய் எழுந்தருளி யிருந்து, மீண்டும் எழுந்தருளும்போது தமக்கு அஸா தாரணமான "கங்குலும் பகலை" ஸமர்ப்பித்தார் என்று ஐதிஹ்ய முண்டாகையாலும், இப்போது 'கங்குலும் பகலை'க் கேட்டுத் திருவுள்ள முகக்கையாலும், நித்யம் ஸாயங்காலத்திலே நித்யாநு ஸந்தானத்துடனே இந்தத் திருவாய்மொழியையும் கேட்டருளக் கடவர் என்று நியமித்தார்கள்.

[5](பஞ்சபர்வாதிகளிலே) திருவேங்கடமுடையான் அத்யய னோத்ஸவ காலங்களிலே அருளிச்செயல்கள் கேட்டருளும் ப்ரகாரம் :—

அத்யயனோத்ஸவம் நாள் 24, தண்ணீரமுதுவழி திருத்தும் நாளுடன். சிறிய திருவத்யயனத் தொடக்கம் மார்கழி மாஸத்தில்

1. பெருங் காதலாலே.
2. மிக அன்புள்ள மனத்தராய்.
3. உடலை மறந்தவராய்.
4. வேற்று நாட்டில் சில நாட்கள் தங்க.
5. ஏகாதசி முதலிய ஐந்து காலங்களிலே.

சுக்லபக்ஷ ஏகாதசி முன்னாகப் பதினோருநாள்; முதல் திருநாள் ராத்ரி, முதல்திருவந்தாதி முதல் மூன்று திருவந்தாதிகள், நான் முகன் திருவந்தாதி, திருவிருத்தம் ஆகிய இவைகளிலே [1] ஆத்யங்க ளான பாசுரங்கள் அநுஸந்தேயம்; இரண்டாம் நாள் ப்ராதஃ இயற்பா ஆயிரம் அநுஸந்தேயம்; ராத்ரி திருப்பல்லாண்டு தொடக் கம்; மூன்றும் நாள் ப்ராதஃ பெரியாழ்வார் திருமொழி இரண்டு பத்து; ராத்திரி சென்னியோங்கு; நாலாம் நாள் ப்ராதஃ பெரியாழ் வார் திருமொழிக்குறை; ராத்ரி விண்ணீல மேலாப்பு; ஐந்தாம் நாள் ப்ராதஃ திருப்பாவை, நாய்ச்சியார் திருமொழி; ராத்ரி ஊனேறு செல்வத்து; ஆறும்நாள் ப்ராதஃ பெருமாள் திருமொழி முதலாகக் கண்ணிநுண் சிறுத்தாம்பு முடிவாக முதலாயிரம் எல்லாம்; ராத்ரி திருமொழி தொடக்கம்; (அதாவது) வாடினேன் வாடியும், தாயே தந்தையும் அநுஸந்தேயம்; ஏழாம் நாள் ப்ராதஃ திருமொழி இரண்டு பத்து; ராத்ரி வாடமருதிடைபோகி; எட்டாம் நாள் ப்ராதஃ திரு மொழி மூன்றும் பத்தும், நாலாம் பத்தும்; ராத்ரி பண்டைநான் மறை; ஒன்பதாம் நாள் ப்ராதஃ ஐந்து, ஆறு, ஏழு பத்துக்கள்; ராத்ரி தெள்ளியீர் தேவர்க்கும்; பத்தாம் நாள் ப்ராதஃ எட்டு, ஒன் பது பத்துக்கள்; ராத்ரி, காதில் கடிப்பிட்டு; பதினோராம் நாள் ப்ராதஃ பத்தாம் பத்தும், பதினோராம் பத்தும்; ராத்ரி திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருமொழி சாற்றுகையும்; இப் படிப் பதினோரு நாளிலும் ராத்ரி அரையர் கோயில் திருமொழியை இசையுடனே அநுஸந்திப்பர்; மறுநாள் ப்ராதஃ சேஷம் அநுஸந் தேயம்.

[2] அநந்தரம், சுக்ல ஏகாதசி தொடங்கிப் பெரிய திருவத்யயனத் திருநாள் பத்திலும் ப்ராதஃ காலத்திலே அமுது செய்தருளின பின்பு நாலு வேதங்களும், இதிஹாஸ புராணங்களும் அநுஸந்தேயங்கள்; ராத்ரி காலங்களிலே நித்யம் திருவாய்மொழி ஒரு பத்தாக அநுஸந் தேயம்; பதினோராம் நாள் ராத்திரி கண்ணிநுண் சிறுத்தாம்பு; பனிரண்டாம் நாள் ராத்ரி (ராமாநுச) நூற்றந்தாதி; மறு நாள் ஞானப்பிரான் திருவாய்மொழி கேட்டருளுவர். மறு நாள் தண் ணீரமுது வழி திருத்துகை.

திருமலையிலே அத்யயனோத்ஸவத்திலே இரண்டாம் நாள் தொடங்கி இருபத்து மூன்று நாளிலும் ஸாயங்காலத்திலே மலை

1. முதலாவதான, 2. பிறகு.

குனிய நின்ற பெருமாள் திருவீதி யெழுந்தருளும்போது வடக்குத் திருவீதியிலே சிறிய திருமடல் அநுஸந்தானம்; அத்யயனோத்ஸவத்திலே முதல் நாள் திருமாமணி மண்டபத்திலே கேட்டருளின ப்ரபந்தங்கள்; மற்றைய நாள் தொடங்கிப் பெரிய ஸந்நிதியிலே உசித காலங்கள் தோறும் அநுஸந்தேயங்கள். ஸேனை முதலியார் திருநக்ஷத்திரத்துக்கு மலையகுனிய நின்ற பெருமாள், ஸேனை முதலியார் ஸந்நிதிக்கு எழுந்தருளும் வேளையிலே திருவிருத்தம் அநுஸந்தேயம்; திருவேங்கடமுடையான் பெரியதிருவத்யயனச் சாற்றுமுறை நாளிலே நித்யம் போலே ஸேனை முதலியாரோடும் எம்பெருமானாரோடும் திருமாமணி மண்டபத்திலே திருவாய்மொழி கேட்டருளி, வேதங்கள் முன்பாகச் சாற்றித் தீர்த்தம் ஸ்ரீ சடகோபன், ப்ரஸாதங்கள் விநியோகமான பின்பு, எம்பெருமானார் பெரிய பெருமாளை மங்களாசாஸனம் செய்கைக்குத் திருமாமணி மண்டபத்திலிருந்து ப்ரதக்ஷிணமாகப் புறப்பட்டருளி, ஜீயாள், ஸ்ரீ வைஷ்ணவாள், அரையர் எல்லாருமாக ஸ்தோத்ர ராஜாநுசந்தனம் பண்ணப் புறப்பட்டு, வென்று மாலையிட்டான் திருமண்டபத்திலே பெரிய பெருமாள் திருமுன்பே சென்று நின்றருள, பின்பு ஜீயர் முதலானோர்கள் எம்பெருமானார் அநுஸந்தான ப்ரகாரமாக, திருப்பல்லாண்டில் இரண்டு பாட்டும், ஒழிவில் காலம், உலகமுண்ட, தாயே தந்தை, அகிலபுவன ஜந்ம (ஆகியவைகளையும்) சரணாகதிகத்யத்திலே பூர்வ கண்டம் ஆகியவற்றையும் அநுஸந்திக்க, அவ்வளவில் திருவேங்கடமுடையானும், திருமாலை, பரிவட்டம், ஸ்ரீ சடகோபன், ப்ரஸாதம், உடுத்துக் களைந்த பீதகவாடை, பூவார் கழல்கள் முதலான வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்தருள, அவ்வளவில் மீளவும் எம்பெருமானார் அநுஸந்தான க்ரமமாக, அகலகில்லேன், ஒழிவில் காலம், தாயே தந்தை ஆகிய மூன்று பாட்டும், 'அகிலபுவனஜன்ம' என்கிற ச்லோகமும், 'மனோவாக்காயை:' என்கிற சூர்ணிகையும் எல்லாருமாக அநுஸந்திக்க, பின்பு, ஸந்நிதி பரிகரங்கள்,

ஸ்ரீ ரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸ:
ஸ்ரீ வேங்கடேச கருணாகலசார்ணவேந்த்ர: |
ஸ்ரீ தேவராஜ ஜயடிண்டிம வாங்மயஸ்ரீ:
ராமநுஜோ விஜயதே யதிராஜராஜ: ||

"ஜயதி ஸகலவித்யாவாஹிநீ ஜந்மசைல:"

[ श्रीरङ्गराजचरणाम्बुजराजहंसः
श्रीवेङ्कटेशकरुणाकलशार्णवेन्द्रः ।
श्रीदेवराजजयडिण्डिमवाङ्मयश्रीः
रामानुजो विजयते यतिराजराजः ॥
" जयति सकलविद्यावाहिनीजन्मशैलः " ]

இத்யாதி,

ஸர்வதேசதசாகாலே ஷ்வவ்யாஹத பராக்ரமா ।
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததா மபிவர்த்ததாம் ॥

[ सर्वदेशदशाकालेष्वव्याहतपराक्रमा ।
रामानुजार्यदिव्याज्ञा वर्धता मभिवर्धताम् ॥ ]

என்கிற ச்லோகங்களையும் அநுஸந்திக்க, 'அருளப்பாடு நம் இராமாநுசன்' என்று விடை ப்ரஸாதித்தருள, எம்பெருமானாரும் க்ருதார்த்தராய் மீளவும் ப்ரதக்ஷிணமாகப் புறப்பட்டருள, பின்பு இராமாநுஜமுடையாரும் யதிராஜவிம்சதி முதலானவை யநுசந்திக்க, ஸமஸ்த ந்ருத்த கீத வாத்யத்துடன் தம்முடைய ஸந்நிதிக்கு எழுந்தருளித் திருவாலத்தி கொண்டருளித் தம்முடையரானவர்க்குத் தீர்த்தம், ப்ரஸாதம், அநந்தாழ்வான் (முதலிய) எல்லாம் ப்ரஸாதித்தருளி வாழ்வித்தருளுவர். இந்தப்படி, பனிரண்டாம் திருநாளிலும் நூற்றந்தாதி அநுஸந்தானமான பின்பு எம்பெருமானார் மங்களாசாஸன க்ரமம். இந்தப்படி, [1] தத்காலீநர்களான பெரியோர்கள் நியமனம். இப்படி எம்பெருமானாருடைய இதர ஸ்தல [2] வ்யாவ்ருத்தாகாரமான மங்களாசாஸனமே திருமலையிலே [3] மூலபேரம் ப்ரதானமென்கைக்கு நிதானம் என்று சொல்லுவர்கள்.

திருமலைத் திருநாளில் முதல் நாள் ப்ராதః காலத்திலே அநுஸந்தானம் இல்லை; ராத்ரி முதல் திருவந்தாதி; இரண்டாந் திருநாளில் ப்ராதஸ் ஸாயங்களிலே இரண்டாம் திருவந்தாதி; மூன்றும் நாளில் ப்ராதஸ்ஸாயம் மூன்றும் திருவந்தாதி; நாலாந் திருநாளிலே ப்ராதஸ் ஸாயம் நான்முகன் திருவந்தாதி; ஐந்தாம் திருநாளில் ப்ராதః திரு

1. அக்காலத்தில் இருந்தவர்களான.
2. வேறுபாடான.
3. மூல விக்கிரகம்.

விருத்தம் ஒருரு அநுஸந்தேயம்; பின்பு முதலாயிரம் தொடங்க வேண்டும்; ராத்ரியும் திருவிருத்தம் ஒருரு அநுஸந்தித்து முதலாயிரம் சேஷம் அநுஸந்தேயம்; ஆறும் திருநாள் ப்ராதஸ் ஸாயங் காலங்களிலே பெரிய திருவந்தாதி ஒருரு அநுஸந்தித்துப் பின்பு முதலாயிரம் சேஷம் அநுசந்தேயம். ஏழாந் திருநாளில் ப்ராதஃ திருமொழி தொடக்கம்; திருத்தோப்பு ஸஞ்சார காலத்திலும், ராத்ரி காலத்திலேயும் திருமொழி தானே அநுஸந்தேயம்; எட்டாந் திருநாளிலே திருத்தேரடியிலும் திருமொழி தானே [1] த்விதீயாவ்ருத்தியாக அநுஸந்தேயம்; நிலையில் திருத்தேரடியிலே எழுந்தருளியிருக்கும்போது பெரியாழ்வார் திருமொழியும், பெரிய திருமொழியும் சாற்ற வேணும்; திருமொழி சாற்றின பின்பு, திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் மூன்றும் அனுஸந்தேயம்; திருத்தேரினின்று இறங்கியருளிக் கோயிலுக்கு எழுந்தருளுகிறபோது திருவாசிரியம்; ராத்ரி முதலாயிரம் சேஷம்; ஒன்பதாம் திருநாள் ப்ராதஃ முதலாயிர சேஷம், திருக்குறுந்தாண்டகமும் திருநெடுந்தாண்டகமும்; மத்யாஹ்ந காலத்தில் சூர்ணாபிஷேக காலத்திலும் திருவீதியியலில் திருச்சந்த விருத்தம்; ராத்ரி நூற்றந்தாதி; அவகாசமுண்டானால் ஆவ்ருத்தி; பின்பு, எம்பெருமானார் திருமுன்பே சாற்றுகை; பத்தாம் திருநாளிலே ஸ்ரீ புஷ்பயாககாலத்திலே த்வாதசாராதன காலத்திலே திருவாய்மொழி அநுஸந்தேயம்; ஆறும் திருநாளிலே ஸாயங்காலத்திலே வஸந்தோத்ஸவார்த்தமாகச் சூர்ணாபிஷேகம் கொண்டருளித் திருவீதி யெழுந்தருளுகிற போது அநுஸந்தானம் இல்லை.

திருமலையிலே இயற்பா வொழிந்த மூவாயிரத்திலும் திருவேங்கட முடையான் விஷயமான பாட்டுக்களை இரட்டிக்கைக்கும், இயற்பாவில் பாட்டுக்களை இரட்டிக்காமைக்கும் நிதானம் :—எம்பெருமானார் தாமே, நாதமுனி முதலான ஸம்ப்ராதாய முகத்தாலே 'செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர் இவர்' என்று கேட்டருளினபடியே, முதலாழ்வார்களாகிய மூவர் திருவுள்ளக் கருத்தைக் கருத்தையும் நன்ருக அறிந்தபடியாலே திருவந்தாதி மூன்றிலும், திருவேங்கடமுடையானே [2] ப்ரதிபாத்யன் என்றும், இந்தத் திருவந்

1. இரண்டாவது முறை சொல்லுதல்.
2. சொல்லப்படுபவன்.

தாதிகளோடு திருமந்திரத்திலே [1] வ்யக்த சதுர்த்யர்த்த ப்ரதிபாதன த்வாரா ஸமானார்த்தமான இயற்பா ஸேஷத்துக்கும் இவனே ப்ரதிபாத்யன் என்றும் நிச்சயித்து அத்யயனோத்ஸவத்திலே திருவேங்கடமுடையான் ப்ரதமம் கேட்டருளும்படி நியமிக்கையாலே, இயற்பாவுக்குத் திருவேங்கடமுடையானே ப்ரதிபாத்யனாகையாலே, திருவேங்கடமுடையான் விஷயமான பாட்டுக்களை இரட்டிக்க வேண்டா வென்று பூர்வர்கள் நியமனம். உலகமுண்ட பெருவாயா, தாயே நந்தை முதலான திருமொழிகள் போலே ஆழ்வாருக்குப் பகவத் விஷயத்திலே [2] ஆஜன்ம ஸித்தமான ப்ராவண்ய ப்ரதிபாதநத்தைப் பற்றித் திருவிருத்தத்திலே, முலையோ முழுமுற்றும் என்கிற பாட்டை அநுஸந்தான காலத்திலே இரட்டிக்கை; யாதேனு மோராக்கை என்கிற பாட்டை இரட்டிக்கிறது திருக்கோட்டியூர்நம்பி ஐதிஹ்யத்தைப்பற்றி என்று பெரியோர்கள் அருளிச் செய்வார்கள்.

திருமலை திருப்பதி ஆகிய இரண்டு ஸ்தலங்களும் ஏகமென்று எம்பெருமானார் தாமே நியமித்தார் என்று ஐதிஹ்யமிருக்கையாலே திருப்பதியிலே கோவிந்தராஜன் அத்யயனோத்ஸவம் கொண்டருளுமளவும் திருமலையிலே ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருமாளிகைகளிலே திவ்யப் பிரபந்தங்களுக்கு அத்யயன அத்யாபனங்கள் இல்லை.

ப்ரபந்தங்களில் ச்ரேஷ்டமான திருவாய்மொழி முதலாக வாதல், இதரப் பிரபந்தங்கள் முதலாகவாதல் அநுஸந்தியாதே, இயற்பாவை முதலாகத்தொடங்கி அநுஸந்திகைக்கு நிதானம்:— எம்பெருமானார் நியமனத்தைப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த கலியனருள்பாடு. திருவேங்கடமுடையான் கோவிந்தராஜன் இருவரும் ப்ரபந்தங்களைத் திருச்செவி சாத்தியருளும்போது இரட்டிக்கிற பாட்டுக்களுக்கு (அடிக்குச்சி) அடிவரவு :— இயற்பா, முதலாயிரம், திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவாய்மொழி, நூற்றந்தாதிகள், உபதேசரத்னமாலை வரிசை. ப்ரதமம் இயற்பாவில் திருவிருத்தத்திலே இரட்டிக்கும் பாட்டுக்கள் 'முலையோ முழுமுற்றும்,' 'யாதானுமோராக்கை' சிறியதிருமடலில், 'நாராயணா ஓ மணிவண்ணா நாகணை

1. நான்காம் வேற்றுமை விரியின் பொருளால் அறிவிக்கும் வழியாக.
2. பிறந்தது முதல் உண்டான காதலை அறிவிப்பதை.

யாய், வாராய் என் ஆரிடரை நீக்காய்,' 'சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே,' 'ஆராமம்சூழ்ந்த வரங்கம்,' என்கிற மூன்று வாக்கியமும்; பெரிய திருமடலிலே, பொன்னியலு மாடக்க வாடம் கடந்துபுக்கு என்னுடைய கண்களிப்ப நோக்கினேன், 'மன்னுமரங்கத்தெம் மாமணியை' 'தென்தில்லைச் சித்திரகூடத் தென் செல்வனை, மின்னிமழை தவழும் வேங்கடத்தெம் வித்தகனை,' 'மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை,' என்கிற மூன்றும்; முதலாயிரத்திலே, சுற்றுமொளி வட்டம், உன்னையும் ஒக்கலையில், செங்கமலக் கழலில், என்னிது மாயம், மின்னனைய நுண்ணிடையார், தென்னிலங்கை மன்னன், மச்சொடு மாளிகை யேறி, கொண்டல் வண்ணா இங்கே போதர்கண்டாய் இங்கே, கடியார் பொழிலணி வேங்கடவா, மூன்றெழுத்ததனை, தன்னடியார் திறத்தகத்து, ஏதங்களாயின, உறகல் உறகல், பருப்பதத்து; திருப்பாவையில், ஓங்கியுலகளந்த, நாயகனாய், உந்து, மாரிமலை, அன்றிவ்வுலகம், கூடாரை; நாய்ச்சியார் திருமொழியில் மத்தநன் நறுமலர், காட்டில்வேங்கடம், வெள்ளை விளிசங்கு, மென்னடை, சங்கமாகடல், மதயானை, நாறு நறும்பொழில், பாடுங் குயில்காள், மழையே மழையே, பொங்கோதம் சூழ்ந்த, மாதவனென் மணியினை; பெருமாள் திருமொழியில், வாயோ ரீரைஞ்னூறு, வன்பெருவானகம், செடியாய, தேவரையும், குரைகடலை; திருச்சந்த விருத்தத்தில் செழுங்கொழும் பெரும்பனி, நடந்த கால்கள், கரண்டமாடு, கடைந்து பாற்கடல், அரங்கனே தரங்க நீர், குலங்களாய, இரந்துரைப்பது, வைது நின்னை, அத்தனாகி; திருமாலையில், பச்சைமாமலை, குடதிசை, மேம்பொருள்; அமலனாதிபிரானில், மந்திபாய்; திருமொழியில், எம்பிரா னெந்தை, குலந்தரும், பேசுமின் திருநாமம், வந்தாய் என் மனம், கூடியாடி, உளங்கனிந்திருக்கும், வெந்திறல் வீரரில், மாவாயினங்கம், எய்யச் சிதைந்தது, கருமுகில்போல்வதோர் மேனி, என் துணை என்று, அன்றிய வாணன், வேடார் திருவேங்கடம், சிந்தை தன்னுள், வாம்பரியுக மன்னன், சிந்தனையை, துளங்கு நீள்முடி, குலையார்ந்த, ஆங்குவெந்நரகத்து, சேயோங்கு, எங்களுக்கருள் செய்கின்ற, செருவரைமுன், நீணிலா முற்றத்து, அருவிசோர் வேங்கடம், தரங்க நீர், மிக்கானை, மற்றுமோர் தெய்வம், மஞ்சயர் மாமதி, பண்ணுலா மென்மொழி, புனைவளர், வலம்புரி யாழியனை, பொன்னை மாமணியை, சொல்லாய் பைங்கிளியே, இங்கே போதும்

கொலோ, கெண்டை யுண்கணும், தேனொடு வண்டாலும், படை நின்ற, வேம்பின் புழு ; (திருக்குறுந்தாண்டகம்) பின்பு, திருநெடுந் தாண்டகத்தில் நீரகத்தாய், பொன்னுளை, பட்டுடுக்கும், முளைக் கதிரை, கன்று மேய்த்து, மைவண்ணநறுங் குஞ்சி ; திருவாய் மொழியில், கண்ணுவான், நம்பியை, எந்தாய் தண் திருவேங்க டத்து, பற்பநாபன், வேங்கடங்கள், குன்றமேந்தி, வார்புனலந்த ணருவி, இலிங்கத்திட்ட, ஏனமாய் நிலங்கீண்ட, வாரா வருவாய், அகலகில்லேன், என் திருமகள் சேர், இன்றிப்போக, தலைமேல் புனைந்தேன், மேயான் வேங்கடம், திருமாலிருஞ்சோலை மலையே, உற்றே னுகந்து, கோலமலர்ப்பாவை ; நூற்றந்தாதியில், கள்ளார் மொழில், மொழியைக் கடக்கும், தாழ்வொன்றில்லா, ஆண்டுகள் நாள், நின்றவண் கீர்த்தியும், இடுமே ; திருவாய்மொழி நூற்றந் தாதிப் பாட்டுக்களிலே கோயில் திருவாய்மொழிப் பாட்டுக்களெல் லாம் இரட்டிக்க வேணும். உபதேச ரத்னமாலை, ஆழ்வார்கள் வாழி, உண்டோ வைகாசி, இன்று திருவாடிப்பூரம், ஆழ்வார்கள் தாங்கள், எம்பெருமானார், தெள்ளியதா நம்பிள்ளை, நம்பெருமாள், அன்ன புகழ், ஞானமனுட்டானம். திருக்குறுந்தாண்டகம் தனித் திவ்யப்பிரபந்தமே யாகிலும், திருமங்கையாழ்வார் ஸம்ஸாரத்தில் ஆர்த்தியாலே திருநெடுந்தாண்டகத்தோடு ப்ரதமம் ஏககாலத்திலே அருளிச்செய்கையாலே தனித்து அநுஸந்தானம் இல்லை. ஆகை யாலே சாற்றும்போதும் இதற்குச் சாற்றுகை இல்லை. ஆகை யாலே அநுஸந்தான காலத்திலே ஒருபாட்டுக்கே இரட்டிக்கை (அஃதாவது) பிண்டியார் என்கிற பாட்டை இரட்டிக்கை அர்த்த கௌரவத்தாலே. திருப்பள்ளி எழுச்சிக்கு [1] வக்த்ருபேதம் உண் டாய்த் தனித்த ப்ரபந்தமானாலும், திருப்பாவையோடு [2] ப்ரபோதன பரத்வாத் ஏகார்த்த ப்ரதிபாதகமாகையாலே தனித்து அநுஸந்தா னம் இல்லாமையாலும் ஸந்நிதியிலே தனித்துச்சாற்றுகை இல் லாமையாலும் ஒரு பாட்டே இரட்டிக்க வேண்டியது.

இந்தப் [3] பௌர்வாபர்யத்துக்கு ஹேது, 'அஞ்சு குடிக்கொரு சந்ததியாய்' என்று ஆண்டாளுக்கும் ஆழ்வார் உத்தேச்யராகை

1. சொல்வோரின் வேற்றுமை.
2. பள்ளி யுணர்த்துகின்ற ஒரே பொருளைக் கூறுவதால்.
3. இது முன் இது பின் என்பதற்கு.

யாலே. திருவாசிரியமும் தனித்துப் பிரபந்தமானதனாலும் [1] காதாதசக மாகாமையாலும் தனித்து அநுஸந்தானமும் சாற்றுகையும் [2] க்வா சித்கம் ஆகையாலும் ஒருபாட்டே இரட்டிக்கவும். நூற்றந்தா திக்கு 'இருப்பிடம்' என்கிற பாட்டு இரட்டிப்பது அர்த்தகௌரவத் தாலே. திருவாய்மொழி முதலான மற்றப் பிரபந்தங்களைச் சாற்றும் போது இரண்டுபாட்டு இரட்டிக்கை. உபதேசரத்னமாலையிலே 'மன்னுயிர்காள்' என்கிற திருப்பாட்டு மணவாளமாமுனிகள் ஸ்ரீ ஸூக்தியல்லாமையாலே [3]ப்ரபந்தாத் பஹிர்பூதமாகையாலும் கிடாம்பி அப்புள்ளான், மணவாளமாமுனி விஷயமாக அருளிச் செய்ததாகையாலே ப்ரபந்தத்தோடு சேர்த்துச் சாற்றும்போது ஒற்றை யுருவாகஅநுஸந்தேயமென்று ஸம்ப்ரதாயம்.

திருமலைத் திருநாளில் வீதியில் அநுஸந்தித்த மூவாயிரத்துக் கும், நூற்றந்தாதிக்கும் இயல்சாற்று, எம்பெருமானார் ஸந்நிதியிலே அநுஸந்தேயம்; திருவாய்மொழி முதலானவைகளை அநுஸந்திக்கும் போது ஒரு பாட்டைத்தானே இரட்டித்து, திருப்பல்லாண்டில் இரண்டு பாட்டையும் சேர்த்து இரட்டிக்கைக்கு ஹேது, பாகவத விஷயத்தில் மங்களாசாஸனம், பகவத் விஷய மங்களாஸாசனத் துக்கு எல்லை நில மாகையாலே.

வென்று மாலையிட்டான் திருமண்டப [4] சப்தார்த்தः:— வென்று—சிசுபாலனை வென்று; மாலை இட்டான்—ருக்மிணிப் பிராட்டிக்குத் தோளிலே மாலையைப் போட்டான் என்று கிருஷ் ணன் திருநாமம். ஆகையாலே வென்று மாலையிட்ட பெருமாள் என்கிறதற்கு ஸ்ரீ கிருஷ்ணசர்மா என்றும், [5] ராமாநுஜதாஸன் என் றும் திருநாமம் தென் தேசத்திலே ப்ரஸித்தம். பூர்வ காலத்திலே வென்று மாலையிட்ட பெருமாள் என்று ஒரு ப்ராம்மணன் மத்ய ராஷ்ட்ரம் ரக்ஷித்து ப்ரபுவாயிருந்தவன் திருமலையிலே திருவேங்கட முடையானுக்குத் திருமண்டபம் கட்டுவிக்கையாலே, அவன் பேராலே திருமண்டபத்துக்குத் திருநாமம் பிரஸித்தமாயிற்றென்று பெரியோர்கள் அருளிச்செய்வர்கள்.

---

1. பத்துப் பாசுரங்கள்.
2. எப்போதாவது நடக்கக் கூடியது.
3. பிரபந்தத்துக்கு புறம்பாகையாலும்.
4. சொற் பொருள்.
5. பலராமனுக்குத் தம்பியாகிய கண்ணன்.

மலைகுனிய நின்ற பெருமாள் சப்தார்த்த: :—மலை—திருமலையை, குனிய—பூர்ணமாக, நின்ற—நின்றருளுகையாலே ; நிலையார நின்ருன் என்று ஆழ்வாரும் அருளிச்செய்தார் இத்தைப்பற்றி.

ஸ்ரீ வ்ருஷசைல மாஸ்திதவிபு: ।

श्रीवृषशैलमास्थितविभुः ॥

என்று அபியுக்தரும் அருளிச் செய்தார்கள்.

" அத்ரிம் வ்யாப்ய ஸமாஸ்திதோ விபுரிதி " ச ।

[ " अद्रिं व्याप्य समास्थितो विभुरिति " च ]

ஸர்வ திவ்ய தேசேஷு [1] ஸ்ரீ சூர்ணபரிபாலனம் பண்ணும்போது அநுஸந்தேயங்கள், [2] பின்ன பின்ன மாகிலும் திருக்கார்த்திகை தொடங்கித் திருவத்யயனத் திருநாளளவும் [3] ஸர்வத்ர ஏகப்ரகார: ; ஸ ச :—முதலாயிரம், திருமொழி, திருவாய்மொழி, இயற்பா, இந்த வரிசையிலே இருப்பது. ப்ரபந்தத் தனியன்களும், நூற்றந்தாதித் தனியன்களும் அநுஸந்தித்து இயல்சாற்று அநுஸந்திக்க வேணும். திருவீதி அநுஸந்தானம் உண்டாயிற்ருகிலும், உபதேசரத்னமாலை அநுஸந்தேயம். சில ஸ்தலங்களிலே திருப்பல்லாண்டு, கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருவாய்மொழி, திருவிருத்தம் ஆகியவற்றின் தனியன்களை அநுஸந்திப்பார்கள்.

தேவயாள், சிங்கன்முறை சப்தார்த்த: :— தேவயாள் சப்த: அப சப்த:, கிந்து, தேவியான பிராட்டியின் ஆள். அத ஏவ உபசாரக நாய்ச்சியார் பரிகரம் என்று திருநாமம். சிங்கன் என்று திருமலையிலே ஒருதாஸன் பகவத் பக்தியுக்தனுய்ப் பூர்வகாலத்திலே திருவேங்கடமுடையான் ஸந்நிதிக்கு [4] எரிகரும்பு கைங்கர்யம் நடப்பித்துக் கொண்டுவருவன்; திருவேங்கடமுடையானும் அந்தப் பக்தன் [5] ஸ்வாபிமதன் என்று எல்லாரும் அறிகைக்கு அவனுக்குச் சரம

1. இறந்த உடலுக்கு வைணவர்கள் செய்யும் சடங்கு.
2. வேறு வேருனாலும்.
3. எல்லா விடங்களிலும் முறை ஒன்றே ; அஃதாவது.
4. விறகு.
5. தனக்கு விருப்பமுடையவன்.

காலம் வந்தவாறே "அவன் சரீர சோதனத்திற்கு நம் கோயிலி னின்றும் காஷ்டங்களைக் கொண்டுபோய்ச் சரமதேஹ சோதனத் தைப் பண்ணி, அர்ச்சகர் முதலானாரும் [1] அநுவர்த்தித்து வாருங் கோள்" என்று அநுக்ரஹிக்கையாலே அவன் பண்ணும் கைங் கர்யத்திற்குச் சிங்கன் முறை என்று பேருண்டாயிற்று. முறை— உசித க்ருத்யம்.

ஜீயர் சப்தః :—ஸ்வாமிவாசீ; இந்த அர்த்தம் ஜீயர்படி ஸ்ரீ வசனபூஷண வ்யாக்யானத்திலே, "மாறனேரி நம்பி விஷயமாக, பெரிய நம்பி உடையவருக்கு" என்ற ஸ்தலத்திலே கண்டு கொள்வது.

திருமலை திருப்பதியிலே, திருவேங்கடமுடையான் கோவிந்த ராஜன் ஸந்நிதியிலே உண்டான ஐதிஹ்யம்.

முதல் திருநாளில், ப்ராதః காலத்திலே அநுஸந்தானம் இல்லா மைக்குக் காரணம்.

ஸ்ரீ வைகாநஸே ஆநந்தஸம்ஹிதாயாம் :—

ஆவாஹ்ய யாகசாலாயாம் கலசே ப்ரதமேऽஹநி ।
ஸாயமாராத்ய தேவேசம் தீக்ஷிதோ வேதபாரகைः ॥
வேதாரம்பம் சரேத் வித்வாந் விஷ்ணோர்யாகாந் ததச்சரேத் ॥

[ श्रीवैखानसे आनन्द संहितायाम् —

आवाह्य यागशालायां कलशे प्रथमेऽहनि ।
सायमाराध्य देवेशं दीक्षितो वेदपारगैः ॥
वेदारम्भं चरेद्विद्वान् विष्णोर्यागान् ततश्चरेत् ॥ ]

என்கிறபடியே த்வஜாரோஹணோத்ஸவங்களிலே முதல் திருநாள் ஸாயங்காலத்திலே யாகசாலையிலே கலசங்களிலே தேவதாவாஹ னம் பண்ணி, ஆராதனத்தைப்பண்ணின பின்பு, வேதபாராயணம் தொடங்குகை ப்ரமாணஸித்த மாகையாலே, [2] தத்ஸமானமான த்ரா விட வேதத்துக்கும் [3] ததநந்தரத்திலே தொடங்குகை உசிதமென்று, ராத்ரி, திருவீதியிலே இயல் தொடங்கும்படிக்கும், எம்பெருமானார் நியமனமென்று [4] சிரோபாஸித ஸத்வ்ருத்தர்கள் அருளிச்செய்

1. அனுசரித்து. 2. அதற்கு ஈடான. 3. அதன் முடிவிலே.
4. பல காலம் பெரியோர்கட்குப் பணிசெய்து அவர்கள் அருள் பெற்றவர்கள்.

வர்கள். ஆகில், ப்ரபந்தங்களில் ச்ரேஷ்டமான திருவாய்மொழி முதலாகவாதல், இதர ப்ரபந்தங்கள் முதலாக வாதல் அநுஸந்தியாதே இயற்பா முதலாகத் தொடங்கி அநுஸந்திப்பதற்கு ஹேது, எம்பெருமானார் தாமே [1]ஸோபபத்திகமாய் நியமித்தாரென்று பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த கலியனருள்பாடு ரஹஸ்யத்திலே கண்டு கொள்வது.

ஸ்தலவாஸிகளான பெரியோர்களும், ஜீயர்களும், ஸ்ரீவைஷ்ணவர்களுமாக, திருவேங்கடமுடையான், நம்பி கொண்டுவந்த திருமஞ்ஜனத்தை வ்யாஜரூபமாய் எதிரேபோய் அமுது செய்தருளின படியை எல்லோரும் அறிந்து உஜ்ஜீவிக்க வேணுமென்று, திருவத்யயனத் திருநாள் முடிவிலே எம்பெருமானையும், எம்பெருமானாரையும் ஆகாச கங்கா தீர்த்த மார்க்கத்திலே எழுந்தருளப்பண்ணிக் கொண்டுபோய், ஆகாச கங்கா தாரையினின்றும் தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு திருமொழி அநுஸந்தானத்துடனே திருமஞ்சனம் கொண்டுவர, அவர்களுடனே, எம்பெருமானும் எம்பெருமானாரும் கூடத் திருவீதிவலமாக எழுந்தருளும்போது ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குத் திருவீதியிலே தந்தம் திருமாளிகை வாசல்கள்தோறும் நடைபாவாடை, பாத்ய, கந்த, தூப, மங்களதீப, தாம்பூலங்களை ஸமர்ப்பிக்க, இப்படி வரிசையுடனே கோயிலிலே எழுந்தருளி, ஸ்ரீ புருஷஸூக்தாத்யநுஸந்தானத்துடனே பூவார்கழல் களையும் ஸ்ரீ சடகோபனையும் திருமஞ்ஜனம் கொண்டருளப்பண்ணி, திருவாலத்தி முதலான அநேக உபசாரங்களைக் கொண்டருளப்பண்ணி, ஸ்ரீ ராமாநுஜ தரிசன தர்மங்களை வர்த்திப்பித்துக்கொண்டு வாழ்ந்தருளுவர்கள். இந்த உத்ஸவத்துக்குத் 'தண்ணீரமுது வழி திருத்துகை' என்று திருநாமம் ப்ரஸித்தமாயிருக்கும். தண்ணீரமுது, நம்பி ஆகாசகங்கையினின்றும் கொண்டுவருகிற திருமஞ்ஜனத்தை வழியிலே திருத்துகை.

பபௌ ஜலம் ஸாதரமம்புஜாக்ஷ: ஸ்ரீசைலபூர்ணாய நமோ஽ஸ்து [தஸ்மை ।

[ पपौ जलं सादरमम्बुजाक्षः श्रीशैलपूर्णाय नमोऽस्तु तस्मै ॥ ]

என்கிறபடியே திருவேங்கடமுடையான் ஆதரித்து அமுது செய்தருளும்படி பண்ணுகை.

---

1. யுக்தியோடுகூட.

க்ருச்ராத் பாபவிநாசபூரித பய꞉ கும்பம் ததாநம் சிர
ஸ்யாயாந்தம் சபராக்ருதி꞉ பதி ஹரி꞉ ஸ்ரீசைல பூர்ணம் குரும் ।
தாதேத்யர்த்திதவாந் ந தத்தமுதகம் பீதம் கடாந்தம் சரா-
காதாதுத்ருத மாதராத் ப்ரமுதிதம் ஸ்ரீநாயகேநாமுநா ॥

கிந்நே ஸ்ரீசைலபூர்ணேऽப்யத பயஸி ஹ்ருதே தத்விஷாதாந்நிஷாதா
கார꞉ காருண்யத ஸ்தம் கரதலமவலம்ப்யாநயந் ஸ்வேஷுணாத்ரிம் ।
பிந்தந் தத்ரந்த்ரஜைஷா கநதரகநதீ வேங்கடேசப்ரியா த-
த்தோயம் தேயம் த்வயாऽஹர்நிசமிதி ஸ வதந் நச்யுதோऽபூ தத்ருச்ய꞉ ॥

தாதேதி ஸம்போத்ய யமஞ்ஜநாத்ரௌ
ஆநீயமாநாஜ்ஜல பூர்ணகும்பாத் ।
பபௌ ஜலம் ஸாதரமம்புஜாக்ஷ꞉
ஸ்ரீசைலபூர்ணாய நமோऽஸ்து தஸ்மை ॥

[ क्रूच्छ्रात् पापविनाशपूरितपयःकुम्भं दधानं शिर-
स्यायान्तं शबराकृतिः पथि हरिः श्रीशैलपूर्णं गुरुम् ।
तातेत्यर्थितवान् न दत्तमुदकं पीतं घटान्तं शरा-
घातादुद्धृतमादरात् प्रमुदितं श्रीनायकेनामुना ॥
खिन्ने श्रीशैलपूर्णेऽप्यथ पयसि हृते तद्विषादान्निषादा-
कारः कारुण्यतस्तं करतलमवलम्ब्यानयन् स्वेषुणाद्रिम् ।
भिन्दन् तद्रन्ध्रजैषा घनतरखनदी वेङ्कटेशप्रिया त-
त्तोयं देयं त्वयाऽहर्निशमिति स वदन्नच्युतोऽभूददृश्यः ॥
तातेति सम्बोध्य यमञ्जनाद्रौ आनीयमानाज्जलपूर्णकुम्भात् ।
पपौ जलं सादरमम्बुजाक्षः श्रीशैलपूर्णाय नमोऽस्तु तस्मै ॥ ]

*என்று எல்லோரும் நம்பி திருவடிகளில் ப்ரேமாதிசயத்தாலே இப்படிப் பத்யங்களை அநுஸந்தித்தார்கள். இந்தத் திருமலைநம்பி குமாரரான சிறிய திருமலைநம்பிக்குத் தோழப்பர் என்று திருநாமம் வருவதற்கு நிதாநம் :—*

ஸ்ரீமத்பாஷ்யக்ருதோ ஹ்யபேதகதகை꞉ வாதே பணே ப்ரஸ்துதே
ஸாம்யைக்யச்ருதிபேதவாக்யஹ்ருதயா ந்யுக்த்வா நிசீதே ஹரி꞉ ।

மித்ரம் பாஷ்யக்ருதே ஜகாத ஸ ச யம் ஸர்வஸ்ய மித்ரம் ஜகௌ
தம் ஸ்ரீபூதர பூர்ணபுத்ரமவரம் ஸ்ரீசைல பூர்ணம் பஜே ||
பாரத்வாஜகுலாப்தீந்தும் ப்ரஜ்ஞாபக்த்யம்ருதார்ணவம் |
ஸ்ரீசைல பூர்ணதநயம் மித்ரதாதகுரும் பஜே ||

ஸ்ரீமத்வேங்கடநாயகேந ஜகதாம் தாதேந வாக்யாத் பரம்
தாதேத்யாதரதோ ஹி யஸ்ய மஹிமா லோகே ப்ரஸித்திம் கதঃ |
தம் தாதஸ்ய ச தாதமார்யசரணம் ஸ்ரீசைலபூர்ணம் குரும்
பாரத்வாஜகுலீநம் ஆச்ரிதநிதிம் ப்ரஜ்ஞாநிதிம் ஸம்ச்ரயே ||

[ श्रीमद्भाष्यकृतो ह्यभेदकथकैः वादे पणे प्रस्तुते
साम्यैक्यश्रुतिभेदवाक्यहृदयान्युक्त्वा निशीथे हरिः ।
मित्रं भाष्यकृते जगाद स च यं सर्वस्य मित्रं जगौ
तं श्रीभूधरपूर्णपुत्रमवरं श्रीशैलपूर्णं भजे ॥
भारद्वाजकुलाब्धीन्दुं प्रज्ञाभक्त्यमृतार्णवम् ।
श्रीशैलपूर्णतनयं मित्रतातगुरुं भजे ॥

श्रीमद्वेङ्कटनायकेन जगतां तातेन वाक्यात्परं
तातेत्यादरतो हि यस्य महिमा लोके प्रसिद्धिं गतः ।
तं तातस्य च तातमार्यशरणं श्रीशैलपूर्णं गुरुं
भारद्वाजकुलीनं आश्रितनिधिं प्रज्ञानिधिं संश्रये ॥ ]

திருமலை திருப்பதியிலே நித்யவாஸிகளான பெரியோர்கள், எம்பெருமானார் கட்டளைப்படியே திருவேங்கடமுடையான் கொண்டருளுகிறுப் போலே, கோவிந்தராஜனும் அப்படியே ஐதிஹ்யங்கள் அத்யயனோத்ஸவம் முதலாக, ஸ்ரீ ராமாநுஜதரிசன தர்மங்களெல்லாம் கொண்டருளும்படி கட்டளை பண்ணி, பெரிய திருவத்யயனத் திருநாளின் சாற்றுமுறை நாளிலே ஸாயங்காலத்திலே நம்மாழ்வார் திருப்பல்லக்கிலே எறியருளித் திருவேங்கடமுடையானுக்கும், கோவிந்தராஜனுக்கும் ஐக்யம் தோன்றுகைக்குப் பிரதமம், திருமலை ஆழ்வாரையும் திருவேங்கடமுடையானையும் மங்களாசாஸனம் பண்ணித் திருவடி தொழுகைக்கு ந்ருத்த, கீத, வாத்யங்களோடு ஜீயர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆகியவர்களின் ஸ்தோத்ரகத்யாநுஸந்

தானத்துடனே, கோவிந்தராஜன் கோயிலை ப்ரதக்ஷிணமாகப் புறப் பட்டருளி, திருமலை அடிவாரத்துக்கு எல்லை நிலமென்று சிஷ்ட கோஷ்டி ப்ஸித்தமான 'பெண்டை பெண்டை'யில் திருமண்டபத் திலே ஏறியருளி, திருமலை யாழ்வாரையும் திருவேங்கடமுடையானை யும், குன்றமேந்தி, அகலகில்லேன், ஒழிவில் காலம் என்னும் பாட் டுக்களை அநுஸந்தித்து, திருவடி தொழுது நின்றருள, அவ்வள விலே திருவேங்கடமுடையானும் பரிவட்டங்கள், மஹா ப்ரஸாதம், அபயஹஸ்தம், உடுத்துக் களைந்த பீதகவாடை முதலான வரிசைக ளெல்லாம் அனுப்பியருளப் பெற்று க்ருதார்த்தராய்த் திரும்பி யருளி, கோவிந்தராஜன் திருவோலக்கமான திருமாமணி மண்ட பத்திலேறியருள, அதன் பின்பு கோவிந்தராஜனும் திருவாராதனம் கொண்டருளி,

முத்காந்நம் வ்யஞ்ஜநோபேதம் ப்ரபூதம் து நிவேதயேத் ।

[ मुद्गान्नं व्यञ्जनोपेतं प्रभूतं तु निवेदयेत् । ]

என்கிறபடியே பெரிய சிறப்பாக அமுது செய்தருளித் திருவாய் மொழியும் கேட்டருளி, வேதங்களும் சாற்றித் திருவாய்மொழி சாற்றும்போது ஆழ்வாரும் கோவிந்தராஜன் திருவடிகளைச் சேர்ந்த பின்பு, கட்டியம் விண்ணப்பம் செய்வார்,

ஸ்ரீவேங்கடாசலவிபோ ரபராவதார
கோவிந்தராஜ ! குருகோபகுலாவதார ।
ஸ்ரீ பூரதீச்வர ஜயாதிமதேவதேவ
நாத ப்ரஸீத நதகல்பதரோ நமஸ்தே ||
லீலாவிபூதிஜநதாபரிரக்ஷணார்த்தம்
திவ்யப்ரபோத சுகயோகி ஸமப்ரபாவம் ।
ஸ்வாமிந் ! பவத்பதஸரோருஹஸாத்க்ருதம் தம்
யோகீச்வரம் சடரிபும் க்ருபயா ப்ரதேஹி ||

[ श्रीवेङ्कटाचलविभोरपरावतार
गोविन्दराज ! गुरुगोपकुलावतार ।
श्रीपूरधीश्वर जयादिमदेवदेव
नाथ प्रसीद नतकल्पतरो नमस्ते ॥

लीलाविभूतिजनतापरिरक्षणार्थं
दिव्यप्रबोधशुकयोगिसमप्रभावम् ।
स्वामिन्! भवत्पदसरोरुह सात्कृतं तं
योगीश्वरं शठरिपुं कृपया प्रदेहि ॥]

என்கிற ச்லோகங்களையும் அநுஸந்தித்துக் கொண்டு, "திருவேங்கடாவதார! தில்லை கோவிந்தராஜ! ஸ்ரீபுரீராஜ! ஆழ்வாரை லீலா விபூதியிலே லோகோபகாரார்த்தமாக மீளவும் ப்ரஸாதித்தருள வேணும்" என்று விண்ணப்பம் செய்யப் பின்பு, எம்பெருமானும் ஆழ்வாரை ப்ரஸாதித்தருள, ஆழ்வாரும் க்ருதார்த்தராய் ப்ரஸாத விநியோகாநந்தரம் ஸ்ரீ ராமாநுஜமுடையார் எல்லோரும் ஸ்ரீ பராங்குச பஞ்சவிம்சதி, நக்ஷத்ர மாலை இவைகளை அநுஸந்திக்க ஸமஸ்த கீத வாத்யங்களோடு கூடத் தம்முடைய கோயிலுக்கு எழுந்தருளி எல்லார்க்கும் தீர்த்த ப்ரஸாதம் மதுரகவிகளை ப்ரஸாதித்தருளி, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையை வர்த்திப்பித்துக் கொண்டு எல்லாரையும் ரக்ஷிக்கும்படிக்குக் கட்டளை பண்ணினார்கள்.

இப்படி, கோவிந்தராஜனும் அத்யயனோத்ஸவம் கொண்டருளின அந்தரம், ஒரு நாள் நித்யர்களோடும், பராங்குச பரகாலாதி முக்தர்களோடுங்கூட ஆழ்வார் தீர்த்தத்துக்கு எழுந்தருளி, அங்கே திருமஞ்ஜனம் கொண்டருளிப் பூர்ணமாக அமுது செய்தருளி விநியோகமான பின்பு, ஸமஸ்த பரிவாரங்களோடும் நித்ய முக்தர்களோடும் கூடத் திரும்பி எழுந்தருளிக் கோயிலிலே எழுந்தருளும்படிக்கு முன்புள்ள பெரியோர்கள் கட்டளை பண்ணினார்கள்.

கோவிந்தராஜன் சிறிய திருவத்யயனத் திருநாளிலே நாலாம் திருநாளில் ராத்ரி திருமாமணி மண்டபத்திலே 'விண்ணீல மேலாப்பு'க் கேட்டருளும்போது, ஆழ்வார்களோடும் ஆசார்யர்களோடும், ஆழ்வார் திருமகளாரையும் கோவிந்தராஜன் சேர்த்தியிலே திவ்ய ஸிம்ஹாஸனத்திலே எழுந்தருளும்படிக்குப் பெரியோர்கள் நியமனம்.

இப்படிக் கோவிந்தராஜனும் அநேக காலம் எம்பெருமானார் நியமனத்தின்படியே அத்யயனோத்ஸவம் கொண்டருள, இப்படிச் சில காலம் சென்ற பின்பு, தத்காலீநரான பெரியோர்கள் இப்

படிப்பட்ட உத்ஸவத்திலே ஒரு விசேஷம் வேணுமென்று நினைத்து, முன்பு போல் கோவிந்தராஜன் அத்யயனோத்ஸவ அநந்தரத்திலே நித்ய முக்தர்களோடு ஆழ்வார் தீர்த்தத்துக்கு எழுந்தருளி, மீண்டு திருவீதிப் பிரதக்ஷிணமாக எழுந்தருளித் திருக்கோபுர வாசலிலே கோவர்த்தனோத்ஸவத் திருமண்டபத்திலே இருக்க, நித்யர்கள் ஆழ்வார்கள், ஆசார்யர்கள் ஆகிற இவர்கள் ஸ்வாமி பார்ச்வங்களிலே ஸேவித்து நிற்க, அப்போது இவர்களுக்குத் திருமாலை, ஸ்ரீ சடகோபன் முதலான வரிசைகளெல்லாம் பிரஸாதித்தருளின பின்பு, அரையர், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் ஆகிய இவர்கள் விஷயமாக ஒவ்வொரு தனியன்களையும், அவர்க ளருளிச்செய்த ப்ரபந்தங்களில் முதல் பாட்டும் அநுஸந்திக்கும்படியாகவும், கட்டியம் விண்ணப்பம் செய்வார், ஆழ்வார்கள் ஆசார்யர்கள் விஷயமாக ஒவ்வொரு ச்லோகங்களையும் அநுஸந்தித்து விடை கொடுக்கும்படியாகவும் கட்டளை பண்ணினார்கள்.

விடை ப்ரஸாதித்தருளும் கிரமம்; பாட்டுக்கள் கிரமம்; ச்லோகங்கள் கிரமம் :—

ப்ரதமம், ஸ்ரீமந் நாதமுனிகளுக்குப் பரிவட்டம், திருமாலை, ஸ்ரீ சடகோபன் இவைகளை ப்ரஸாதித்தருளி, அவருடனே அரையர்க்கும் ப்ரஸாதித்தருளின பின்பு, அரையரும் ஸ்ரீ சடகோபனையும் திருமாலைகளையும், திருப்பரிவட்டங்களையும் [1] பொற்றளிகையிலே எழுந்தருளப் பண்ணிச் சிரஸா வகித்துக் கொண்டு நிற்க, அப்போது, நித்ய முக்தர் எல்லார்க்கும் [2] அடைவே அர்ச்சகர் ஸ்ரீ சடகோபன் முதலானவைகளைப் பிரஸாதித்தருளின பின்பு, அரையரும் நித்ய முக்தர்கள் விஷயமான அவர்கள் தனியன்களைப் ப்ரதமம் அநுஸந்தித்து, அவர்கள் அருளிச் செய்த ப்ரதம ப்ரபந்தங்களில் அடிப் பாட்டையும் தேவகானத்தி லேறிட்டு அநுஸந்திக்க, அவ்வளவில் கட்டியம் விண்ணப்பம் செய்வார், நித்ய முக்தர்களுக் கெல்லாம் அடைவே தத்தத் விஷயமான ச்லோகங்களை அனுஸந்தித்து விடை ப்ரஸாதித்தருள, அவ்வளவிலே எல்லாரும் விடை பெற்று க்ருதார்த்தராய்த் தந்தாமுடைய கோயில்களிலே எழுந்தருளுவர்கள்.

---

1. பொன் தட்டிலே.
2. முறையாக.

ப்ரதமம், திருவடி திருவந்தாழ்வானுக்கு, 'சென்றால் குடையாம்,' 'நிவாஸசய்யாஸன' 'தாஸ ஸ்ஸகா,' இவைகள் அநுஸந்தேயம்; பொய்கை, பூதம், பேய், ஆழ்வார்களுக்கு, 'கைதை சேர்,' 'வையந்தகளியா,' 'என்பிறவிதீர,' 'அன்பேதகளியா,' 'சீராரும் மாடம்,' 'திருக்கண்டேன்,' என்பனவும்,

திருமழிசைப்பிரானுக்கு, 'நாராயணன்,' 'நான்முகனை' என்பனவும், நம்மாழ்வாருக்கு, 'கருவிருத்தக்குழி,' 'பொய்ந்நின்ற,' என்பனவும், ஸ்ரீ குலசேகரப் பெருமாளுக்கு, 'இன்னமுதம்,' 'இருளிரிய' என்பனவும், பெரியாழ்வாருக்கு, 'பாண்டியன் கொண்டாட,' 'பல்லாண்டு பல்லாண்டு,' என்பனவும், ஆழ்வார் திருமகளார்க்கு 'அல்லிநாள் தாமரைமேல்,' 'தையொரு திங்களும்' என்பனவும், அநுஸந்திக்க.

எல்லார்க்கும் ப்ரதம ப்ரபந்தத் தனியன் பாட்டுக்களை அநுஸந்திக்க, ஆண்டாளுக்குச் சரமப் பிரபந்தத் தனியன் பாட்டை அநுஸந்திக்கைக்கு நிதானம் :—'வேங்கடவற் கென்னை விதிக்கிற்றியே' என்று ப்ரபந்த ஆதியிலே இருப்பதே யாம்.

தொண்டரடிப்பொடி யாழ்வாருக்கு, 'மற்றொன்றும்,' 'காவலில் புலனை,' என்பனவும், திருப்பாணாழ்வார்க்கு, 'காட்டவே,' 'அமலனாதிபிரான்,' என்பனவும், திருமங்கையாழ்வார்க்கு, 'வாழி பரகாலன்,' 'வாடினேன் வாடி' என்பனவும், ஸ்ரீ மதுர கவிகளுக்கு 'வேறொன்றும்,' 'கண்ணிநுண் சிறுத்தாம்பினால்,' என்பனவும், எம்பெருமானார்க்கு, 'சொல்லின் தொகை,' 'அகில புவன ஜந்ம' என்பனவும், ஸேனை முதலியாருக்கு, 'த்வதீயபுக்தோஜ்ஜித,' என்பதுவும், ஸ்ரீமந் நாதமுநிகளுக்கு, 'நமோऽசிந்த்ய' என்பதுவும், அரையர்க்கும் 'நமோऽசிந்த்ய' என்பதுவும் அநுஸந்திக்க.

நித்ய ஸூரிகள் அருளிச் செய்த ப்ரபந்தம் ஒன்றுமில்லாமையாலே, அவர்கள் செய்யும் கைங்கர்யப் ப்ரதிபாதகமான ச்லோகங்கள் அநுஸந்தேயம். ஆழ்வார்கள் பதின்மர்க்கும் (நடுவே) திருவவதாரக் கிரமத்திலே அருளப்பாடு. பின்பு ஸ்ரீ மதுரகவிகள், ஸ்ரீ பாஷ்யகாரர், மஹாராஜாவான ஸர்வாச்ரிதர்க்கும் பகுமானம் பண்ணிய பின்பு ஸேனைபதிக்குப் பகுமானம் பண்ணி, பின்பு லோக நியாயம் போல எல்லார்க்கும். பின்பு, ஸேனை முதலியாருக்குப்

பகுமானமும் முக்தர்களான ஆழ்வார்களுக்கு [1]வாசிக கைங்கர்யத்துக்காக அருளப்பாடு ப்ரஸாதிக்கும் ப்ரகரணத்திலே, நித்ய ஸூரியர்கள் செய்யும் கைங்கர்யத்தைப்பற்றி உபசாரத் அருளப்பாடு பிரஸாதிக்கிறபடி.

## கட்டியம் விண்ணப்பம் செய்யும் ச்லோகங்களின் க்ரமம்.

ஸ்ரீ பூமிநாயக தயாபர திவ்யமூர்த்தே
தேவாதிதேவ ஜகதேகசரண்ய விஷ்ணோ ।
கோபாங்கநாகுசஸரோருஹப்ருங்கராஜ
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோமலாங்க ‖

தேவாதிதேவ பணிராஜ - விஹங்கராஜ
ராஜத்கிரீடமணிராஜிவிராஜிதாங்க்ரே ।
ராஜாதிராஜ யதுராஜகுலாதிராஜ
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோபசந்த்ர ‖

[ श्रीभूमिनायक दयापर दिव्यमूर्ते
देवाधिदेव जगदेकशरण्य विष्णो ।
गोपाङ्गनाकुचसरोरुहभृङ्गराज
गोविन्दराज ! विजयी भव कोमलाङ्ग ॥

देवाधिदेव फणिराज – विहङ्गराज
राजत्किरीटमणिराजिविराजिताङ्घ्रे ।
राजाधिराज यदुराजकुलाधिराज
गोविन्दराज ! विजयी भव गोपचन्द्र ॥ ]

## அருளப்பாடு திருவடி, திருவநந்தாழ்வான்.

காஸாரயோகிபரமாத்புதபக்திபத்த
வாங்மால்யபூஷிதமஹோத்பலரம்யபாத ।
கோபாதிநாத வஸுதேவகுமார க்ருஷ்ண
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோகுலேந்த்ர ‖

---

1. சொற்களாற் செய்த.

ஸ்ரீ பூதயோகிபரிகல்பிததீப்யமாந
ஜ்ஞாநப்ரதீப பரித்ருஷ்ட குணம்ருதாப்தே ।
கோகோபஜாலபரிரக்ஷணபத்ததீக்ஷ
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோபவந்த்ய ॥

மாந்யாநுபாவ மஹதாஹ்வய யோகித்ருஷ்ட
ஸ்ரீ சங்க சக்ர கமலா ஸஹிதாமலாங்க ।
கோபீஜநப்ரியசரித்ர விசித்ரவேஷ
கோவிந்தராஜ ! விஜயீபவ கோபநாத ॥

[ कासरयोगिपरमाद्भुतभक्तिबद्ध
वात्सल्यभूषितमहोत्पलरम्यपाद ! ।
गोपाधिनाथ वसुदेवकुमार कृष्ण
गोविन्दराज ! विजयी भव गोकुलेन्द्र ॥

श्रीभूतयोगिपरिकल्पितदीप्यमान-
ज्ञानप्रदीपपरिदृष्टगुणामृताब्धे ! ।
गोगोपजालपरिरक्षणबद्धदीक्ष
गोविन्दराज ! विजयी भव गोपवन्द्य ॥

मान्यानुभावमहदाह्वययोगिदृष्ट-
श्रीशङ्खचक्रकमलासहितामलाङ्ग ! ।
गोपीजनप्रियचरित्र विचित्रवेष
गोविन्दराज ! विजयी भव गोपनाथ ॥ ]

## அருளப்பாடு பொய்கை, பூதம், பேயாழ்வார்.

ஸ்ரீமத்த்வதீயபதபங்கஜபக்திநிஷ்ட
ஸ்ரீபக்திஸாரமுநிநிச்சிதமுக்யதத்வ ।
கோபீஜநார்த்திஹர கோபஜநாந்தரங்க
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோபரத்ந ॥

[ श्रीमत्त्वदीयपदपङ्कजभक्तिनिष्ठ-
श्रीभक्तिसारमुनिनिश्चितमुख्यतत्त्व ! ।

गोपीजनार्तिहर गोपजनान्तरङ्ग

गोविन्दराज! विजयी भव गोपरत्न ॥ ]

அருளப்பாடு திருமழிசையாழ்வார்.

ஸ்ரீமத்பராங்குசமுநீந்த்ர ஸஹஸ்ரகாதா
ஸம்ஸ்தூயமாநசரணாம்புஜ ஸர்வசேஷிந் ।
கோபாலவம்சதிலகாச்யுத பத்மநாப
கோவிந்தராஜ! விஜயீ பவ கோபவேஷ ॥

[ श्रीमत्पराङ्कुशमुनीन्द्रसहस्रगाथा-
संस्तूयमानचरणाम्बुज सर्वशेषिन्! ।
गोपालवंशतिलकाच्युत पद्मनाभ
गोविन्दराज! विजयी भव गोपवेष ॥ ]

அருளப்பாடு நம் சடகோபன்.

சேஷாசலே மஹதி பாதபபக்ஷிஜந்ம
த்வத்பக்திதः ஸ்ப்ருஹயதா குலசேகரேண ।
ராஜ்ஞா புநः புநருபாஸிதபாதபத்ம
கோவிந்தராஜ! விஜயீ பவ கோரஸஜ்ஞ ॥

[ शेषाचले महति पादपपक्षिजन्म
त्वद्भक्तितः स्पृहयता कुलशेखरेण ।
राज्ञा पुनः पुनरुपासितपादपद्म
गोविन्दराज! विजयी भव गोरसज्ञ ॥ ]

அருளப்பாடு ஸ்ரீ குலசேகராழ்வார்.

ஸ்ரீவிஷ்ணுசித்தக்ருதமங்களதிவ்யஸூக்தே
தந்மாநஸாம்புருஹகல்பிதநித்யவாஸ ।
கோபாலபாலயுவதீவிடஸார்வபௌம
கோவிந்தராஜ! விஜயீ பவ கோவ்ருஷேந்த்ர ॥

[ श्रीविष्णुचित्तकृतमङ्गलदिव्यसूक्ते
तन्मानसाम्बुरुहकल्पितनित्यवास! ।

गोपालबालयुवतीविटसार्वभौम
गोविन्दराज! विजयी भव गोवृषेन्द्र ॥ ]

## அருளப்பாடு பெரியாழ்வார்.

ஸ்ரீ விஷ்ணுசித்தகுலநந்தநகல்பவல்லீ
கோதாலகாந்தவிநிவேசிதமால்யலோல ।

கோபாங்கநாகுசகுலாசலமத்ய ஸுப்த
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோதநாட்ய ॥

[ श्रीविष्णुचित्तकुलनन्दनकल्पवल्ली-
गोदालकान्तविनिवेशितमाल्यलोल ! ।

गोपाङ्गनाकुचकुलाचलमध्यसुप्त
गोविन्दराज! विजयी भव गोधनाढ्य ॥ ]

## அருளப்பாடு ஆழ்வார் திருமகளார்.

பக்தாங்க்ரிரேணுமுநிநா பரம் ததீய
சேஷத்வமாச்ரிதவதா விமலேந நித்யம் ।

ப்ராபோதிகஸ்துதிக்ருதா ஹ்யவபோதித ஸ்ரீ
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோபபந்தோ ॥

[ भक्ताङ्घ्रिरेणुमुनिना परमं तदीय-
शेषत्वमाश्रितवता विमलेन नित्यम् ।

प्राबोधिकस्तुतिकृता ह्यवबोधित श्री-
गोविन्दराज! विजयी भव गोपबन्धो ॥ ]

## அருளப்பாடு தொண்ட ரடிப்பொடியாழ்வார்.

ஸ்ரீபாணநாமக மஹாமுநிகீயமாந
திவ்யாநுபாவ தயமாநத்ருகஞ்சலாட்ய ।

ஸர்வாத்மரக்ஷணவிசக்ஷண சக்ரபாணே
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோபிகேந்த்ர ॥

[ श्रीपाणनामकमहामुनिगीयमान-
दिव्यानुभव दयमानदृगञ्चलाढ्य ! ।
सर्वात्मरक्षणविचक्षण चक्रपाणे
गोविन्दराज ! विजयी भव गोपिकेन्द्र ॥ ]

## அருளப்பாடு திருப்பாணாழ்வார்.

பக்தோத்தமாய பரகாலமுநீந்த்ரநாம்நே
விச்ராணிதாதுலமஹாதநமூலமந்த்ர ।
பூர்ணாநுகம்ப புருஷோத்தம புஷ்கராக்ஷ
கோவிந்தராஜ ! விஜயீ பவ கோஸநாத ||

[ भक्तोत्तमाय परकालमुनीन्द्रनाम्ने
विश्राणितातुलमहाधनमूलमन्त्र ! ।
पूर्णानुकम्प पुरुषोत्तम पुष्कराक्ष
गोविन्दराज ! विजयी भव गोसनाथ ॥ ]

## அருளப்பாடு திருமங்கையாழ்வார்.

ஸத்வோத்தரே சரமபர்வணி ஸக்தசித்தே
சாந்தே ஸதா மதுரபூர்வகவாங்முநீந்த்ரே ।
நாத ப்ரஸந்நஹ்ருதயாம்புஜ நந்தஸூநோ
கோவிந்தராஜ ! விஜயீ பவ குந்ததந்த ||

[ सत्त्वोत्तरे चरमपर्वणि सक्तचित्ते
शान्ते सदा मधुरपूर्वकवाङ्मुनीन्द्रे ।
नाथ प्रसन्नहृदयाम्बुज नन्दसूनो
गोविन्दराज ! विजयी भव कुन्ददन्त ॥ ]

## அருளப்பாடு ஸ்ரீ மதுரகவியாழ்வார்.

பக்த ப்ரபந்த குலநாயக பாஷ்யகார
ஸங்கல்பகல்பதரு திவ்யபலாமலாத்மந் ।

ஸ்ரீ சேஷசைலகடகாச்ரித சேஷசாயிந்
கோவிந்தராஜ ! விஜயீ பவ விச்வமூர்த்தே ||

[ भक्त-प्रपन्नकुलनायकभाष्यकार-
सङ्कल्पकल्पतरुदिव्यफलामलात्मन् ! ।
श्रीशेषशैलकटकाश्रित शेषशायिन्
गोविन्दराज ! विजयी भव विश्वमूर्ते ॥ ]

அருளப்பாடு இராமாநுசன்.

தேவ ப்ரஸீத கருணாகர பக்தவர்கே
ஸேநாபதிப்ரணிஹிதாகிலலோகபார !
ஸ்ரீவாஸ திவ்யநகராதிப ராஜராஜ
கோவிந்தராஜ ! விஜயீ பவ வேதவேத்ய ||

[ देव प्रसीद करुणाकर भक्तवर्गे
सेनापतिप्रणिहिताखिललोकभार ।
श्रीवासदिव्यनगराधिप राजराज
गोविन्दराज ! विजयी भव वेदवेद्य ॥ ]

அருளப்பாடு ஸேநாபதியாழ்வார்.

ஸ்ரீமச்சடாரி கருணாச்ரித தேவகாந
பாரஜ்ஞநாதமுநிஸந்நுதபுண்யகீர்த்தே ।
கோப்ராஹ்மண ப்ரியகுரோ ச்ரிதபாரிஜாத
கோவிந்தராஜ ஜகதாம் குரு மங்களாநி ||

[ श्रीमच्छठारिकरुणाश्रितदेवगान-
पारज्ञनाथमुनिसन्नुतपुण्यकीर्ते ।
गोब्राह्मणप्रियगुरो श्रितपारिजात
गोविन्दराज ! जगतां कुरु मङ्गलानि ॥ ]

அருளப்பாடு ஸ்ரீமந் நாதமுநிகள்.

*இந்த ச்லோகம் தான் அரையர்க்கும்.*

எம்பெருமானார் தாமே ஆதி காலத்திலே திருவேங்கடமுடையானுக்கும் கோவிந்தராஜனுக்கும், ஐக்யம் தோன்றும்படி சில தர்ம விசேஷங்களைக் கட்டளை பண்ணுகையாலே பின்புள்ள பெரியோர்களும், அந்த [1]ஐக்யத்யோதனார்த்தமாகத் திருவாடிப் பூரத்திலே ஸ்ரீ கோவிந்தராஜனும் ஆழ்வார் திருமகளான ஆண்டாளும், திருமலை யடிவாரத்திலே எழுந்தருளித் திருவேங்கடமுடையானோடே கூடல் வளைக்கும்படி கட்டளை பண்ணினார்கள்.

திருமலையிலே மார்கழி மாஸத்திலே திருத்வாதசித் தீர்த்தம் காம்யமானாலும், [2] பரமைகாந்திகளுக்கும் தீர்த்த ஸ்நாநம் பண்ண வேணும் என்பதில் [3] ஸப்ரமாணமான ஐதிஹ்யம் :—

தநுர்மாஸே ஸிதே பக்ஷே த்வாதச்யா மருணோதயே |
ஆயாந்தி ஸர்வதீர்த்தாநி ஸ்வாமிபுஷ்கரிணீஜலே ||
தத்ர ஸ்நாநம் ப்ரகுர்வந்தி யே நரா: ப்ரீதமாநஸா: |
தே ஸர்வபாபைர் முச்யந்தே ஸகோத்ரஜ்ஞாதிபாந்தவா: ||

[ धनुर्मासे सिते पक्षे द्वादश्यामरुणोदये ।
आयान्ति सर्वतीर्थानि स्वामिपुष्करिणीजले ॥
तत्र स्नानं प्रकुर्वन्ति ये नराः प्रीतमानसाः ।
ते सर्वपापैर्मुच्यन्ते सगोत्रज्ञातिबान्धवाः ॥ ]

என்றும்,

ஸ்வாமிபுஷ்கரிணீஸ்நாநம் சாபே மாஸ்யருணோதயே |
பக்ஷே ஸிதே ச த்வாதச்யாம் ஆசரந்தீ ஹி யே நரா: ||
தே யாந்தி த்ரிதிவம் லோகம் நிர்த்தூதாசேஷகல்மஷா: |

[ स्वामिपुष्करिणीस्नानं चापे मास्यरुणोदये ।
पक्षे सिते च द्वादश्यां आचरन्ति हि ये नराः ॥
ते यान्ति त्रिदिवं लोकं निर्धूताशेषकिल्बिषाः । ]

என்றும்,

1. ஒற்றுமையை வெளிப்படுத்தும் முறையாக.
2. கடவுளிடமே மனத்தைச் செலுத்தும் சிறப்புடையவர்கள்.
3. ஆதாரத்தோடு கூடிய.

யோ மாநவः ஸ்வாமிஸரஸி சாபம் ப்ராப்தே திவாகரே ।
சுக்லே பக்ஷேऽஞ்ஜநாத்ரௌ வை த்வாதச்யா மருணோதயே ॥
ஸர்வபாபைः விநிர்முக்தாः ப்ராப்நுயாத் வைஷ்ணவம் பதம் ।

[ यो मानवः स्वामिसरसि चापं प्राप्ते दिवाकरे ।
शुक्ले पक्षेऽञ्जनाद्रौ वै द्वादश्यामरुणोदये ॥
सर्वपापैर्विनिर्मुक्तः प्राप्नुयाद्वैष्णवं पदम् । ]

என்றும்,

திஸ்ரः கோட்யர்த்தகோடீ ச தீர்த்தாநி புவநத்ரயே ।
தாநி ஸர்வாணி சேஷாத்ரௌ சாபமாஸேऽருணோதயே ॥
த்வாதச்யாம் சுக்லபக்ஷே வை ஸ்வாமிதீர்த்தே து பாவநே ।
ஸமாயாந்தி ததா ஸ்நாத்வா முச்யந்தே ஸர்வகில்பிஷைः ॥
மஹாபாதகஸம்யுக்தா மாநவாः ஸ்வீயபந்துபிः ।

[ तिस्रः कोट्यर्धकोटी च तीर्थानि भुवनत्रये ।
तानि सर्वाणि शेषाद्रौ चापमासेऽरुणोदये ॥
द्वादश्यां शुक्लपक्षे वै स्वामितीर्थे तु पावने ।
समायान्ति तदा स्नात्वा मुच्यन्ते सर्वकिल्बिषैः ॥
महापातकसंयुक्ता मानवाः स्वीयबन्धुभिः । ]

என்றும் வாமந - வராஹ - மார்க்கண்டேயாதி புராணங்களிலே தீர்த்த வைபவம் ப்ரசஸ்தமாய், இந்த தினத்திலே தீர்த்த ஸ்நாநத்தாலே ஸௌக்யஸித்தி உண்டென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே, காம்ய தீர்த்தமென்று ப்ரஸித்தமான தீர்த்தத்திலே ஸ்ரீ ராமாநுஜ தர்சனஸ்தரான ப்ரபந்ந ஜநங்களுக்கு ஸ்நாநம் அநுசிதம் என்று ஸ்ரீ வைஷ்ணவ தர்ம சாஸ்திரத்திலே இருக்கையாலே, திருமலை திருப்பதியில் நித்யவாஸிகளான ஸ்ரீ மஹா பாகவதர்களும் இந்தக் காம்ய தீர்த்தத்தைப் [1] பரிக்ரஹிக்கையாலே, ராஜஸ தாமஸ ப்ரக்ருதிகளான ஸ்ரீ வைஷ்ணவர்களாலும், அவைஷ்ணவ ஜநங்களாலும் [2] ராஜத்வாரவர்த்திகளான சில அவித்வஜ் ஜனங்களாலும், ஸ்தலவாஸிகளான ஜீயர்கள், ஆசார்ய புருஷர்கள், ஸ்ரீமஹா பாகவதர்

1. ஏற்றுக்கொள்வதாலே. 2. அரசனது வாயிற் காவலரான.

கள், ஆகிய எல்லோரும் இந்த ஸ்தலத்திலே ஸ்ரீமஹா பாகவதர்களுக்கு வந்த அபய்யாதியை அறிந்து இந்தக் காலத்திலே தீர்த்த ஸ்நானம் பண்ணும்படிக்கு உள்ளனவே செய்வோமென்று சிந்தித்து,

பக்தோத்ஸவம் ப்ரகுர்வீத சாபம் ப்ராப்தே திவாகரே ।
சுக்லே ச பக்ஷே த்ரிதிநம் ஸூரீணாமர்ச்சநம் சரேத் ॥

[ भक्तोत्सवं प्रकुर्वीत चापं प्राप्ते दिवाकरे ।
शुक्ले च पक्षे त्रिदिनं सूरीणामर्चनं चरेत् ॥ ]

என்று வைகாநஸ சாஸ்திரத்திலே ஆநந்த ஸம்ஹிதையிலே இந்த ப்ரமாணத்து ஸங்க்ரஹகாரர்கள் ஸம்ஹிதாந்தரவசநங்களைக்கொண்டு பண்ணின வ்யாக்யாநத்திலே,

பஞ்சாயுதாநாம் பக்தாநாம் ஸேநாநீ - சேஷயோரபி ।
வைநதேயஸ்ய ஸேநேச ! பக்தாநாம் ச ப்ருதக் ப்ருதக் ॥
சண்டாதீநாம் ச பக்தாநாம் குமுதாதிகணஸ்ய ச ।
ஸர்வேஷாம் பக்தித: குர்யாத் ஹோமாங்குரவிவர்ஜிதம் ॥
அர்ச்சநம் விஷ்ணுபக்தாநாம் ஹரிபாதார்ச்சிதை: ஸுமை: ।
துலஸீதலஸம்மிச்ரை: ஸுகந்தை: ஸுமநோஹரை: ॥
தத்தந்மூர்த்திபரைர் மந்த்ரை: விஷ்ணுபக்தவிசேஷணை: ।
தத்விஷ்ணோரிதி மந்த்ரேண ஸம்யுதை ரந்தத: சுபை: ॥
த்ரிஸந்த்யம் பக்வத்புக்த த்யாதசாந்நம் நிவேதயேத் ।
ஏதந்முசேந பகவாந் ப்ரீதோ பூத்வா ஜநார்தந: ॥
தநாதி ஸகலாந் போகாந் பக்தாநாம் பக்தவத்ஸல: ।

[ पञ्चायुधानां भक्तानां सेनानी - शेषयोरपि ।
वैनतेयस्य सेनेश ! भक्तानां च पृथक् पृथक् ॥
चण्डादीनां च भक्तानां कुमुदादिगणस्य च ।
सर्वेषां भक्तितः कुर्यात् होमाङ्कुरविवर्जितम् ॥
अर्चनं विष्णुभक्तानां हरिपादार्चितैः सुमैः ।
तुलसीदलसम्मिश्रैः सुगन्धैः सुमनोहरैः ॥

तत्तन्मूर्तिपरैर्मन्त्रैर्विष्णुभक्तविशेषणैः ।
तद्विष्णोरिति मन्त्रेण संयुतैरन्ततः शुभैः ॥
त्रिसन्ध्यं भगवद्भुक्तद्वादशान्नं निवेदयेत् ।
एतन्मुखेन भगवान् प्रीतो भूत्वा जनार्दनः ॥
ददाति सकलान् भोगान् भक्तानां भक्तवत्सलः । ]

என்று விஸ்தரித்துச் சொன்ன அர்த்தத்தின் க்ரமத்திலே பக்தோத்க்ருஷ்டரான அநந்த கருட விஷ்வக்ஸேந ஸுதர்சநாதிகளையும் யாக சாலையிலே எழுந்தருளப் பண்ணுவித்து, [1] திரத்ரயம் பக்தோத்ஸவத்தை நடப்பித்து, அந்த உத்ஸவாநந்தரத்திலே ததங்கமாக இருக்கும்படி திருவாழியாழ்வான் எழுந்தருளித் தீர்த்தம் ப்ரஸாதிக்கும்படி, கட்டளை பண்ணுகையாலே, ப்ரபந்ந ஜனங்களுக்குத் தத்காலத்திலே தீர்த்தஸ்நாநம் [2] அபரிஹார்யமாய் நீராடும்படி ஆயிற்றென்று பெரியோர்கள் அருளிச்செய்வர்கள்.

எம்பெருமானார் திவ்ய ஸங்கல்பத்தாலே கோவிந்தராஜன் திருமலையடிவாரத்திலே பிரதிஷ்டை கொண்டருளின பின்பு, திருவேங்கட நாட்டுக்குப் பிரபுவான, கட்டியம் யாதவராயனும், எம்பெருமானார் திருவடிகளை ஆச்ரயித்துக் கோவிந்தராஜ கைங்கைர்யங்களை எம்பெருமானார் நியமனத்தின்படியே பண்ணிக்கொண்டு ஸமஸ்த உத்ஸவங்களும் கொண்டருளும்படிக்குப் போக்யமாய் அதிமனோஹரமாய் இருக்கும்படி ஒரு திருமாமணி மண்டபத்தையும் கட்டுவித்து, அதன் ஸமீபத்திலே நம்மாழ்வாருக்குத் திருப்பள்ளியறையும் கட்டுவித்து, அத்யயனோத்ஸவார்த்தமாக நம்மாழ்வார் உத்ஸவ விக்ரஹம் மாத்திரம் ஏறியருளப்பண்ணித் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணுவித்தும்,

திருமலையிலே, அனந்தாழ்வான் கைங்கர்யமாக எம்பெருமானார் அர்ச்சாவதாரம் செய்தருளின பின்பு, கோவிந்தராஜன் ஸந்நிதிக்கும் எம்பெருமானாரை உத்ஸவ விக்ரஹம் மாத்திரம் ஏறியருளப் பண்ணுவித்துத் திருப்ரதிஷ்டை கொண்டருளப்பண்ணுவித்து, ஒரே அறைகளிலே எழுந்தருளப்பண்ணித் திருவாராதனம்கொண்டருளும்படி பண்ணுவித்தும், ஏரிகரையிலே யிருக்கும் எம்பெரு

1. மூன்று நாட்கள், 2. தடுக்க முடியாமல்.

மானுக்கும் திருமண்டபத்திலே திருப்பள்ளியறையும், கோவிந்த ராஜனுக்கும் திருப்பள்ளி அறையும் கட்டுவித்தும், அங்கே புற்றிலே யிருக்கிற திருவனந்தாழ்வானுக்கும் திருவாராதனம் நடக்கும்படிக்கும், தன்னுடைய வாஸஸ்தானமான நாராயணபுரத்திலே தன் உத்யானத்திலே [1]சதுஸ்தம்பி மண்டபம் மூன்றையும் கொண்டு வந்து, திருமாமணி மண்டபத்துக்கு நடுவாக ஒரு சதுஸ்தம்பியைப் பிரதிஷ்டைபண்ணியும், தனதாக ஒரு உத்ஸவம் வேணுமென்றெண்ணித் தன்னுடைய ஜன்ம நக்ஷத்திரமான வைகாசி மாதம் அனுராதா நக்ஷத்திரத்திலே [2]அவப்ருதம் கொண்டருளும்படி உத்ஸவத்தைக் கட்டளைபண்ணியும், கோவிந்தராஜன் புராண ஸித்தமான திருவாடித் திருநாளையும் நடக்கும்படி பண்ணியும், எம்பெருமானார் நியமனத்தின்படியே கோவிலுக்கு வடவண்டை மாடவீதியையும், இரண்டு பார்சுவத்திலும் திருமாளிகைகளையும் கட்டுவித்து ராமாநுஜபுரமென்னும் திருநாமத்தையும் சாத்தி, தத்காலத்தில் திருவேங்கடமுடையானுக்கும் கோவிந்தராஜனுக்கும் மங்களாசாஸன பரரான ஸ்ரீ மஹா பாகவதர்களுக்கும், பெரிய திருமலை நம்பிக்கும், அநந்தாழ்வானுக்கும், ஸ்ரீ வைகாநஸ ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் திருமாளிகைகளையும் ஸமர்ப்பித்துத் திருப்பணிப் பிள்ளைக்கு ஒரு மடம் கட்டிக்கொடுத்தும், திருவையாசித் திருநாள் முதலாக நித்யோத்ஸவ, மஹோத்ஸவ, மாஸோத்ஸவ, ஸம்வத்ஸரோத்ஸவங்களெல்லாம் நடக்கும்படியும் செய்தான்.

திருவேங்கடமுடையான் அத்யயனோத்ஸவம் கேட்டருளும் ப்ரகார நிமித்தமாக, மணவாளமாமுனிகள் தம்முடைய ஸ்ரீபாதமுடையராய் அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான பெரிய கோவில் கேள்வித் திருவேங்கட ராமாநுஜ ஜீயருக்கு எழுதிக் கொடுத்தனுப்பின பட்டோலை: *

திருவேங்கட முடையான் தம்முடைய திருவத்யயனத் திருநாளிலே இயற்பா முதலாகத் திவ்ய ப்ரபந்தம் கேட்டருளுகைக்கு, எம்பெருமானார் நியமன ரூபமான ஐதிஹ்யம் :—

ஸ்ரீ ராமாநுஜயோகிநோ ஹ்யுபதிசந் ஸமீக்ஷ்ய: சடாரே: சுபா:
சாத்யாயோகிஜயோகிநாம் வ்ருஷகிரீசாநாஜ்ஞயா தத்புரம் |

---

1. நான்கு கம்பங்களையும். 2. உற்சடங்கின் பின் நீராடுதல்

* அனுபந்தத்திற் காண்க.

பக்த்யாऽகாய துதாரதீ: கவிவரஸ் தத்தேவகாநேந ய:
ஸ்ரீரங்கேந்த்ரகுரும் பஜே முநிவஹாஹ்வம் நாதவம்சோத்பவம்||

[ श्रीरामानुजयोगिनो ह्युपदिशन् सूक्तीश्शठारेश्शुभा-
श्चाद्यायोनिजयोगिनां वृषगिरीशानाज्ञया तत्पुरः ।
भक्त्याऽगायदुदारधीः कविवरस्तद्देवगानेन यः
श्रीरङ्गेन्द्रगुरुं भजे मुनिवहाह्वं नाथवंशोद्भवम् ॥ ]

என்கிறபடியே பெரியமுதலியார் திருவம்சயராய், எம்பெருமானார்க்குத் திருவாய்மொழி யாசார்யராய், திருவேங்கடமுடையான் நியமநத்தின்படியே அவர்திருவுள்ள முகக்குர்படி, முதலாழ்வார்கள் ஸ்ரீ ஸூக்திகளாலே சிலவற்றைத் தேவகானத்திலேறிட்டுப் பாடுமவராய், எழுநூற்றுத் தம்பிரான்மார்களுக்கும் தலைவராய் ஸ்ரீயாமுநாசார்யர் [1] 'ஜ்ஞானீ து ஆத்மைவ' என்கிறபடியே பெரிய பெருமாள் திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தாலே ஸேவாநந்தரத்திலே பேறு பெறும்படி எம்பெருமானுக்கு நல்ல ஜீவனான் திருப்பாணாழ்வார் திருநாமத்தைச் சாற்றி க்ருபைபண்ணும் படியான பெருமையையுடைய ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர், ஒரு திருக்கார்த்திகைத் திவ்ய மஹோத்ஸவத்திலே, பெரிய பெருமாளை மங்களாசாஸனம் செய்தருளின பின்பு, எம்பெருமானார் மடமேற எழுந்தருள, எம்பெருமானாரும், [2] ப்ரத்யுத்தான ப்ரணாமாத்யநுவர்த்தநங்களைப் பண்ணியருள, அரையரும், "பைத்த பாம்பணையான் திருவேங்கடம், மொய்த்தசோலை மொய்பூந்தடம் தாழ்வாரை ஏய்த்திளைப்பதன் முன்னம் அடைமினோ', சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடம்' என்றும், 'வேங்கடமடைந்த மாலபாதமேயடைந்து நாளும் உய்ம்மினோ, என்றும் இப்படிப் பலவிடங்களிலும் ஆழ்வார்கள் உகந்தருளிச் செய்த திருவேங்கடயாத்ரைபண்ணி விடைகொள்கிறேன்' என்ன, எம்பெருமானாரும் அப்படியே எழுந்தருள வேணுமென்ன, புறப்பட்டருளித் திருக்கச்சி மாநகரம்வழியாக எழுந்தருளி அங்கே தமக்கு [3] அர்த்திதார்த்தப்ரதரான பேரருளாளப் பெருமாளையும் திருவடி தொழுது, ஆழ்வார்கள் ஈரச்சொல்

---

1. ஞானி என துயிரே தான்.
2. எழுந்திருத்தல், வணங்குதல் முதலிய பணிவுடைய செயல்களை.
3. விரும்பிய பயனைக் கொடுப்பவரான,

வினல் நன்றாக ஏத்திப் பின்பு, திருமலை யடிவாரத்தேற எழுந்தருளி, எம்பெருமானாருக்கு உகந்தவிஷயமான கோவிந்தராஜனையும், பின்பு அடிப்புளியாழ்வாரையும், அவர்க்கருகே எழுந்தருளியிருக்கிற பராங்குச பரகாலாதிகளையும் திருவடி தொழுது, பின்பு, திருமலையேறியருளி, வழியிலே எழுந்தருளியிருக்கிற காட்டழகிய சிங்கரையும் திருவடி தொழுது, கல்வேலியருகே எழுந்தருள, பின்பு திருமலை நம்பியும் அனந்தாழ்வானும் இச்செய்தியைக் கேட்டு எதிர்கொண்டு ஒருவர்க்கொருவர் ப்ரதக்ஷிண ப்ரணாமாத்யநுவர்த்தநங்களைப் பண்ண, பின்பு அரையரும் அவர்களுடனே பெரிய திருவாசலிலே சென்று தண்டம் சமர்ப்பித்துத் திருவீதி வலமாக எழுந்தருளித் திருக்கோனேரியிலே நீராடிச் சகல அநுஷ்டாநங்களையும் செய்தருளி, "வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றெல்லாவெவர்க்கும் ஞானப்பிரானை யல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே" என்கிறபடியே, ஆழ்வார் உகந்த விஷயமான ஞானப்பிரானையும் மங்களாசாஸனம் செய்தருளி, பின்பு பெரிய திருவாசலிலே தண்டன் ஸமர்ப்பித்து, ஸேவாக்ரமத்தின்படியே திருக்கோயிலிலே புகுந்து, ஸ்ரீபலிபீடத்தருகே தண்டன் ஸமர்ப்பித்துத் திருமடப்பள்ளி நாய்ச்சியாரையும் திருவடிதொழுது, ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி, வேங்கடத்தரியையும் திருவடிதொழுது, பின்பு வென்று மாலையிட்டான் திருமண்டபத்திலே சென்று அலங்க்ருதமான மத்தகஜம் போலே, 'செங்கமல' என்னும் பாட்டின்படியே ஸர்வாபரண பூஷிதராய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ நிதியை, அதிதரித்திரன் மஹாநிதியைக்கண்டாற் போலே கண்டுகந்து திருவடி தொழுது, ஸ்வாசார்யார்க்கு ஆளவந்தா ரருளிச்செய்த ஸ்தோத்ர ரத்னத்தைத் தொடங்கி 'மதீய மூர்த்தாநம் அலங்கரிஷ்யதி' என்னுமளவாக அநுஸந்திக்கிற அளவிலே, திருவேங்கடமுடையானும் [1]'ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்னும் விஷயம் நமக்கு ஸுலபமாய்க் கிட்டப் பெற்றதே என்று மிகவும் திருவுள்ளமுகந்து, அரையரைப் பார்த்து அர்ச்சகமுகேந, "அடிக் கீழமர்ந்து புகுந்தடியீர் வாழ்மின்" என்று அருளப்பாடு ப்ரஸாதித்தருள, அரையரும் பின்பு உகப்புடனே உள் புகுந்து ஸ்ரீ குலசேகரப் பெருமாள், "படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேன்" என்று ப்ரார்த்திக்கையாலே திருவாசற்படியை ஆழ்வாராகவே ப்ரபத்திபண்ணி, அருகே நின்றருளி, "அலர்மேல்மங்கை

1. அத்தகைய மகாத்மா அரியன்.

யுறை மார்பா, உன்னடிக்கீழ் வந்து புகுந்தேனே" என்று பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் திருவடி தொழுது, திருவாபரணச் சோத்தியுடனே பாதாதி கேசாந்தமாகச் சேவித்து நிற்க, அவ்வள வில் திருவேங்கடமுடையானும் அரையர்க்குத் தீர்த்தப் பிரசாதம், ஸ்ரீ சடகோபன், பரிவட்டம், பூவார்கழல்கள் முதலான வரிசைக ளெல்லாம் ப்ரஸாதித்து அரையரைப் பார்த்து, "நீர்நம் உடையவருக் குத் திருவாய்மொழி ஆசார்யர் ஆகையாலே நமக்கு மிகவும் உகந்த விஷயமாய் இருக்கிறீர்; ஆனபின்பு, வ்யாஸ பராசராதிகள் நம் திறத்தில் கவிபாடினாற் போலே செந்தமிழாலே முந்தறமுன்னம் நம்மைக் கவி பாடுகையாலே நமக்கினிய விஷயமான முதலாழ்வார் கள் கவியிலே ஒரு பாட்டைப் பாடுவீர்," என்ன அரையரும் [1]அதி க்ஷுத்ரனை அடியேனை [2]ஆழ்வார்கட்காக இப்படி விஷயீகரிப்பதே யென்று, போரத் திருவுள்ளமுகந்து, முதலாழ்வார்கள் அருளிச் செய்த ப்ரபந்தங்களிலே அடிப்பாட்டுக்களையும் சாற்றுப் பாட்டுக் களையும் "மனத்துள்ளான், வேங்கடத்தான்," "செறிவார்குழல் கற்றை" என்னும் பாட்டுக்களைத் தேவகானத்திலேறிட்டு முத்தர் சாமகானம் பண்ணுமாப்போலப் பாட, பின்பு, திருவேங்கட முடையானும் உகந்தருளி, மீளவும் பூவார்கழல்கள், ஸ்ரீசடகோபன் தீர்த்த ப்ரசாதங்கள், முதலான வரிசைகளெல்லாம் ப்ரஸாதித் தருள, அரையரும் எல்லாவற்றையும் பெற்றுக் க்ருதார்த்தராய் இருக்க, பின்பு நம்பியும் அநந்தாழ்வானும் அரையரைப் பார்த்து, "தேவரீர் நாளை முதலாக அத்யயனோத்ஸவத்திலே ஆழ்வார்கள் திவ்யப் பிரபந்தங்களைத் திருவேங்கடமுடையான் திருச்செவி சாத்தியருளத் தேவரீர் தேவகானத்திலேறிட்டுப் பாடியருள வேணு" மென்ன, அரையரும் இது திருவேங்கடமுடையான் நியமனம் என்று, மற்றை நாள் தொடங்கி அத்யயனோத்ஸவத் திலே திருப்பல்லாண்டு முதலாகத் திவ்யப் பிரபந்தங்கள் எல்லா வற்றையும் செவிக்கினிய செஞ்சொல் என்னும்படி நாள் தோறும் பாடி க்ருதார்த்தராய்த் திருநாள் முடிந்தவாறே, நம்பி, அநந்தாழ்வார், அர்ச்சகர் முதலிய அனைத்துக் கொத்திலுள்ளார் அடைய மிகவும் ஆதரிக்கப் பின்பு திருவேங்கடநாதன் அனு மதி கொண்டு கோயிலேற எழுந்தருளி எம்பெருமானார் ஸந்நிதி யிலே செல்ல, எம்பெருமானாரும் அரையரை ப்ரத்யுத்தாநாதி

1. மிக இழிந்தவனை. 2. ஆழ்வார்கள் பொருட்டு.

வந்தனங்களாலே ஸத்கரிக்கப் பின்பு, அரையரும், தேவருக்காகத் திருவேங்கடமுடையான் செய்தருளின விஷயீகாரம் என்னுல் சொல்லி முடியாது என்றருளிச் செய்து, பின்னையும் திருவேங்கடமுடையான் செய்தருளின அநுக்ரஹாதிசயத்தையும், அவர் நியமித்த நியமனத்தையும், திருமலைநம்பி, அனந்தாழ்வான் ஆகியவர்கள் நியமித்ததையும் அருளிச்செய்ய, எம்பெருமானாரும் கேட்டருளி மிகவு முகந்து, திருவுள்ளத்திலே சிந்தித்து முதலாழ்வார்கள் மூவரும் தங்கள் தங்கள் ப்ரபந்தங்களிலே, "எழுவார் விடைகொள்வார்", "வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடம்", "பழுதொன்றும் வாராதவண்ணமே விண்கொடுக்கும் மண்ணளந்த சீரான் திருவேங்கடம்", "வேங்கடத்துமேயானும் உள்ளத்தினுள்ளான் என்றேர்", "நின்றதுவும், வேயோங்கு தண்சாரல் வேங்கடமே", வாய்திறங்கள் சொல்லும்வகை, வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு", "திருவேங்கடம் கண்டீர் வான்கலந்த வண்ணன் வரை", "பிறைவாய்ந்த வெள்ளத் தருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான் உள்ளத்தி னுள்ளே யுளன்", "வெற்பென்று வேங்கடம் பாடும்", என்கிறபடியே பலவிடங்களிலும் திருமலையாழ்வாரையும், அதில் ஸர்வ ஸுலபனை வர்த்திக்கிற எம்பெருமானையும் தங்களுக்கு மிகவும் அநுபாவ்ய விஷயமாக அருளிச்செய்த மாத்ரமன்றிக்கே, திருவேங்கட யாத்ரையும் செய்தருளித் திருமலை யடிவாரத்திலே சிலகாலம் மங்களாசாஸநபரராய்ப் பகவதநுபவம் செய்தருளினர்களென்னு மர்த்தத்தையும், பின்பு திருமங்கை மன்னனும், அவர்கள் திருவுள்ளக் கருத்தின்படியே, "செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர்" என்று முதலாழ்வார்கள் மூவர்க்கும் திருவேங்கடமுடையானே அநுபாவ்ய விஷயமென்று தம்முடைய ஸ்ரீ ஸூக்திகளிலே ப்ரகாசிப்பித்தார் என்னும் அர்த்தத்தையும், பெரிய பெருமாள் சிஷ்ய ஸம்ப்ரதாயத்திலே கேட்டிருந்தபடியே நினைத்தருளி, நாதமுனிகள் திருவம்சயரான ஒரு அரையரை மலைகுனியநின்றார் அரைய ரென்று திருநாமம்சாற்றித் திருமலையிலே நித்யவாஸமாய் எழுந்தருளியிருந்து, ஆழ்வார்கள் திவ்யப் பிரபந்தங்களை நாள்தோறும் தேவகானத்தி லேறிட்டு ஸந்நிதியிலே அநுஸந்திக்கும்படிக்கும், அன்று திருவேங்கடமுடையான் அரையரைக் கிருபை செய்தருளி அவர் திருப்பவளத்தாலே முதலாழ்வார் ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு திருவுள்ள முகந்தபடியாலே, இனி

மேல் வரும் காலமெல்லாம் அத்யயனோத்ஸவத்துக்கு மூந்துற முன்னம் முதலாழ்வார் ஸ்ரீ ஸூக்திகளான திருவந்தாதி மூன்று முதலாக இயற்பாவை அநுஸந்திக்கும்படிக்கும், மறுநாள் தொடங்கிக் கோயில்போலத் திருப்பல்லாண்டு முதலான மற்றப் பிரபந்தங்களையும், பின்பு ஏகாதசி தொடங்கித் திருவாய்மொழியையும் அநுஸந்தித்துச் சாற்றி மறுநாள், அநந்தாழ்வான் திருமலையிலே திருவேங்கடமுடையான் திருவடிகளிலே வழுவிலா அடிமைசெய்ய வேண்டும் நாமென்று ப்ரார்த்தித்த கைங்கர்யத்தை நாள்தோறும் பண்ணிக்கொண்டு, முமுக்ஷுக்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நித்யாநுஸந்தேய மாம்படி ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்திகளையும் ப்ரவசனம் பண்ணிக்கொண்டு, மதுர கவிகளைப் போலே ஆழ்வார் திருவடிகளிலே ப்ரேமாதிசயத்தாலே [1] சரம புருஷார்த்த ப்ரதிபாதகமான கண்ணிநுண் சிறுத்தாம்பையும் அநுஷ்டான பர்யந்தமான அநுஸந்தானத்துடனே அநுஸந்தித்துக் கொண்டு, சரமபர்வத்திலே நின்று மதுரகவி தாஸரென்று திருநாமம் பெறுகையாலே அவர் உகந்தநுபவிக்கும் கண்ணிநுண் சிறுத் தாம்பை ஸந்நிதியிலே அநுஸந்திக்கும்படிக்கும் நியமித்து, ப்ரஸாதித்து, அநந்தாழ்வானுக்கு இந்தப்படிக்குத் திருமுகப்பட்டயம் ப்ரஸாதித்தருளி, மலைகுனிய நின்றாரரையரையும் திருவேங்கடத்தைப் பதியாக வாழ்ந்துகொண்டு இரும் என்று நியமித்துத் திருமலைக்கு அனுப்பியருள,

அரையரும் திருமுகப்பட்டயத்தைச் சிரஸாவஹித்து ஸஹ குடும்பமாகத் திருமலை ஏறவெழுந்தருளி, ப்ரதமம் அநந்தாழ்வான் திருமாளிகையிலே சென்று ஒருவர்க்கொருவர் அப்யுத்தாந அபிவந்தனபரரான பின்பு, திருமுகப் பட்டயத்தைத் கொடுக்க, அனந்தாழ்வானும் அத்தை வாங்கிச் சிரஸாவகித்து மிகவும் உகந்தருளி, அரையருடனே நம்பி திருமாளிகையிலே செல்ல, பின்பு ஒருவர்க்கொருவர் அதிப்ரீதராய் அபிவந்தனங்களைப் பண்ணிய பின்பு, அரையரும் அவருடனே அச்சேதியை விண்ணப்பஞ் செய்ய, நம்பியும் இத்தைக் கேட்டுத் திருவுள்ள முகந்தருளி, நம்பியோடும் அரையரோடும் திருவேங்கடமுடையான் ஸந்நிதியிலே எழுந்தருளி, "தேவரீர் எம்பெருமானர் நியமனத்தின்படியே கொண்டருள வேணு"மென்று விண்ணப்பஞ் செய்ய, திருவேங்கடமுடையானும் இத்தைக் கேட்

1. இறுதியில் அடையத்தக்க பேறாகச் சொல்லப்பட்ட (அ) பேற்றுக்கு எல்லை நிலமான பாகவதர்க் கடிமையை அறிவிக்கும்.

டுத் திருவுள்ள முகந்தருளி, "நம் ராமாநுஜன் நியமனத்தைப் பரி பாலனம் பண்ணுகிறோம்" என்று மிகவும் உகந்தருளி அர்ச்சக முகேந நம்பிக்கும் அனந்தாழ்வானுக்கும் அரையருக்கும் அருளப் பாடு ப்ரஸாதித்தருளப் பின்பு, அனந்தாழ்வானும், ப்ரதி ஸம்வத் ஸரம் அத்யயநோத்ஸவத்துக்கு முன் இயற்பா முதலாகத் திவ்ய ப்ரபந்தங்க ளெல்லாம் அநுஸந்திக்கும்படிக்கும், பின்பு, அத்யய நோத்ஸவத்திலே திருவாய்மொழி அநுஸந்தித்துச் சாற்றி, மறு நாள், கண்ணிநுண் சிறுத்தாம்பை ஸந்நிதியிலே அநுஸந்திக்கும் படிக்கும் கட்டளைபண்ண, இப்படி ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை உத்தரோத்தரமாய்ச் செல்லா நிற்கிற நல்லடிக் காலத்திலே,

எம்பெருமானார் அவதார ஸமாப்தியை ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் வந்து சொல்ல அனந்தாழ்வான் கேட்டருளி மிகவும் திருவுள்ளம் கலங்கி, ஒரு ஸம்வத்ஸரம் திருநந்தவன கைங்கர்யத்தையும் உபே க்ஷித்துத் திருவேங்கடமுடையானோடு [1] முசித்திருந்த அளவிலே, திருவேங்கடமுடையானும் அனந்தாழ்வானை அருளப்பாடிட்டருளி, "வாரீர், நாமன்றோ நம் ராமாநுஜனை இழந்தது; உமக்கு நாமன்றோ கடவோம்; உமக்கொரு குறையுமில்லை" என்று பூவார் கழல்கள்,ஸ்ரீ சடகோபன் முதலான வரிசைகளெல்லாம் ப்ரஸாதித் தருளி "உமக்கும் அபிமதங்களை நாமே தலைக்கட்டுகிறோம்" என்ற பின்பு, அனந்தாழ்வானும் திருவுள்ளந் தெளிந்து திருவேங் கடமுடையான் திருமுக மண்டலத்தை ஸேவித்து, "தேவரீர் எம்பெருமானாரைப்பற்றி அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருள வேணு" மென்ன, திருவேங்கடமுடையானும் சொல்லு மென்ன, பின்பு அனந்தாழ்வானும், "'தமஸ: பரமோ தாதா சங்க சக்ர கதாதர:' என்கிறபடியே பரத்வ சிஹ்நமான திருவாழி திருச் சங்கை ஓர் ஆச்ரித விஷயத்திலே யுகந்து ப்ரஸாதித்தருளிய மஹா குணத்தை யறியாமல் அந்யதா ப்ரதிபத்திபண்ணி நஷ்டப்ராப்த்ரா யிருக்கும் லோகத்தாரடைய தேவரீர் திறத்திலே பரத்வபுத்திபண்ணி உஜ்ஜீவிக்கும்படிக்குத் திருவாழி திருச்சங்கைத் திருக்கைகளிலே சாத்தியருளும்படிக்கு ஸங்கல்பித்த தேவரீர் திறத்தில், நிர்க்குணத் வாதி தோஷங்களைச் சொன்ன [2]பாஹ்ய [3]குத்ரிஷ்டிகள் மண்ணுண்

1- பிணங்கி.
2. வேதத்தை உடன்படாதவர்கள்.
3. வேதத்தை யுடன்பட்டும் பொருத்தமில்லாத கருத்துடையவர்கள்.

ணும்படி தேவரீர் ஸகல ஜகத்காரண பூதரென்றும், ஸகல கல்யாண குணாதிகரென்றும், அகிலஹேய ப்ரத்யநீக, ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபன் என்றும், அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹ விஸிஷ்டனென்றும், ஸமஸ்த கல்யாண குணாத்மகனென்றும், ஸ்ரீ பூமி நீளா நாயகனென்றும், ப்ரஹ்ம ருத்ராதி ஸர்வ ஸமாச்ரயணீய னென்றும், ஸகலஜகத் ஸர்க்க ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவென்றும், உபய விபூதி நிர்வாஹகன் என்றும், மோக்ஷப்ரதன் என்றும், நித்ய முக்தாநுபாவ்யனென்றும் வேதாந்தங்களிலே ப்ரஸித்தமான அர்த்தத்தை எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படிக்கு ஸ்ரீ பாஷ்யம் செய்தருளி ஜகத்தை ரக்ஷித்தருளும் மஹோபகாரரான எம்பெருமானார் விஷயமான நூற்றந்தாதியை அத்யயநோத்ஸவாநந்தரத்திலே தனித்து ஒருநாள் திருச்செவி சாத்தியருள வேணும்" என்ன, திருவேங்கடமுடையானும் அத்தைக் கேட்டுத் திருவுள்ளம் உகந்தருளி, நம் சடகோபன், கலியன் சொல்லான பிரபந்தங்கள் போலே நம் ராமாநுஜன் விஷயமான பிரபந்தத்தையும் நம் முன்னாக அநுஸந்தியுங்கோள் என்ன, அனந்தாழ்வானும் இத்தைக்கேட்டு மிகவும் உகந்து கொண்டு, கண்ணிநுண் சிறுத்தாம்பு அநுஸந்தித்த மறுநாள் நூற்றந்தாதியை ஸந்நிதியிலே அநுஸந்திக்கும்படி ஸங்கல்பித்தும், அதன் மறுநாள் எம்பெருமானார் நியமனத்தின்படியே நம்பிசெய்தருளும் தண்ணீரமுதுவழி கைங்கர்யமும் நடக்கும்படி நியமித்தும், ஆழ்வார்கள் திருமலை யேறியருளி மங்களாசாஸனம் செய்யாத குறையெல்லாம் தீர, எம்பெருமானார் நித்யமாகவே திருமலையிலே யிருந்து மங்களாசாஸனம் செய்யவேணு மென்ற நினைவாலும், கலிதோஷத்தாலே [1] அபிவ்ருத்தங்களான பாஹ்ய குத்ருஷ்டி ஸித்தாந்த மெல்லாம் நஷ்டமாக வேணுமென்னும் நினைவாலும், திருவேங்கடமுடையான் நியமனம் கொண்டு அவர்முன் எம்பெருமானாரைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணியும், அவர்திருவடி நிலைகளுக்குத் [2] தன் திருநாமம் சாத்தியருளியும், இப்படித் திருமலையிலே அநேக ஸ்ரீ வைஷ்ணவ தர்மங்களைப் ப்ரவர்த்திப்பித்தும், 'ஸ்ரீ ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததா மபிவர்த்ததாம்,' என்கிறபடியே எம்பெருமானார் நியமனத்தின்படியே திருவேங்கடச் செல்வம் நாள்தோறும் வர்த்திக்கும்படி மங்களாசாஸன

1. மிக்க விரிவான.
2. அநந்தாழ்வான்.

பாராய், திருவேங்கடமுடையான் விஷயமான குணநுபவ கைங்கர்யங்களையும் குறைவற நடத்திக்கொண்டு வாழ்ந்தருளினார்.

மணவாள மாமுனிகள் ஸ்ரீ பாதத்தில் ஆச்ரயித்து ராமாநுஜ தரிசன ப்ரவர்த்தகரான அஷ்டதிக் கஜங்கள் திருநாமம் :—

வாநாதியோகிவர வேங்கடயோகிவர்ய-
ஸ்ரீ பட்டநாதமுனி வாதிபயங்கரார்யா: ।
ராமானுஜார்ய வரதார்ய நதார்திஹாரி,
ஸ்ரீ தேவராஜகுரவோऽஷ்டதிசாகஜாஸ்தே ॥

वानादियोगिवर - वेङ्कटयोगिवर्य-
श्रीभट्टनाथमुनि - वादिभयङ्करार्याः ।
रामानुजार्य - वरदार्य - नतार्विहारि-
श्रीदेवराजगुरवोऽष्टदिशागजास्ते ॥

வனமாமலை ஜீயர், திருவேங்கட ராமாநுஜ ஜீயர், பரவஸ்து பட்டர் பிரான் ஜீயர், கோயில் கந்தாடை அண்ணன், ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா, எறும்பியப்பா, கிடாம்பி அப்புள்ளார், கிடாம்பி அப்பிள்ளை.

* பூர்வ காலத்திலே அற்றபற்றர் சுற்றிவாழும் அந்தணீர் அரங்க மென்னும்படி பரமைகாந்திகளுக் கெல்லாம் ஆவாஸபூமியான திருவரங்கம் திருப்பதியிலே நித்யவாஸம் பண்ணிக்கொண்டு பெரியபெருமாள் திருவடிகளிலே பரிவுடையரான ஆழ்வா ரரையரென்னுமவர், ஒருகால விசேஷத்திலே திருவேங்கடமுடையான் யாத்ரை பண்ணிக்கொண்டு திருமலையிலே எழுந்தருளி, திருக்கோனேரியிலே நீராடி ஸமஸ்தாநுஷ்டானங்களையும் செய்தருளி, ஞானப்பிரானையும் திருவடிதொழுது பெரிய திருவாசலான அவாவறச் சூழ்ந்தான் திருவாசலிலே ஸேவித்து உட்புகுந்து திருப்புளியாழ்வார், அழகிய மணவாளன் திருமண்டபத்தையும் ஸேவித்து, ஸ்ரீ பலிபீடத்தருகே நின்று தண்டனிட்டு, அவ்விடத்திலே சதுர்வித புருஷார்த்திகளான ஆச்ரிதர்களையுங் கடாக்ஷித்துக் கொண்டு, திருவுள்ளத்துக் குகப்போடே உட்புகுந்து திருமடைப்பள்ளியிலே நாய்ச்சியாரையும் ஸேவித்துத் திருமாமணி மண்டபத்திலே சென்று 'ஆநந்த

* இந்தக் கருத்து இந்நூலில் 48 - ம் பக்கத்திலும் வந்துளது.

மயாய மண்டப ரத்நாய நம' என்று ஸேவித்துப் ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி ஸேனைமுதலியார், எம்பெருமானார், வேங்கடத்தரிகளை யும் ஸேவித்து, வென்று மாலையிட்டான் மண்டபத்தே சென்று பெரிய திருவடி, த்வாரபாலகர்களையும் ஸேவித்து, எம்பெருமானார் திருமுன்பே அவர் புருஷகாரமாகத் திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுது, "தாயே தந்தை" என்னும் திருமொழியை யநு ஸந்தித்து உள்ளே புகுந்து குலசேகரன் படியருகே நின்று "ஆபாத சூடமநுபூய ஹரிம் சயானம்" என்கிற வாஸனையாலே பூவார்கழல்கள் தொடங்கித் திருவபிஷேகம் வரையும் அநுபவித்து, கங்குலும் பகலுமென்னும் பத்துப் பாட்டையும் தேவகானத்தி லேறிட்டுப் படாநிற்கப் பின்பு, எம்பெருமானும் உகந்து, "வாரீர் அரையரே, ஆழ்வார் நம் பக்கல் மோஹித்து நாயிகாதசாபந்நராய் நம்மையநுபவித்த ப்ரகாரத்தை நீர் அநுகரித்துக் காட்டினீர்; ஆகை யாலே நமக்கினியதா யிருந்தது இத்திருவாய்மொழி; நங்கலியனும் நம்மை நாயிகாதசாபந்நராய் அநுபவித்த சொல்லிலே ஒன்றைச் சொல்லீர்" என்ன, அப்போது ஆழ்வாரரையரும் அதிமுக்த ஹ்ருத யராய்க் கலியன் அருளிச்செய்த [1] ஈரச்சொல்லில் ஈடுபட்டு, "காரார் வரைக் கொங்கை" என்று கலியன் மடலூர்ந்து பகவதநுபவம் பண்ணின பிரபந்தத்தைப் பாவச காத்ரராய் அருளிச்செய்யக் கேட் டுத் திருவுள்ளமுகந்து பூவார்கழல்கள், ஸ்ரீ சடகோபன், தீர்த்தம் முதலியவைகள் எல்லாம் ப்ரஸாதித்தருளப் பெற்று க்ருதார்த்தராய் இருக்க, அப்போது ஸந்நிதியிலே யிருக்கும் பெரியோர்கள், திரு வேங்கட ஜீயர், அஞ்ஜன வெற்பனரையர் முதலானோர்க ளெல் லாரும் திருவுள்ளமுகந்து இந்த மத்யாஹ்ந காலத்திலே திருமாலை சாத்தியருளும் போது திருவேங்கடமுடையான் உகந்து, கலியன் பாட்டைக் கேட்டருளத் திருவுள்ளமுண்டாய்த் திருமடலைக் கேட் கையாலே, இன்று தொடங்கி மத்யாஹ்ந காலத்திலே திருமாலை சாத்தி யருளும்போது சிறிய திருமடலை அநுஸந்திக்கக் கேட்டரு ளவும், கங்குலும் பகலும் கேட்டுத் திருவுள்ள முகக்கையாலே நித்யாநு ஸந்தான காலத்திலே கங்குலும் பகலும் கேட்டருளவும் கடவர் என்று சிரோபாஸித ஸத்வ்ருத்தர்கள் அருளிச் செய்வார் கள். திருவீதியிலும் இந்தச் சிறிய திருமடல் தானே அநுஸந் தேயம்.

---

1. அன்புடைய சொல்லிலே.

ஸ்ரீ வேங்கடேசஸ்ய க்ருஷ்ண ஜயந்தீ பரிபாலனே ப்ர மாணம் :—

பூர்வகாலத்திலே ஸ்ரீ வைகாநஸ வம்சத்திலே செங்கனி வாயான் வம்சஸ்தரான பெரிய பெருமாள் என்னும் அர்ச்சகரான வர், ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பத்தியோடே திருவேங்கடமுடையான் திருமேனியிலே பரிவராய்ப் பகவதநுக்ரஹத்துக்குப் பாத்ரபூதரா யிருப்பர். இப்படி யிருந்துள்ள பெரிய பெருமாள் ஸ்வப்நத்திலும், தத்காலீனரான அரையர் ஸ்வப்நத்திலும், தத்காலீனராய்த் திரு வேங்கடச் சிறுக்கனென்று திருவேங்கடமுடையான் புத்ராபி மானஞ் செய்கைக்குப் பாத்ரபூதராய், ஸமஸ்தவித கைங்கர்ய நிர் வாஹ துரந்தரரான திருப்பணிப்பிள்ளை ஸ்வப்நத்திலும், ஒருராத்திரி திருவேங்கடமுடையான், ப்ரதமம் தம்முடைய நிஜாகாரத்தைக் காட்டியருளிப் பின்பு, க்ருஷ்ணராய் நின்றருளி ஸேவை ப்ர ஸாதித்து, "வாரீர் பெருமாளே, வாரீர் அப்பனரையரே, வாரீர் பிள்ளையே, நாம் பூர்வம் த்வாபர யுகத்திலே லோக ரக்ஷணார்த்தமாக வஸுதேவ குமாரனாய்ப் பிறந்ததான அவதார தினமான ஜயந்தி வைபவத்தை நம் ராமாநுஜ முடையார் எல்லோரும் பரிபாலனம் பண்ணுமாப் போலே, நமக்கு அபிமதமாம் ஸ்ரீ வைகானஸ பரமரிஷி [1]ப்ரோக்தமாய், நாம் [2]ஆதரிக்கின்றதான ஜயந்தி உத்ஸவத்தை இந்த ஸ்தலத்திலே ராமாநுஜமுடையா ரெல்லாரும் பரிபாலனம் பண்ண வில்லை; ஆகையாலே, நமக்கும் அவர்களுக்கும் ஸம்பந்தமில்லையே யாகிலும் நம் மிராமாஜனுக்குப் பூர்வம் கொடுத்த அநுக்ரஹாதி சயத்தாலே அவர்களை விடமாட்டோ மாகையால், இந்த ஸம்வத் ஸரம் தொடங்கி வருஷந்தோறும் வருகிற ஜயந்தி உத்ஸவத்தை நம் மோடே ஆசரிக்கும்படி நம் ராமாநுஜ முடையாரோடு சொல்லி நமக்கு ஸந்தோஷம் பண்ணுவியுங்கோள்" என்று அருளிச்செய்ய, அநந்தரம் அவர்களும் ப்ரபுத்தராய்த் தாங்கள் கண்ட ஸ்வப்நத்தை ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு ஸந்துஷ்டராய் இருக்க, அப்போதந்த ஸ்தலத்திலே ஸ்வாமிக்குத் திருமலைத் திருநாள் நடக்க, அந்தத் திருநாளிலே ரதோத்ஸவம் முதலிய எல்லாம் கொண்டருளி ஸ்ரீ புஷ்பயாகப் ப்ரதிநிதியான கலசாபிஷேகங் கொண்டருளித் திரு வாராதனங் கொண்டருளிப் புஷ்பயாகங் கொண்டருளின அள விலே, அர்ச்சகரான பெரிய பெருமாள், ஸ்ரீ சடகோபனைத் திருக்

1. சொல்லியதாய். 2. விரும்புகின்றதான.

கைகளிலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு ராமாநுஜமுடையரான ஜீயர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள், ஆசார்ய புருஷர்கள், எல்லோரும் மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டிருக்க, அப்போது அந்தத் திருவோலக்கத்திலே ராமாநுஜ முடையார்கள் எல்லாரையும் பார்த்து, திருவேங்கடமுடையான் தங்களுக் கருளிச்செய்த ஸ்வப்ந விருத்தாந்தத்தை எல்லோரும் கேட்கும்படி உச்சைஸ்வரமாக அருளிச் செய்து, திருவேங்கடமுடையான் திருவடிகளில் ஸம்பந்தமும், அவர்க்குப் பிராணபூதரான எம்பெருமானார் திருவடிகளில் சம்பந்தமும் வேண்டினவர்க ளெல்லாரும், ஸ்ரீ வைகாநஸ சாஸ்த்ர ஸித்தமாய்த் திருவேங்கடமுடையான் கொண்டருளுகிற ஜயந்த்யுத்ஸவத்தை நீங்களும் ஆசரியுங்கோள் என்று எல்லார் திருமுடிகளிலும் ஸ்ரீ சடகோபனை வைத்தருளிய பின்பு, எல்லாரும் உகந்தங்கீகரித்து,

குரூம்ச்ச ஸ்வப்நத்ருஷ்டாம்ச்ச பூஜாந்தே சார்ச்சகாநநாத் ।
கிரிபோ ஹிதமாசஷ்டே மனுஷ்யாணாம் கலௌ ஹரி: ॥

[ गुरूं श्च स्वप्नदृष्टां श्च पूजान्ते चार्चकाननात् ।
गिरिपो हितमाचष्टे मनुष्याणां कलौ हरिः ॥ ]

என்கிற ப்ரமாணத்தின்படியே எமக்கு த்ரிவிதாநுக்ரஹமும் நிர்ஹேதுகமாக உண்டாச்சுதென்று ஸந்துஷ்டர்களாய், பகவத் கடாக்ஷ பாத்ரக பூதர்களான ரிஷிகள், ஸ்மிருதி, இதிஹாஸ, புராண முகத்தாலே அருளிச்செய்த வாக்யங்கள், நமக்கு உபாதேயமாம் போது, ஸர்வ சேஷியாய், ஸமஸ்த சேதநோஜ்ஜீவன காமனான எம்பெருமான் தானே அர்ச்சா ரூபமாய் அர்ச்சகமுகேந அருளிச்செய்த ஹிதவசனங்கள் விசேஷித்து [1] ஆதரணீயம், [2] ஆசரணீயம், [3] அநுவர்த்தநீய மென்று அருளிச்செய்து கொண்டு அந்த ஸம்வத்ஸரம் தொடங்கி ப்ரதி ஸம்வத்ஸரமும் பெருமானுக்கு அபிமதமான ஜயந்தியை அநுஷ்டித்துக்கொண்டு வருவார்கள்.

திருமலை திருப்பதி நித்ய வாஸிகளான ராமாநுஜ முடையார்கள் எல்லாரும், திருவேங்கடமுடையான் பெரிய திருவத்யயநோத்ஸவத் திருநாளில் ஆமுங் திருநாளில் ஸாயங் காலத்திலே திருவீதியெழுந்தருளி ஸ்ரீ கோபுர வாசலிலே திருமுற்று வெளியிலே நின்

1. அநுஷ்டிக்கத்தக்கது. 2. போற்றத்தக்கது. 3. பின்பற்றத்தக்கது.

றருளிய பின்பு, நாய்ச்சிமார்கள் இருவரும் கோயிலினின்றும் புறப்பட்டருளி எம்பெருமானுக் கெதிராக நின்றருள, அப்போது அரையர், நாய்ச்சியார் சமீபத்திலே நின்றுகொண்டு, நாய்ச்சியார் அருளிச் செய்கிறதாக, 'விண்ணிடை மடவார்' ப்ரணய கலஹப் பிரபந்தத்தில் [1] ப்ரதம ப்ரகட்டத்தை எம்பெருமானைப் பார்த்தருளிச் செய்ய, பின்பு, எம்பெருமானருகே ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் நின்று கொண்டு இரண்டாம் ப்ரகட்டத்தை அருளிச் செய்ய, இப்படி நாய்ச்சியாரும் எம்பெருமானும் ஒன்றுக்கொன்று உத்தர ப்ரதியுத்தரம் சொல்லுகிறதாக அரையரும் ஸ்ரீ வைஷ்ணவருமாக ஒன்றுக் கொன்று அந்தந்த கட்டத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்டருளும்படி அநுஸந்தித்துப் பின்பு, கூடல்வளைப்பென்று திராவிட சாஸ்த்ர ஸித்தமான சகுனத்தை அமுதுபடியிலே [2] ரேகாரூபேண கீறிக் கூடல்வளைத்து இவர்களுடைய(வும்) ப்ரணய கலஹத்தைத் தீர்த்து [3] ஸங்கதராக்கி மங்களாசாஸனம் செய்தருளி உத்ஸவத்தை அநுக்ரஹித்தருளுவர். இத்தைப் 'பந்துங்கழலும் பறிப்பு' என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இந்தப் படிக்கு உத்ஸவத்தை ஸ்வாமி கொண்டருளுப்படிக்குக் காரணம் முன்புண்டான ஸ்வப்ந வ்ருத்தாந்தம்.

காத்யாயநः —

த்ருப்யந்தீ ப்ரஹ்மகோஷேண பிதரஃ ஸஹ தைவதைஃ ।
அதஸ் தத்திவஸே விப்ரஃ வேதபாராயணம் சரேத் ‖

[ कात्यायनः—

तृप्यन्ति ब्रह्मघोषेण पितरः सह दैवतैः ।
अतस्तद्दिवसे विप्रः वेदपारायणं चरेत् ॥ ]

விஷ்வக்ஸேநஸம்ஹிதாயாம் —

புஷ்பயாகே ச பூஜாயாம் தேவஸ்யோத்ஸவஸம்பவே ।
வேதபாராயணம் குர்யாத் தைவே பித்ருதிநே ததா ‖

[ विष्वक्सेनसंहितायाम्—

पुष्पयागे च पूजायां देवस्योत्सवसम्भवे ।
वेदपारायणं कुर्यात् दैवे पितृदिने तथा ॥ ]

1, முதற் பகுதியை. 2. கோட்டின் வடிவமாக. 3. ஒன்றுபட்டவராக்கி.

திருவேங்கடமுடையான் கோவிந்தராஜன் திருவாரதன காலத்திலே வேத பாராயணம் பண்ணும் க்ரமம் :—வேத சதுஷ்டயம்; கல்ப ஸூத்ரம்; ஸ்ரீராமாயணம்; ஸ்ரீ விஷ்ணு புராணம்; ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்ம்யம்; ஸ்ரீ சித்ரகூட மாஹாத்ம்யம்; இயல்; ஆளவந்தார் ஸ்தோத்ரம்; ஸ்ரீ வைகுண்டஸ்தவம்; ஸ்ரீ பாஷ்யம்; யதிராஜ விம்சதி; இவைகள் எல்லாம் ஒவ்வொன்று ஒருரு அநுஸந்தேயம். ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியான பாட்டை இரட்டிக்கவேணும். ஸ்ரீ வைஷ்ணவர் திருமாளிகைகளிலும் இப்படியே அநுஸந்தான க்ரமம். ஸ்ரீ வைஷ்ணவர் திருமாளிகைகளிலே [1] பித்ர்யாத்யுத்ஸவத்தைக் குறித்துத் திருவாய்மொழி தொடங்கும் போது,

'த்ருப்யந்தி ப்ரஹ்ம கோஷேண' என்றும், 'புஷ்ப யாகேச பூஜாயாம்', இத்யாதியிலும் வேதபாராயணம் பண்ணவேணுமென்னும் விதியுண்டாகையாலே, நாலு வேதங்களையும் தொடங்கித் திருவாய்மொழி தொடங்கவேணும். இதிஹாஸ புராணாதியாக அநேக ப்ரபந்தாநுஸந்தானம் பண்ணுகை ஸத்வ்ருத்த ஸம்ப்ரதாயம். சாத்தாதவனுக்கு [2] த்தூஷ்ணீம். திருவாய்மொழி தொடங்க வேணும்; வேதம் நாலும் தொடங்க வேண்டா. [3] " தஸ்ய அநதிகாராத் ".

திருவேங்கடமுடையான் மார்கழி மாஸத்தில் பெரிய திருவத்யயனோத்ஸவத் திருநாளில் ஸாயங்காலத்தில் வெளியிலே நின்றருள, நாய்ச்சிமார்களும் தனித்துத் தோளுக்கினியானிலே ஏறியருளித் திருக்கோபுர வாசலிலே புறப்பட்டு நின்றருள, அப்போது இருவருமாக, நடத்திப் போருவனவாகிய மின்னிடைமடவார் ப்ரணய கலகம், பந்துங்கழலும் பறிப்புப் ப்ரணயகலகம், ஆகிய இரண்டும், ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் நடக்கவேண்டியிருக்க, நாய்ச்சிமார்களுக்கும், எம்பெருமானுக்கும் உண்டாயபடி என்? என்னில்,

வைகுண்டாதாகதத்வாச்ச வைகுண்டாத்ரி ரிதி ஸ்ம்ருதঃ ।
[ वैकुण्ठादागतत्वाच्च वैकुण्ठाद्रिरितिस्मृतः । ]

என்றும்,

கத்வா து பரமம் தாம க்ரீடாசைல மிஹாநய ।
ஹிரண்மயம் மஹாச்ருங்கம் பஞ்சோபநிஷதாத்மகம் ॥

---

1. பிதிர்களைக் குறித்துச் செய்வது முதலிய விழா.
2. ஒன்றுமில்லை.
3. அவனுக்கு அதிகாரம் இல்லை யாதலால்.

[ गत्वा तु परमं धाम क्रीडाशैलमिहानय ।
हिरण्मयं महाशृङ्गं पञ्चोपनिषदात्मकम् ॥ ]

என்றும், சொல்லுகிறபடியே திருவீதியிலே எழுந்தருளித் திருக்கோபுர வாசலிலே புறப்பட்டுத் திருமலையாழ்வார் தாமே பரமபதத்தி லேகதேச மென்றும்,

அயம் கதாசித் தேவாநாம் ஸ்ரீநிவாஸ இவாபபௌ ।

[ अयं कदाचिद्देवानां श्रीनिवास इवाबभौ । ]

என்றும், சொல்லுகையாலே எம்பெருமானுடைய அர்ச்சாவதார விக்ரஹங்களில் வைத்துக்கொண்டு இந்தத் திருமலையாழ்வாரும் ஒரு திவ்யமங்கள விக்ரஹமென்றும்,

அநந்தோऽஹம் மஹாதேவ! ஸ்தாஸ்யாமி கிரிமூர்த்தநி ।

[ अनन्तोऽहं महादेव स्थास्यामि गिरिमूर्धनि । ]

என்றும்,

தத்பணாமண்டலபுவி ஸ்தாதவ்யம் ரமயா ஸஹ ।

[ तत्फणामण्डलभुवि स्थातव्यं रमया सह । ]

என்றும் சொல்லுகிறபடியே நித்யஸூரிகளில் தலைவரான திருவநந்தாழ்வான் திருமேனி என்றும், இப்படி விகல்பிதங்களான அர்த்தங்கள் ப்ரஹ்மாண்ட ப்ராஹ்ம புராணங்களிலே ஸுஸ்பஷ்டமாயிருக்கையாலும்,

“ கிரிப்ரதக்ஷிணம் ஸம்யக் குர்வந்தஸ்தே சனைச்சனைः ”

பக்த்யாऽவநதகோடீரைः ஸர்வாவஸரகாம்க்ஷிபிः ।
ஸேவ்யதேऽஹர்நிசம் தேவைர் மஹாந் கிரிவரோ ஹ்யயம் ।

[ “ गिरिप्रदक्षिणं सम्यक्कुर्वन्तस्ते शनैश्शनैः ”
भक्त्याऽवनतकोटीरैः सर्वावसरकांक्षिभिः ।
सेव्यतेऽहर्निशं देवैर्महान् गिरिवरोह्ययम् ॥ ]

என்றும்,

“ ய ஏநம் ஸேவதே நித்யம் ச்ரத்தாபக்தி ஸமந்விதः ”
“ வேங்கடாத்ரேர்விசேஷேண தர்தனம் பத்ர வர்த்ததே ।

" கிரிப்ரதக்ஷிணம் ஸம்யக் குர்வந்தஸ்தே ச்நைச்சநை: "
" புருஷார்த்தாச்ச ஸித்யந்தி "

[ " य एनं सेवते नित्यं श्रद्धाभक्तिसमन्वितः "
" वेङ्कटाद्रेर्विशेषेण दर्शनं यत्र वर्तते ।"
" गिरिप्रदक्षिणं सम्यक् कुर्वन्तस्ते शनैश्शनैः ।"
" पुरुषार्थाश्च सिद्ध्यन्ति " ]

என்றும் சொல்லுகிறபடியே நித்யமுக்தர்களோடு நித்ய ஸம்ஸாரிகளோடு வாசியற எல்லாரும் இந்தத் திருவனந்தாழ்வான் தாமே பக்தி தர்சன ப்ரதக்ஷிண ப்ரணாமாதிகளாலே ஸமாராதநீயரென்றும், ஸர்வாநிஷ்ட நிவர்த்தி பூர்வகமாகவே ஸகல பலப்ரதன் என்றும், வராஹ மார்க்கண்டேயாதி புராணங்களிலே ஸுப்ரஸித்தமாய் இருக்கையாலும்,

சுகாத்யா முநய: கேசித் ப்ருக்வாத்யாச்ச தபோதநா: ।
ப்ரஹ்லாதப்ரமுகா: புண்யா அம்பரீஷாதயோ ந்ருபா: ॥
விஷ்ணோரேவாபரம் தேஹம் மந்வாநாஸ்தம் நகோத்தமம் ।
பத்ப்யாமாக்ரமிதும் பீதா பர்யந்தேஷ்வேவ வர்திந: ॥
தந்நிர்கத நதீஷ்வேவ குர்வாணா: ஸ்நாந தர்பணே ।
தப: குர்வந்தி வாஞ்சந்த: ஸாக்ஷாத்கர்தும் ஜநார்தநம் ॥

[ शुकाद्या मुनयः केचित् भृग्वाद्याश्च तपोधनाः ।
प्रह्लादप्रमुखाः पुण्याः अम्बरीषादयो नृपाः ॥
विष्णोरेवापरं देहं मन्वानास्तं नगोत्तमम् ।
पद्भ्यामाक्रमितुं भीताः पर्यन्तेष्वेव वर्तिनः ॥
तन्निर्गतनदीष्वेव कुर्वाणाः स्नानतर्पणे ।
तपः कुर्वन्ति वाञ्छन्तः साक्षात्कर्तुं जनार्दनम् ॥ ]

என்கிறபடியே பராவர தத்வ யாதாத்ம்ய வித்துக்களான சுகாதிகளான பரமயோகிகளும், ப்ரஹ்லாத அம்பரீஷாதி மஹாபாகவதர்களும் திருமலையாழ்வாரை எம்பெருமான் திருமேனியாகவே நினைத்துத் தந்தாம் கால்கொத்த பூமியான திருமலை யடிவாரத்திலே தானே வஸித்துக்கொண்டு பகவதநுபவம் பண்ணுகையாகிற சிஷ்டாசார

மும், ஸ்காந்த வாமநாதிகளிலே ஸுவ்யக்தமாகக் காண்கையாலும், "மயர் வறமதி நலமருளப் பெற்ற" என்கிறபடியே பகவந் நிர்ஹேதுஹ க்ருபாபாத்ர பூதரான ஆழ்வார்களும் அப்படியே 'வேங்கடத்தைப் பேசு' என்று எம்பெருமானோடு திருமலையாழ்வாரோடு அபேதேந அநுஸந்தித்து, "வானவர் வானவர் கோனோடும், சுமந்து மாமலர் நீர்சுடர் தீபங்கொண்டு, நமன்றெழுந் திருவேங் கடம் விண்ணோர் தொழுவதும்" இத்யாதிகளாலே நித்ய ஸூரி ஸம்ஸேவ்யமென்றும், 'ஆனைவெருவி அறவொடுங்கும் வெற்பு,' 'இழைப்பன் திருக்கூடல் கூடத் தாமிருந்த திருமலை,' என்றும் 'செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடமடை நெஞ்சமே,' என்றும், ஒருகால் சொன்னப்போலே ஒன்பது கால் இவரே பரம ப்ராப்யரென்று தம் திருவுள்ளத்தைக் குறித்து உபதேசித்தும், 'பரன்சென்று சேர் திருவேங்கடமாமலை, ஒன்றுமேதொழ நம்வினை ஓயுமே' என்று தம்முடைய ஸர்வாநர்த்தங்களுக்கும் இவரே நிவர்த்தக ரென்றும், 'திருவேங்கடம் நங்கட்குச் சமங்கொள் வீடுதரும் தடங்குன்றமே' என்று இவரே நம்முடைய பேற்றுக்கு உபாயபூத ரென்றும், பரோபதேசம் பண்ணும்போதும், "சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை" என்றும், இவரே சம்ஸ்த சேதநர்க்கும் பரம ப்ராப்யரென்று, 'வேங்கடமே வானோர்க்கும் வெற்பு' என்று, இவரே ஸர்வர்க்கும் ஆபத்தந மென்றும், 'வேங் கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும்' என்றும், 'பதியதுவேத்தி எழுவது பயன்' என்றும், 'வலஞ்செய்து நாளும் மருவுதல் வழக்கென்றும், 'தொழக் கருதுவதே துணிவது சூது' என்றும், இத்யாதிகளால் இந்தத் திருமலையாழ்வாரை ஸ்துதி ப்ரணமாதிகளாலே ஆராதநீயர் என்றும் உபதேசித்து, இப்படி எம்பெருமானைப் போலே ஸர்வ ப்ரகாரத்தாலும் ப்ராப்யராய் அப்ராக்ருதராய், இருந்துள்ள திருமலையாழ்வாரை ப்ராக்ருதமான தேஹங்கொண்டு ஸ்பர்சியோமென்று நினைத்த நினைவாலும், திருமலை யடிவாரத்திலே தானே யிருந்து திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்கையாலும், இவர்கள் திருவுள்ளத்தை அடியொற்றி ஸ்ரீ பாஷ்யகாரர் தாமே, ஆழ்வார்களைத் திருமலையிலே அர்ச்சாரூபேண திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணுமையாலும், ஆழ்வார், பிராட்டிபோலே, [1]பால்யாத் ப்ரப்ருதி ஆகார த்ரயாதி ஷட்குணஸம்பத்தி யுண்டாகையாலே

1. இளமை தொடங்கியே சேதனனுக்குரிய மூன்று நிலைகள் முதலிய.

எம்பெருமான் திவ்யமங்கள விக்ரஹத்தை அநுபவிக்கும்போது தாமான தன்மையிழந்து ஒருபிராட்டி தசையை ப்ராப்தராய்ப் பஹு ப்ரகாரத்துடனே அநுபவிக்கையாலே, "பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்" என்கிறபடியே லக்ஷ்மீ ப்ரக்ருதிகளான திவ்ய மஹிஷிகளிலே இவரும் ஒருவரோ? என்று விகல்பிக்கலாம்படி இருக்கையாலும்,

போக்யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்கராகைஸ் ஸமம்
நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ நீதாः பரீவாஹதாம் ।
தேவி த்வாமநு நீலயா ஸஹ மஹீதேவ்யः ஸஹஸ்ரம் ததா
யாபிஸ்த்வம் ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ ஸ்வாபிः ப்ரியம் ச்லாகஸே ॥

[ भोग्यावामपि नान्तरीयकतया पुष्पाङ्गरागैस्समं
निर्वृत्तप्रणयातिवाहनविधौ नीताः परीवाहताम् ।
देवि त्वामनुनीलया सह महीदेव्यः सहस्रं तथा
याभिस्त्वं स्तनबाहुदृष्टिभिरिव स्वाभिः प्रियं श्लाघसे ॥ ]

என்கிறபடியே பெரிய பிராட்டியார் தம்முடைய திருமுலைத் தடத்தோடும், மற்றுமுள்ள திவ்யாவயங்களோடும், [1] புஷ்பாங்கராகங்களோடும், மற்றும் திவ்ய மஹிஷிகளோடும் வாசியற எம்பெருமானை உகப்பிக்குமாப்போலே, ஆழ்வாரோடு எம்பெருமான் அநுபவிக்குமிடத்துத் தாமும் அவ் அநுபவ பரிபாகத்துக்குத் தேசிகையாய் அந்த போக ரஸத்தை வர்த்திப்பித்து எம்பெருமான் திருவுள்ளத்தை உகப்பிக்கும் [2] வாத்ஸல்யாதி குணவிசிஷ்டையாகையாலும்,

யதா யதா ஹி கௌஸல்யா தாஸீவச்ச ஸகீவ ச ।
பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச்சாவதிஷ்டதே ॥

[ यदा यदा हि कौसल्या दासीवच्च सखीव च
भार्यावत् भगिनीवच्च मातृवच्चावतिष्ठते । ]

1. பூக்கள், சந்தனம் முதலிய உடற் பூச்சுகள் ஆகியவற்றோடும்.
2. கணவனைத் தன் வழிப்படுத்தும் வல்லமை முதலிய குணத்தில் மேம்பட்டவள்.

என்கிறபடியே கௌசலையார் தசரதச் சக்ரவர்த்தி யிடத்திலே ப்ரேமாதிசயத்தாலே அநேக தர்மங்களுக்கு ஆச்ரயமாய் வந்து உகப்பை வர்த்திப்பித்தாப் போலே, பிராட்டியும் அப்படியே பெருமாள் திறத்தில் ப்ரீத்யதிசயத்தாலே 'மங்களாநி அபிதத்யுஷீ' என்றும், 'ம்ருத்நந்தீ குசகண்டகாந்' என்றும், 'அஹம் சிஷ்யா ச தாஸீ ச' என்றும், 'ஸ்மாராயே தவாம் ந சிக்ஷயே' என்றும், இத்யாத்யநேக தர்மங்களை அநுஷ்டித்துக் காட்டுமவ ளாகையாலும், இவ்விடத்திலும் ஆழ்வார் பகவத் விஷயத்திலே பண்ணும் ப்ரேமம் உந்மஸ்தகமாய், 'பரிசிக்ஷேப ராகவம்' என்கிறபடியே ப்ரணய ரோஷத்தால் தொடுத்துச் சொல்லும் பாசுரங்களை யநுஸரித்து, எம்பெருமானுக்கு லீலா ரஸங்களைப் வர்த்திப்பிக்கக் கூடும் ஆகையாலும், ஆழ்வார்க்கு ப்ரதிநிதியாகிய பிராட்டியாரும் 'லக்ஷ்மீ ப்ரியஸகீம் தேவீம்' என்றும், 'மண்மகளும் திருவும்போல்வனர்' என்றும், 'சாயாமி வாப்யுதயிநீம் அவனீஞ்ச தஸ்யா:' என்றும், இத்யாதிகளில் சொல்லுகிறபடியே இவளோ டநபாயினியா யிருக்கும் பூமிப் பிராட்டியாரும் இவளுமாக எம்பெருமானோடு மின்னிடை மடவார் ப்ரணய கலஹம் நடப்பிக்கும்படிக்கு, ஆதி காலமே தொடங்கி ஸ்ரீ பாஷ்யகாரர் தாமே நியமித்தருளினா ரென்று சிரோபாலித ஸத்வ்ருத்த ஸம்ப்ரதாயராய் வேங்கடத்தைப் பதியாக வாழும் பெரியோர்கள் அருளிச்செய்து போருவர்கள்.

இந்தப்படியே திருப்பதியிலே கோவிந்தராஜனும் ஸர்வப்ரகாரத் தாலும் திருவேங்கடமுடையானோடு [1] ஸமான தர்மாவாகையாலே தாமும் நாய்ச்சிமார்களுமாகவே ப்ரணயகலஹம் நடப்பிக்கிறார்கள்.

இது முதலானவைகள் எல்லாவற்றையும் கோவிந்தராஜனுக்கு நடப்பித்துக்கொண்டு, திருமலையிலும் திருவேங்கடமுடையான் ஸந்நிதியில் திருப்பணிப்பிள்ளை கைங்கர்யமான திருமாமணி மண்டபத்தில் நடுவே ஒரு சதுஸ்தம்பி மண்டபத்தையும் பிரதிஷ்டைபண்ணி, ஒரு திருப்பள்ளியறையும் கட்டிவைத்து, அந்தத் திருமண்டபத்திலே பெரிய திருவத்யயனம் நடக்கும்படி கட்டளை பண்ணுவித்து, ஸமஸ்தோபசாரங்களையும் ப்ரதிதினம் நடத்திக்கொண்டு போர வாழ்ந்தான். (கட்டியம் யாதவராயன்)

அனந்தாழ்வான் தம்முடைய ஆசார்யரான எம்பெருமானார் திருநாமமாக ராமாநுஜ மென்றொரு நந்தவனம் பண்ணினதற்குத்

1. ஒத்த குணமுடையவர்.

தேவிகளோடும் குமாரரோடுங் கூடத் திருக்கைகளாலே ஒரு ஏரி வெட்டி, ராமாநுஜனென்று திருநாமம் சாத்தித் திருப்பூ மரங்களுக்கு ஜலம் புறப்படுகைக்கு ஒரு மதகையும் கட்டி, திருமாலை சேர்க்கும் மண்டபத்துக்கு, ராமாநுஜர் நியமனத்தாலே தம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் திருநாமமான யமுனைத் துறைவரென்று திருநாமம் சாத்தும்படிக்கு ஒரு திருமண்டபத்தைக் கட்ட வேணுமென்று நியமித்தபடி கட்டிவைத்து இப்படி அநேக கைங்கர்யங்களையும் நடப்பித்துக் கொண்டு வந்தான். *

இப்படிச் சிலகாலம் சென்ற பின்பு, கந்தாடை ராமாநுஜய்யங்கார் என்றொரு சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர், உடையவரிடம் பரம வைராக்ய நிஷ்டராய்ப் பரம பாகவதோத்தமராய், ஸ்பர்சிவேதி என்கிற வித்யை பலிக்கும்படியான வாக்யாதிகராய் இருக்குமவர், ஸ்ரீரங்காதி க்ஷேத்ரங்களிலே அநேக கோபுர மண்டப [1] ப்ராஸாதிகளைக் கட்டிவைத்து, ஔபசாரிக ஸாம்ஸ்பர்சிக ஆப்யவஹாரிக கைங்கர்யங்களையும் நடப்பித்துக் கொண்டுவரும் காலத்துக்கு முன்பு, ஒருகால விசேஷத்திலே திருமலையிலே செவ்வன் என்றொரு இடையன் பசுமந்தை கூட்டி மேய்த்துக் கொண்டிருக்கிறவனுடைய ஸ்வப்நத்திலே திருவேங்கடமுடையான், ஓரிடத்திலே [2] நிக்ஷேபமிருக்கும்படியைச் சொல்லி, அந்தத் திரவியத்தை எடுத்துத் திருமலை அடிவாரத்துக்கும் திருச்சுகனூருக்கும், நாமிருக்கும் இடத்துக்குமாகச் சேவாபரர்க்கு ஸுகமாக ஏறி வரும்படிக்கு வழியை உண்டாக்கிப் படிகளையுங் கட்டென்று நியமிக்கையாலே, அவனும் ஸ்வப்நத்தைக் கண்டு ப்ரீதனாய் அப்படியே அந்த நிக்ஷேபத்தை எடுத்து ஸரஸமாக வழியுண்டாக்கிப் படிகளையும் கட்டி வைத்தான். சில காலம் சென்றவாறே வழியிலுள்ள படிகள் சிதிலமாயிருக்க அப்போது கந்தாடை ராமாநுஜஐயங்கார் அந்தப் படிகளை வாங்கி விஸ்தாரமாய் [3] ஸுத்ருடமாகக் கட்டி வைத்தும், முன்பு நைமிசாரண்ய வாஸிகளான ரிஷிகள், மார்க்கண்டேயாதி பரமரிஷிகள், திருவேங்கட யாத்ரை பண்ணும்போது மார்க்க மத்தியிலே அழகிய சிங்கர் ப்ரத்யக்ஷமாய் அவர்களுக்கு ஸேவை ப்ரஸாதித்தா ரென்று மார்கண்டேய புராணத்திலே வேங்கடாசல மாஹாத்ம்யத்திலே

* இவன் கட்டியம் யாதவராயன்.

1. பெரிய மாளிகை. 2. புதையல் (செல்வம்).
3. மிக உறுதியாக.

இருக்கையாலே, அந்த அழகிய சிங்கர் எழுந்தருளி யிருந்த குகை யானது ஒரு படுசியிலே இருக்கையாலே, ஒருவர்க்கும் இறங்கி ஏற யோக்ய மல்லாமையாலே, அந்த ஸ்தலத்தைப் பரிஹரித்துக் குகைக் குத் தக்ஷிண பாகத்திலே மார்க்க மத்யத்திலே எல்லாரும் ஸேவிக் கும்படிக்குக் கோவில் கட்டி, அழகிய சிங்கரைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப்பண்ணி நித்யம் திருவாராதனம் நடக்கும்படிக்குக் கட்டளை பண்ணியும்,

முன்பு, எம்பெருமானார் திருவேங்கட யாத்ரை பண்ணின பொழுது திருமலை நம்பியும் அனந்தாழ்வானும் ஆகத் திருவேங்கட முடையான் ப்ரஸாதமான மாம்பழங்களைக் கொண்டு எதிரேவந்து எம்பெருமானார்க்கு ஸமர்ப்பிக்க, அவரும் அந்தப் பலங்களை வாங்கி

"ப்ராப்தமாத்ரேண புஞ்ஜீயாத் ப்ரஸாதம் பாவநம் ஹரேঃ"

என்கிறபடியே அமுதுசெய்தருள, அந்தப் பலங்களின் கொட் டைகள் அங்கே விழுந்து முளைத்து வர்த்தித்துப் பல பர்யந்த மாகை யாலே, தத் ஸந்தான பரம்பரா ப்ராப்தமான மரங்க ளிருக்கிற ஸ்தலத் திலே ஒருகோயிலைக் கட்டி, எம்பெருமானாரை அர்ச்சாரூபேண திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணியும், திருவேங்கட யாத்ரை பண்ணுகிற பரமபாகவதர்களுக்குமாகச்[1] சீதாதப வருஷ நிவர்த்தக மாக மண்டபங்களையும் [2] காஸாரங்களையும் பண்ணுவித்து, தேவ தாந்த்ரபரர் மூலமாக ஸ்தலத்துக்கு ஒரு உபத்ரவம் வாராதபடிக் குத் திருமலை யடிவாரத்திலே, முன்பு, திருமலை நம்பி எம்பெருமா னார்க்கு ஸ்ரீ ராமாயணம் ப்ரஸாதித்து வந்ததாய் உள்ள திருவேங் கடமுடையான் திருவடிகளின் ஸமீபத்திலே, ஸர்வாரிஷ்ட நிவர்த் தகோத்யுக்தரான லக்ஷ்மீ நரஸிம்ஹனைப் பிரதிஷ்டை பண்ணுவித் தும், ஸ்வயம்வ்யக்தமான ஒருதிருக் கோபுரத்தையும் ஒன்பது நிலைக்கு ஸங்கல்பித்துத் தத்காலத்திலே, நரபதி அஸ்தமயத்தைக் கண்டு சிலா த்வாரத்தோடு ஏழு த்வாரமும் சில்ப சாஸ்த்ர ஸித்த மாகையாலே, இந்தப்படிக்குச் சிகரத்தை எடுப்பித்துத் திருக்கோபு ரத்தையும் பூர்ணமாக்கியும்,

பூர்வம் தொண்டைமான் சக்ரவர்த்திக்கு ஸேவை சாதித்தரு ளின பரிஷத் திருவேங்கடமுடையானுக்கு அவர் தர்சன ஸ்தலத் திலே ஒரு மண்டபம் கட்டுவித்தும், ஸ்வாமி திருவடிகளை அநந்த,

1. குளிர், வெயில், மழைகளை நீக்குவதற்காக. 2. குளங்களையும்.

கருட, விஷ்வக்ஸேநாதி பரிஷத்தோடேயும் ப்ரதிஷ்டை பண்ணு வித்து அவர் [1]அதூர விப்ர க்ருஷ்ட மாகையாலே அபக்குவ வஸ்துக் களையே அமுது செய்தருளும்படி கட்டளை பண்ணியும், திருவேங் கடமுடையான் ஸந்நிதியிலே ஆழ்வார்கள், எம்பெருமானர், ஆழ் வார் திருமகளார், ஆகிய இவர்களுக்கும் திருநக்ஷத்ர மஹோத்ஸ வங்களை எம்பெருமானர் ஸந்நிதியிலே நடக்கும்படிக்கும், செண் பகத் திருச்சுற்றுத் திருவீதிகளிலே தென்னண்டையாக ஆக்நேய கோணம் அடியாகப் [2]பொலிவீடும் பொடிவித்தும், இன்னமும் அநேக தர்மங்கள் நடப்பித்தும், திருப்பதியிலும் கோவிந்தராஜன் திருக்கோயிலுக்குப் புறம்பாக எம்பெருமானர்க்குக் கோபுர ப்ரகா ரங்களோடே ஒரு மண்டபத்தையும் கட்டுவித்து, மூல விக்ரஹமான எம்பெருமானரையும் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணுவித்து, உள்ளே எழுந்தருளியிருந்த எம்பெருமானர் உத்ஸவ விக்ரஹத்தை யும், மூலவிக்ரஹ ஸ்தானத்திலே எழுந்தருளப் பண்ணுவித்தும்,

கோவிந்தராஜன் ஸந்நிதிக் கலங்காரமாய் வர்ஷ வாதாதப நிவா ரகமாய் ஸ்வாமிக்கு ஆஸ்தான யோக்யமாய்த் தக்ஷிணோத்தர திங்முக மாய் த்வாரபாலக மண்டபத்துக்குக் கீழாய்ப் பெரியதாக ஒரு கருட மண்டபத்தையும் கட்டுவித்தும்,

விஷ்ணோர் தாமாந்தரே விஷ்ணோ: மூர்த்யந்தர உபஸ்திதே ।
தஸ்ய பூஜாம் ப்ரகுர்வீத ஸந்த்யயோ: நாந்யதாசரேத் ॥

[ विष्णोर्धामन्तरे विष्णोः मूर्त्यन्तर उपस्थिते ।
तस्य पूजां प्रकुर्वीत सन्ध्ययो नान्यदाचरेत् ॥ ]

என்கிற வைகாநஸ வசனத்தின்படியே முன்பிருந்த திருவனந்தப் பெருமாளுக்குண்டான பலிபீட (கருட) த்வஜஸ்தம்பங்களையும் வாங் கிப் புக்குவித்து, ஸாயம் ப்ராத: காலங்களிலே திருவாராதனம் மாத் திரம் நடக்கும்படி கட்டளைபண்ணி, பல்யார்ச்சநோத்ஸவாதிகளும் வேண்டா என்றும், திருவையாசித் திருநாள், திருவானித் திருநாள் களிலே ஸாயம் ப்ராத: காலங்களிலே கோவிந்தராஜனோடு எம்பெரு மானர் திருவீதியிலே எழுந்தருளும்படிக்கும், எம்பெருமானர்க்கு

1. அதிக தூரத்தில் இல்லாமையாலே.
2. கோயிலுக்கு விடப்பட்ட ஊர் முதலியவற்றைக் கல்லில் எழுது வித்தும்.

ஆச்ரமாநுரூபமாகத் திருவீதியிலே காவிக்குடை பிடிக்கும்படிக்கும், மற்றும் உத்ஸவ காலங்களிலே கோவிந்தராஜனோடு எம்பெருமானாரும், ஆழ்வார் திருமகளாரும் எழுந்தருளும்படிக்கும், பூர்வம் எம்பெருமானார் நியமனத்தின்படிக்குத் திருவையாசித் திருநாளிலே ஆழ்வார் திருநக்ஷத்திரம் வருகையாலே அவரும் எம்பெருமானாரோடே திருவீதியில் எழுந்தருளும்படிக்கும், அவர்கள் முன்னாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் இயலை அநுஸந்திக்கும்படிக்கும், இயல் நடுவாக, ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவர்களும் திருக்கோர்வை கோத்துக்கொண்டு இயல் அநுஸந்திக்கும்படிக்கும், ஆழ்வாரோடு அரையர், தாளமுங் கையுமாய் ஸேவித்துக்கொண்டு வரும்படிக்கும்,

திருமலைநம்பி, அனந்தாழ்வான் திருவம்ச்யராய் உள்ள ப்ரஹ்ம வித்துக்கள், ஆசார்யபதம் நிர்வஹிக்கும்படி பூர்ணாதிகாரிகளான இருவரும் இயலுக்கு இரண்டு பார்சுவத்திலும் திருக்கோர்வை இன்றிக்கே ஸேவித்துக்கொண்டு வரும்ப்படிக்கும், திருக்குரவை முன்னாக உத்தமாச்ரமிகளும் த்ரிதண்ட ஹஸ்தர்களாய் அநுஸந்திக்கும்படிக்கும், இன்னமும் உச்சிந்நங்களான அநேக ஸ்ரீ வைஷ்ணவ தர்மங்களையும், உத்தரிப்பித்து நடப்பித்தும், [2] தீரோதார மனோஹராங்க ஸுந்தர ராஜனான கோவிந்தராஜனுக்கு நாய்ச்சிமார்களுடைய சேர்த்தியிலே உந்நத ஸ்தானம் வேணுமென்று தம்முடைய பேராலே ராமாநுஜ சரணாலயம் என்று எப்போதும் எழுந்தருளியிருக்கும்படிக்கு ஒரு திவ்ய ஸிம்ஹாஸனம் பண்ணுவித்து அதிலே நித்யமாக எழுந்தருளப் பண்ணுவித்தும்,

தாங்யாகாரம் து பூர்வஸ்மிந் திசி தேவஸ்ய காரயேத் ।
[ धान्यागारं तु पूर्वस्मिन् दिशि देवस्य कारयेत् । ]

என்கிறபடியே ஒரு திருக்கொட்டாரமும் கட்டுவித்தும், பார்சவத்வயத்திலும் இரண்டு கருகூலமும் கட்டுவித்தும், இவைகளை வளைத்து ஒரு திருமதிளும் திருக்கோபுரமும் கட்டுவித்தும், திருக்கோபுரத்திலே ஸ்வயம் வ்யக்தமான திருவாழி யாழ்வானுக்கு ஸேவாராதநங்களுக்கு யோக்யமாம்படி கீழ்மண்டபமும் மேல்மண்டபமும் கட்டி

1. ஆசிரமத்துக்குப் பொருத்தமாக.

2. தீரம், வண்மை, மனதைக் கவரும் அவயவங்கள் ஆகியவற்றையுடைய அழகிற் சிறந்தவரான.

வைத்து, அவருக்குத் திருவாராதனம் நடக்கும்படிக்கும், கோவிந்த ராஜனுக்கு வையாசி மஹோத்ஸவ அநந்தரத்திலே சைத்யோபசாரமாக [1]டோலோத்ஸவம் கொண்டருளும்படிக்குத் திருக்கோபுர வாசலிலே ஒரு உறியடி மண்டபமும் கட்டுவித்தும், நரபதியான அச்யுதராயன் கைங்கர்யமாக ஒரு உறியடி மண்டபம் கட்டுவித்தும்,

பூர்வகாலத்திலே பாண்டிய தேசாதிபதியான ரங்கபூபால ராயன், கங்காஸ்நானம் பண்ணக் கடவனாய், உத்தர திக்கிலே திக்விஜயம் பண்ணக்கடவனாய்ப் புறப்பட்டு, அநேக ஸாமந்த ஜனங்களையும் ஜயித்துத் திருமலையிலே வந்து திருவேங்கடமுடையானை ஸேவித்து ஸந்துஷ்டனாய்ப் புண்யக்ஷேத்ரமான திருமலையிலே ஜயஸ்தம்பமும் நாட்டி இந்த ஸ்தலத்திலே விஷ்ணுப்ரதிஷ்டை பண்ணவேணுமென்று ஸ்தலவாஸிகளான பெரியோர்களைக் கேட்க, அவர்களும்,

வைகுண்டாதாகதத்வாச்ச வைகுண்டாத்ரிரிதி ஸ்ம்ருத꞉ ।
[ वैकुण्ठादागतत्वाच्च वैकुण्ठाद्रिरिति स्मृतः ।]

என்று இந்தத் திருமலை க்ஷேத்ர மாஹாத்ம்யத்திலே, ஸ்ரீ வைகுண்டம் என்றிருக்கையாலே இந்த க்ஷேத்திரத்திலே மானுஷ்யமான விஷ்ணுப்ரதிஷ்டை அநுசிதம்,

சேஷாசலஸ்ய பரித꞉ க்ரோசமாத்ரம் து பூதலம் ।
சேஷாசலைகதேசேந ப்ரதிதம் முநிஸேவிதம் ॥
[ शेषाचलस्य परितः क्रोशमात्रं तु भूतलम् ।
शेषाचलैकदेशेन प्रथितं मुनिसेवितम् ॥ ]

என்று ஸ்காந்தபுராணத்திலே க்ஷேத்ர மாஹாத்ம்யத்திலே ஸுவர்ணமுகரீ மாஹாத்ம்யத்திலே, திருமலையைச் சுற்றிலும் வளைத்து ஒரு குரோசமாத்ர பூமி, திருமலைதானே என்றிருக்கையாலே, திருமலையடிவாரத்திலே விஷ்ணு ப்ரதிஷ்டையைப் பண்ணென்று சொல்ல, பாண்டியனும் கேட்டு ஸந்துஷ்டனாய்த் திருமலை யடிவாரத்திலே வந்து ஒரு குரோச மாத்ரத்துக்குள்ளாக ஒரு ஸ்தலத்திலே கோயிலைக் கட்டித் தனக்கபிமதமாய்க் கோதண்டதாரியான சக்ரவர்த்தி திருமகனை இளைய பெருமாள், (பெரிய) பிராட்டியாரோடுங்கூட

1. ஊஞ்சல் விழா.

முமுக்ஷுஃ ப்ராங்முகம் தேவம் ப்ரதிஷ்டாப்யார்ச்சயேத்தரிம் ।
தக்ஷிணாசாமுகம் தேவம் ஸந்தானார்த்தீ ஸமர்ச்சயேத் ॥
பச்சிமாசாமுகம் தேவம் ஜயார்த்தீ சார்ச்சயேத்தரிம் ।
உத்தராசாமுகம் தேவம் ஞானார்த்தீ ஸம்யகர்ச்சயேத் ॥
க்ராமதேவாபிமுக்யேந க்ருஹதேவம் ஸமர்ச்சயேத் ।

[ मुमुक्षुः प्राङ्मुखं देवं प्रतिष्ठाप्यार्चयेद्धरिम् ।
दक्षिणाशामुखं देवं सन्तानार्थी समर्चयेत् ॥
पश्चिमाशामुखं देवं जयार्थी चार्चयेद्धरिम् ।
उत्तराशामुखं देवं ज्ञानार्थी सम्यगर्चयेत् ॥
ग्रामदेवाभिमुख्येन गृहदेवं समर्चयेत् । ]

என்கிற சாஸ்த்ரத்தின்படியே மேற்கே திருமுகமண்டலமாயும் திருவேங்கடமுடையானுக்கு அபிமுகமாகவும் திருப்ரதிஷ்டை கொண்டருளப்பண்ணினன். அந்த ஸ்வாமி சிரகால ஸ்தாயியாகையாலே பூமி வளர்ந்து கோயில் [1] நிம்நமானபடியைக் கண்டு, அவர் ஸவர்ணமாகையாலே விசேஷேண அபிமானமுண்டாய் அவரை உச்சஸ்தானத்திலே எழுந்தருளப்பண்ண வேணுமென்று சிந்தித்துச் சலனம் பண்ணிப் பூர்வ ஸ்தானத்திலே தானே கோபுர, ப்ராகார, மண்டபங்களோடே கோயிலைக் கட்டித் திருப்ரதிஷ்டை பண்ணிவைத்தும், ஸ்ரீ குலசேகரப் பெருமாள் திருமலையாழ்வாரைத் தானே பரம ப்ராப்யமாக எண்ணி, "ஊனேறு செல்வம்" என்கிற திருமொழியை அநுஸந்திக்கையாலேயும், தம்முடைய வர்ணமாகையாலேயும், கோபுர, ப்ரகார, மண்டபங்களோடே கோயிலைக் கட்டிச் சக்ரவர்த்தி திருமகன் ஸமீபமாகத் திருமலையாழ்வாரையும் திருவேங்கடமுடையானையும் மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டிருக்கும்படி மேற்கே திருமுகமண்டலமாய்த் திருப்ரதிஷ்டைபண்ணியும், கோவிந்தராஜனுடைய திவ்யைச்வர்யத்துக்கும், திவ்யமஹோத்ஸவத்துக்கும் அநுகுணமாகப் பலிகரணவீதியான திருவீதியை வளைத்து எம்பெருமானார் கோயிலிலே தத்காலத்தில் இருக்கிற திருவநந்தாழ்வானுடைய கோபம் சமிக்கும்படி ஒரு திவ்யநகரத்தைக் கருட வ்யூகமாகக் கட்டிவைத்தும், மரியாதை ஸ்தலத்துக்குட்படப் பெரிய திருவீதியை நிருமித்தும்,

1. பள்ளமான.

நகரஸ்ய து வாயவ்யே திக்ப்ரதேசே ஸமஸ்தலே ।
பண்யவீதிம் ப்ரகுர்வீத ப்ரஜாநா மபிவ்ருத்தயே ॥

[ नगरस्य तु वायव्ये दिक्प्रदेशे समस्थले ।
पण्यवीथीं प्रकुर्वीत प्रजानामभिवृद्धये ॥ ]

என்கிறபடியே திவ்ய நகரத்துக்கு வாயுதிக்கிலே ஸர்வ ஜநாபிவ்ருத்திக் குடலாகக் கடைத்தெருவைக் கட்டிவைத்தும், இவர்காலத்துக்கு முன்னாக நரபதியானவன் அஸ்தமித்தபோது தேசம் அராஜகமாய்த் திருமலை திருப்பதி ஸ்தலாபிமானிகளான ஜீயர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள், ஆசார்யபுருஷர்கள், வைகாநஸர்கள் எல்லோரும் ஸ்தலத்தைவிட்டு மறைந்திருக்க, அப்போது, காளஹஸ்திச் சைவர்கள், திருப்பதியிலே வந்து தேசாதிபதியோடே இந்தத் தீர்த்தம் கபிலேச்வர தீர்த்தம் என்று புராணத்திலே இருக்கையாலேயும், கபிலேச்வரன் தீர்த்தராஜன் என்று ப்ரஸித்தம் ஆகையாலேயும், இது சைவதீர்த்தம் என்று ப்ரஸங்கம் பண்ணினபோது, ஏகாங்கி நாராயணய்யங்கார் என்னுமவர், ஸ்தலாபிமானத்தாலே வெளிப்பட்டு ராஜஸ்தானமேறி க்ஷேத்ர மாஹாத்ம்ய வசனங்களை எடுத்து விஸ்தாரமாக ராஜ ஸந்நிதானத்திலே உபந்யஸித்து, இந்தத் தீர்த்தம் வைஷ்ணவ தீர்த்தம் என்று நிர்வஹிக்க, சைவ ஜனங்களைச் சிக்ஷித்துத் துரத்திவிட்டு நாலு திக்கிலும் சக்ரக்கல்லை நாட்டி, கபிலேச்வரர் ஸந்நிதானத்திலும், சக்ரக்கல்லை நாட்டிப் பவிஷ்யத்காலத்திலும் இப்படிப்பட்ட உபத்ரவம் வாராதபடி விஷ்ணுவையும் விஷ்ணுபக்தர்களையும் ப்ரதிஷ்டை பண்ணவேணுமென்று நிச்சயித்து, தொண்டைமான் சக்ரவர்த்தி திருவேங்கட யாத்ரைபண்ணின மார்க்கத்திலே குகா மத்யத்திலே [1]ப்ரதிபட நிரஸன சக்தரான அழகிய சிங்கரையும், அவர் ஸமீபத்திலே லக்ஷ்மீ நாராயணனையும், ஸ்தலத்துக்கு ஆழ்வார் மூலவிக்ரஹ மில்லாமையாலே தீர்த்ததீரத்திலே அபேத்யமாம்படி கோபுர, ப்ராகார, மண்டபங்களோடே கோயிலைக்கட்டி திருமலையாழ்வாரையும், திருவேங்கடமுடையானையும் மங்களாசாஸனம் பண்ணும்படி மேற்கே திருமுகமண்டலமாகத் திருப்ரதிஷ்டை கொண்டருளப்பண்ணி, கோவிந்தராஜன் ஸந்நிதியிலே எழுந்தருளியிருக்கிற உத்ஸவ விக்ரஹமான ஆழ்வாரைத் தீர்த்ததீரத்திலே மூலவிக்ரஹத்தோடே எழுந்தருளப்பண்ணி, ஆழ்வார் தீர்த்தம் என்று

1. பகைவரைப் போக்கும் வல்லமை யுடையவரான.

தீர்த்தத்துக்குத் திருநாமம் சாத்திக் கோவிந்தராஜனுடைய அத்யயனோத்ஸவாதிகளுக்கும் எழுந்தருளும்படி கட்டளைபண்ணி, இந்த ஆழ்வார் தீர்த்தத்திலே கோவிந்தராஜன் உத்ஸவகாலங்களிலே அவப்ரதம் கொண்டருளும்படிக்கும், கார்த்திகை மாஸத்திலே வனபோஜனோத்ஸவமும், தண்ணீர் அமுதுவழி திருத்தும் உத்ஸவமும் கொண்டருளும்படிக்கும், சித்ராபூர்ணமி நாளிலே ஸ்வர்ணமுகரீ நதியிலே தாம் வெட்டிவைத்த பின்னைக் கால்வாயிலே திருவூறல் உத்ஸவம் கொண்டருளவும் கட்டளைபண்ணினார். இப்படிச் சில காலம் கோவிந்தராஜன் ஸமஸ்தோத்ஸவம் கொண்டருளும் காலத்திலே மிலேச்ச கலகம் ப்ரஸக்தமாய், கோவிந்தராஜன், திருமலையிலே தாமும், நித்யர்களும், ஆழ்வார், எம்பெருமானார் முதலான பக்த பரிகரங்களுமாக எழுந்தருளி ஒரு ஸம்வத்ஸரம் திருவாராதனம் கொண்டருளி, கலகம் சமித்தபின்பு கோவிந்தராஜன் நித்யஸூரிகள் முதலானோரோடு திருப்பதியிலே எழுந்தருளினபோது, ஸ்தலாபிமானியாய் எம்பெருமானார் நியமனத்தாலே திருவேங்கட ஸ்தலத்துக்குக் கர்த்தாவான ஸேனைபதி ஜீயர் என்கிற ஏகாங்கி, அக் காலத்து, மலைகுனிய நின்றாரரையர், பூர்வம் செங்கனிவாயான் ஸந்தான ஜாதரான ஸ்ரீநிவாஸய்யங்கார் என்கிற அர்ச்சகர் முதலான பெரியோர்கள் ஸ்வப்நத்திலே, அவரவர்களுக்குத் தத்தத் காலங்களிலே ஸேவை ப்ரஸாதித்தருளின படியாலே, பூர்வம் நாம் திருமலையிலே யிருந்த திருவேங்கடமுடையான் குணாநுபவத்தையும் மாநஸிகமாகத் திவ்ய மங்கள விக்ரஹாநுபவத்தையும் பண்ணினமாத்ர மன்றிக்கே, இப்போது யாத்ருச்சிகமாக இங்கே வந்தோமே; இவ்விடத்திலே நித்யமாக விக்ரஹானுபவம் பண்ணிக்கொண்டு இருக்கிறோம்; நமக்கு நீங்கள் மனக்கஷ்டம் பண்ணுவதே; என்று திருவேங்கடத்தான் ஸ்ரீபாதத்து ஆணை பெற்று * அருளிச்செய்ய, அத்தை எல்லோரும் கேட்டு, பயப்பட்டு அவரைத் திருமலையிலே அவர்கள் அபிமதமான எம்பெருமானார் ஸந்நிதியிலே எழுந்தருளப் பண்ணி, அவர் அவதார தசையிலே அப்ராக்ருதமான திருமலையை ப்ராக்ருத சரீரம்கொண்டு மிதியோமென்று, அநுஸந்திக்கைக்கு அனுகுணமாக ப்ரகாசமின்றிக்கே ஏகாந்தமாக இருக்கக்கடவர் என்று அங்கே எழுந்தருளப் பண்ணி எம்பெருமானாரை மாத்திரம் எழுந்தருளப் பண்ணிக் கொண்டுவந்த காலத்திலே, கந்தாடை இராமாநுஜ ஐயங்கார்

* அருளிச் செய்தவர் நம்மாழ்வார்,

ஸ்தலத்திலே அனேக கைங்கர்யங்கள் பண்ணுவகிறவ ராகையாலே ஸ்தலத்துக்கு ஆழ்வார் உத்ஸவ விக்ரஹத்தை ஏறி யருளப்பண்ணி, திருப்பிரதிஷ்டையும் கொண்டருளப்பண்ணி, தீர்த்ததீரத்திலே மூல விக்ரஹத்தோடே கூட எழுந்தருளப்பண்ணி, பூர்வம்போலே திருவா ராதனம் கொண்டருளும்படிக்கும், கோவிந்தராஜன் உத்ஸவங்களைப் பரிபாலனம் பண்ணுகைக்கும் ஸங்கல்பித்தருளினர். இப்படி, திரு மலை திருப்பதியிலே திருவேங்கடமுடையான் கோவிந்தராஜன் ஆகி யவர்களுக்கு உசிதங்களான கைங்கர்யங்களை யுக்த காலத்தில் நடக் கும்படிக்குத் தர்முடைய பூர்வ வர்ணத்தவரான பரம பக்திமானுய் பரம விரக்தரான ஒருவரை ஸ்தலத்திலே பிரதிஷ்டை பண்ணி அவருக்கு அயோத்யை இராமாநுஜ ஐயங்கார் என்று திருநாமம் சாத்தி, இரண்டு ஸ்தலத்திலும் ஸ்வதந்த்ர [1] ஸ்வாம்யங்களும் நடக் கும்படியும் கட்டளைபண்ணினர். இவர் காலத்துக்கு முன்னால் துளுவ ஸாளுவராயன் காலத்திலே, கோவிந்தராஜன் திருச்செல் வத்துக்கு ஒரு உபத்திரவம் வருகையாலே அப்போது ஸ்ரீ பண்டாரத் துக்குக் கர்த்தாவான ஆழ்வார் கோவிந்த ஜீயர் என்பார் ஒரு ஏகாங்கி, ஸ்ரீவைஷ்ணவர் எல்லோரும் அறியும்படி தமக் கஸாதாரண மாக ஒரு கண்டையை ஆக்கிக்கொண்டு ஸ்வாமி கைங்கர்ய நிமித்த மாக ப்ராணஹானி பண்ணிக்கொள்கிறேன் என்று திருக்கோபு ரம் ஏறி விழுந்தார். அப்போது கோவிந்தராஜன் கடாக்ஷத்தாலே ப்ராணஹானி வாராமல் திருக்கைகளிலே ஸ்வல்ப நோவுண்டாய் அந்த நோவும் சீக்ர காலத்திலே சமித்து, அந்த உபத்ரவமும் சமித் துப் போக அவர் பின்னையும் சிலகாலம் கண்டாநாத ஹநுமத்வஜ புரஸ்ஸரமாக ஸ்வாமி கைங்கர்யங்களைப் பண்ணிக்கொண்டிருந்தார்.

முன்னுளில், ஸ்ரீ ராமாநுஜ தரிசந ப்ரவர்த்தகரான மணவாள மாமுனியானவர், திருப்பதிக் கெழுந்தருளித் தேசாதிபதியை ஆசீர் வதித்து, ஸ்தலத்திலே மதாந்தரஞ்தராலே உபத்திரவம் வாராத படிக்கு ஒரு உத்தமாச்ரமியை ஸ்தலாதிபதியாக்க வேணுமென்று சிந்தித்துத் தம்முடைய சிஷ்யராய், ராஜ வல்லபராய், பகவத்கைங் கர்ய துரந்தரராய், கோயிலிலே ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஸ்ரீ பண்டா ரத்துக்கு நிர்வாஹகராய் இருக்கிறுப்போலே, திருமலைக்கும் உத்தார கராய் நிக்ரஹாநுக்ரக ஸமர்த்தரான ஒரு ஜீயரைக் கோயில் கேள்வித் திருவேங்கட ஜீயரென்று திருநாமம் சாத்தி, தேசாதிபதி அனுமதி

1. தலைமைத் தன்மையும்.

கொண்டு, அர்ச்சகர் முதலான ஸமஸ்த பரிகரங்களையும், ஸ்தல நிர்வாஹகரான ஆழ்வார் கோவிந்த ஜீயர் என்கிற ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவரையும், திருவேங்கட ஜீயர் அதீனமாக்கி, இவர்களெல்லார்க்கும் இவர் சிக்ஷகராயும், ரக்ஷகராயும், திருவேங்கடச் செல்வத்துக்கு வர்த்தகராயும், தேசாதிபதிக்குப் பகவத் தர்மோபதேஷ்டாவாயும் கல்பித்து, எம்பெருமானார் திருமேனி முத்ரையாக ஒரு முத்ரை மோதிரத்தைப் பண்ணி ஜீயரைத் தரிக்கச்சொல்லிக் கொடுத்து, விஷ்வக்ஸேந முத்ராஸூசகமாக எம்பெருமானார் நியமன ஸித்தமாய், ஏகாங்கி பரம்பரா ப்ராப்தமான கண்டா, கடாரி, ஹநுமத் த்வஜங்களையும் அவர் வசம்பண்ணி, கைங்கர்ய யாத்ரா காலங்களிலே கண்டாநாத, ஹநுமத்த்வஜ புரஸ்ஸரமாக ஸஞ்சாரம் பண்ணுமென்றுத் நியமித்து,

விஷ்ணோ꞉ பூஜாதிகர்மாணி தர்மாம்ச்ச புருஷாயுஷா ।
நியமஸ்த꞉ ஸதா பிக்ஷு꞉ காரயேதோபதேசத꞉ ॥

யதிஸ்து வைஷ்ணவம் க்ஷேத்ரமதிஷ்டாய சுசிஸ்ஸதா ।
வ்யாகுர்வந் நிகமாந்தார்த்தாந் ஆச்ரிதாநாம் ஹிதம் வதந் ॥

காலம் க்ஷிபேத் ப்ரயத்நேந கர்மணா ப்ரஹ்மசிந்தநாத் ।

[ विष्णोः पूजादिकर्माणि धर्मांश्च पुरुषायुषा ।
नियमस्थः सदा भिक्षुः कारयेतोपदेशतः ॥

यतिस्तु वैष्णवं क्षेत्रमधिष्ठाय शुचिस्सदा ।
व्याकुर्वन् निगमान्तार्थान् आश्रितानां हितं वदन् ॥

कालं क्षिपेत् प्रयत्नेन कर्मणा ब्रह्मचिन्तनात् । ]

என்கிற ஸந்யாஸ தர்மங்கள் இருந்தபடியே திருவேங்கட ஜீயரும் ஸாங்கோபாங்கமாக வேதாந்த ப்ரவசனம் பண்ணிக்கொண்டு, அநேக சேதனரை ஸ்ரீ ராமாநுஜ தர்சநஸ்தராம்படி பண்ணிக் கொண்டு, திருவேங்கடச் செல்வத்தை அபிவ்ருத்தி பண்ணிக் கொண்டு, திருவேங்கடமுடையான், கோவிந்தராஜன் ஆகியவர்களின் திருமேனிக்கும், திருப்பவளத்துக்கும் உசிதமான ஔபசாரிக ஸாம்ஸ்பர்சிக ஆப்யவஹாரிக ரூபமான உபசாரங்களையும் பண்ணுவித்துக்கொண்டு, பூர்வம் எம்பெருமானார் நியமனத்தினாலே யுண்

டான திருவேங்கட ஜீயருக்கு அநேக தர்மங்களையும் உத்தரிப்பித்து, நடப்பித்துக்கொண்டு,

> யஸ்து ஜீர்ணநி தர்மாணி விஷ்ணோர் நவ்யாநி வாऽऽதராத் ।
> உத்தரத்யக்ரபூஜாம் ஸம்ப்ராப்நுயாத் தேவஸந்நிதௌ ॥
>
> [ यस्तु जीर्णानि धर्माणि विष्णो र्नव्यानि वाऽऽदरात् ।
> उद्धरत्यग्रपूजां संप्राप्नुयाद्देवसन्निधौ ॥ ]

என்கிற வைஷ்ணவ சாஸ்திரத்தின்படியே எம்பெருமானார் நியமித்த ப்ரகாரமாக, ஸேனைதிபதி ஜீயர், திருமலைநம்பி, அரையர், அனந்தாழ்வான், திருப்பணிப்பிள்ளை வரிசையாக இவர்களுக்குத் தீர்த்தம் அருளப்பாடு நடந்தபடிக்கு, முன்னே உத்தமாச்ரமியாய், விஷ்வக்ஸேன முத்ரராய் இருக்கிற திருவேங்கட ஜீயருக்குத் தீர்த்தம் அருளப்பாடும் கட்டளைபண்ணிப் பின்பு, ஸ்தலவாஸிகள், தேசாந்திரிகளான ஜீயர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள், பின்பு, ஸகல ஸ்தலங்களிலும் அநேக கைங்கர்யம் பண்ணினவரான கந்தாடை ராமாநுஜ ஐயங்காருக்குத் தீர்த்த மருளப்பாடுங் கட்டளைப்பண்ணி, திருவேங்கடமுடையான், எம்பெருமானார் நியமன க்ரமத்திலே அத்யயனோத்ஸவம் கேட்டருளும் ப்ரகாரம், ஸ்தலாந்தர விலக்ஷணமாய் இருக்கையாலே, இந்த க்ரமத்துக்கு ஒருபட்டோலையும் எழுதிக் கொடுத்து, ஸ்ரீ ராமாநுஜ புரத்திலே ஜீயருக்கு ஒரு மடமும் ஸங்கல்பித்துக் கொடுத்து, திருவேங்கட ஜீயர் ஜ்ஞான ஸந்தான பரம்பராந்தர்ப் பூதரான ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவர்களிலே தானே, திருமலை ஸ்தானத்துக்குத் தத்காலங்களிலே உத்தமாச்ரமியாய், மடாதிபதியாய்த் திருவேங்கட நாட்டுக்கும், திருவேங்கடச் செல்வத்துக்குக் கர்த்தாவாகவும் நியமித்துக் கோயிலுக் கெழுந்தருளினர்.

இந்த ஐதிஹ்யமாலா ப்ரபந்தம், மலைகுனிய நின்றாரரையர் திருமாளிகையியில் (இருந்த) ஸ்ரீ கோசத்தைப் பார்த்து எழுதினது.



வானாதியோகிவர வேங்கடயோகிவர்ய-
ஸ்ரீ பட்டநாதமுனி வாதிபயங்கரார்யா: ।
ராமானுஜார்ய வரதார்ய நதார்திஹாரி,
ஸ்ரீ தேவராஜகுரவோऽஷ்டதிசாகஜாஸ்தே ॥

वानादियोगिवर - वेङ्कटयोगिवर्य-
श्रीभट्टनाथमुनि - वादिभयङ्करार्याः ।
रामानुजार्य - वरदार्य - नतार्विहारि-
श्रीदेवराजगुरवोऽष्टदिशागजास्ते ॥

மார்க்கண்டேய புராணே ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்ம்யே—

வைகுண்டலோகாத் கருடேந விஷ்ணோ:
க்ரீடாசலோ வேங்கடநாமதேய: ।
ஆநீய ஸ ஸ்வர்ணமுகீ ஸமீபே
ஸம்ஸ்தாபிதோ விஷ்ணுநிவாஸஹேதோ: ॥

[ मार्कण्डेयपुराणे श्रीवेङ्कटाचलमाहात्म्ये—
वैकुण्ठलोकाद्गरुडेन विष्णोः क्रीडाचलो वेङ्कटनामधेयः ।
आनीय स स्वर्णमुखीसमीपे संस्थापितो विष्णुनिवासहेतोः ॥ ]

என்றும்,

வைகுண்டாதாகதத்வாச்ச வைகுண்டாத்ரிரிதி ஸ்ம்ருத: ।

[ वैकुण्ठादागतत्वाच्च वैकुण्ठाद्रिरिति स्मृतः । ]

என்றும்,

சுகாத்யா முநய: கேசித் ப்ருக்வாத்யாச்ச தபோதநா: ।
ப்ரஹ்லாதப்ரமுகா: புண்யா: அம்பரீஷாதயோ ந்ருபா: ॥

விஷ்ணோரேவாபரம் தேஹம் மந்வாநாஸ்தம் நகோத்தமம் ।
பத்ப்யா மாக்ரமிதும் பீதா பர்யந்தேஷ்வேவ வர்திந: ॥

தந்நிர்கத நதீஷ்வேவ குர்வாணா: ஸ்நாந தர்பணே ।
தப: குர்வந்தி வாஞ்சந்த: ஸாக்ஷாத்கர்தும் ஜநார்தநம் ॥

[ शुकाद्या मुनयः केचित् भृग्वाद्याश्च तपोधनाः ।
प्रह्लादप्रमुखाः पुण्याः अम्बरीषादयो नृपाः ॥

विष्णोरेवापरं देहं मन्वानस्तं नगोत्तमम् ।
पद्भ्यामाक्रमितुं भीताः पर्यन्तेष्वेव वर्तिनः ॥
तन्निर्गतनदीष्वेव कुर्वाणाः स्नानतर्पणे ।
तपः कुर्वन्ति वाच्छन्तः साक्षात्कर्तुं जनार्दनम् ॥ ]

ப்ரஹ்ம ப்ரஹ்மாண்ட வாமனாதிகளிலே திருமலையாழ்வாரை ப்ராக்க்ருத சரீரங்கொண்டு மிதியோ மென்று சுகாதிகள் பர்வத [1] பரிஸரத்திலே யிருந்து, பகவதநுபவம் பண்ணினத்தை பகவந் நிர்ஹேதுக கடாக்ஷ ஸக்ஷாத்க்ருத பகவத் ஸ்வரூப ரூப குண விபூதி விசேஷரான ஆழ்வார்களும் அறிந்து, ஸ்வ ஸ்வ ஸ்தாநங்களிலே யிருந்தும், திருமலை யடிவாரத்திலே யிருந்தும், மங்களாசாஸனம் பண்ணி க்ருதார்த்தராய் இருந்த படியை ஸ்ரீ பாஷ்யகாரர், தம் திருவுள்ளத்திலே சிந்தித்து, ஸ்ரீரங்காதி திவ்ய தேசங்களிலே ஆழ்வார்களைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப்பண்ணி ஆழ்வார்கள் திருவுள்ளத்தை யறிந்தவ ராகையாலே, திருமலையிலே ஆழ்வார்களைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணாமலிருந்தும், தாமும் ஆழ்வார்களைப் போலே திருமலை ஏறாமலும், ஒரு காலவிசேஷத்தில் உபாதி நிமித்தமாகத் தினத்ரயம் சுஷ்கோபவாஸமாய் இருந்து திருமேனி சோதனம் பண்ணிக் கொண்டு திருமலை ஏறியருளி, அப்பனுக்குத் திருவாழி திருச்சங்குகளைச் சாத்தியருளப் பண்ணி, மங்களசாஸனம் செய்தருளினதை, தத் காலத்தில் பெரியோர்களான ஸ்தலாபிமானிகளால் அறிந்து, திருக்கார்த்திகை மஹோத்ஸவத்திலே திருவேங்கடமுடையான் *திருமுகப்பட்டை ஆழ்வார்களுக்குப் பிரஸாதிக்கும்படி கட்டளைபண்ணி, அத்யயனோத்ஸவத்திலே திருமாமணி மண்டபத்திலே மற்றை யாழ்வார்களுக்கு ஆசார்யரான நம்மாழ்வாருக்கு ஆசார்யரான ஸேனைமுதலியாரையும், அனந்தாழ்வான் கைங்கர்யமான அர்ச்சாரூமாய் எழுந்தருளப் பண்ணினவராய், ஸ்ரீ வைஷ்ணவ தர்சநாபிமானியான எம்பெருமானாரையும் ஸ்வாமி ஸந்நிதியிலே எழுந்தருளப் பண்ணி, ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்திகளான திவ்ய ப்ரபந்தங்களை ஸ்வாமி கேட்டருளும்படி கட்டளை பண்ணினார் மணவாள மாமுனிகள் என்று, பெரியோர்கள் அருளிச் செய்வார்கள்.

---

1. பக்கமான இடத்திலே. * அநுபந்தத்திற் காண்க.

கோவிந்தராஜனும் திருவேங்கடமுடையான் [1] சாயாநுவர்த்தனம் பண்ணுகிறவ ராகையாலே, தம்முடைய ஸந்நிதிக்கு எம்பெருமானார் நியமனத்தின்படியே ஆழ்வார்கள் எழுந்தருளியிருந்தாலும், திருமுகப் பட்டயம் மாத்ரம் அனுப்புவிக்கிற தில்லை. மற்றைய ஸ்ரீ ராமாநுஜ தர்சனங்களெல்லாம் திருவோலக்கத்திலே நடக்கும்படி பெரியோர்கள் கட்டளை பண்ணினார்கள்.

பூர்வ காலத்திலே ஸாளுவ நரஸிம்ஹராய னென்பான் ஒருவன் நரபதியாய் ப்ருதிவி ராஜ்யம் பண்ணும்போது மிலேச்ச கலஹம் ப்ரஸக்தமாய் அவர்கள் இந்தத் தேசத்திலே வந்து தேவப்ராஹ்மண ஹிம்ஸையைப் பண்ணாநிற்க, அப்போது, வீரநரஸிம்ஹ ராயன் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பக்திமா னாகையாலே, திருமலையிலே மலைகுனிய நின்ற பெருமாளையும், கோவிந்தராஜன் முதலான பேர்களையும், ஸ்ரீ பண்டாரத்தையும் பாபநாச தீர்த்தத்துக்குக் கிழக்காய் அதிகோப்யமான குகையிலே எழுந்தருளப்பண்ணி, நித்யாராதனமும் தப்பாமல் நடப்பித்துப் கொண்டு, பெரிய பெருமாள் திருமேனிக்கு ரக்ஷையாகத் திருமலையிலே கல்வேலியுங் கட்டிவைத்துக் கொண்டிருக்க, அந்தக் காலத்திலே, மிலேச்சரும் மலை ஸமீபத்திலே வாராநிற்க, ராஜனும் மிலேச்சரை ஸம்ஹரிக்கையிலே அசக்தனாய், ஒருநாள், திருவேங்கடமுடையான் ஸந்நிதியிலே வந்து, "ஸ்வாமிந், தேவரீர் தாமே இந்த மிலேச்சோபத்ரவத்தைப் போக்கடிக்க வேணு" மென்று ப்ரபத்திபண்ண, அன்று ராத்ரி, ராயன் ஸ்வப்நத்திலே திருவேங்கடத்தரி யான அழகிய சிங்கர் ஸாக்ஷாத்கரித்து, "வாராய் நரபதியே, பூர்வ காலத்திலே நாம் ஒரு பக்தன் ஆபத்தைப் போக்குகைக்காக நமக்கு அஸாதாரணங்களான சங்க சக்கரங்களை அப் பக்தனுக்குக் கொடுக்கையாலே, நம்முடைய ஸர்வேச்வரத்வத்தைப் போக்கித் தேவதாந்த்ரபரமாக எண்ணின பாமர ஜனங்களைச் சாஸ்த்ரமுகத்தாலும், ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களாலும் நஷ்டமாகப்பண்ணி, நமக்கு அஸாதாரணங்களான திருவாழி திருச்சங்குகளையும் தந்து, நம்முடைய சர்வேச்வரத்வத்தையும் ப்ரகாசிப்பித்து, நம்முடைய சரீரத்துக்கும், ஸம்பத்துக்கும் ரக்ஷகராய் நம்முடைய திவ்ய க்ஷேத்ரத்துக்கு வந்த ஆபத்தையும் நீக்கியவரான ஸ்ரீ பாஷ்யகாரர் முத்ரைக்குக் கர்த்தாவான ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவரைக் கொண்டு மிலேச்ச கலஹத்தைப் போக்கடிக்கி

1. நிழலைப் பின்பற்றுபவர்.

ரோம். அவரோடே உன்னுடைய சதுரங்க ஸேனைகளையும் கூட்டி, அவருக்கு நரவாஹனமும் கொடுத்து மிலேச்சர்க் கெதிராகப் போம்படி அனுப்பினால், அவரே ஸமஸ்த பாபங்களையும் போக்கடிக் கிறார்'' என்று அருளிச்செய்ய, ராயனும் ஸ்வப்நத்தைக் கண்டு ஸந்துஷ்டனாய், அப்போதே, எம்பெருமானார் முத்ரா நிர்வாஹகராய், நரஸிம்ஹ மந்த்ர ஜபத்தாலே பகவத் ஸாக்ஷாத்கார முடையவராய், நரஸிம்ஹ ஜீயரென்று ப்ரஸித்தராய் (உள்ள) ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவருக்கு, தன்னுடைய சதுரங்க பலங்களையும் கூட்டிப் பல்லக் கையும் கொடுத்து அனுப்புவிக்க, அன்று ராத்ரி, மிலேச்சனானவன், தன் ஸ்வப்நத்திலே ஒரு ஸந்யாஸி, நரஸிம்ஹாகாரமாய்ச் சதுரங்க பலங்களோடே வந்து, தன் ஸேனைகளை ஸம்ஹரித்ததாயும், தன் கண் ணிலே ஒரு பாணம் வந்து பட்டதாயும் கண்டு பயப்பட்டுத் தன் பரிஜனங்களோடே ஓடிப்போனான். பின்பு, மிலேச்ச கலஹம் சமித்தது.

ஒரு கால விசேஷத்திலே, ஒட்டியன் கலஹமுண்டாய், அவர் களாலே திருமலைக்குப் பயம்வரும் என்னும்போது, அன்று தொடங்கி ராயன், ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவருக்குப் பல்லக்கேறிக் கொண்டு ஸ்வாமி கைங்ர்யங்களைப் பண்ணிக் கொண்டிரும் என்று கட்டளை பண்ணினான். அன்று தொடங்கி ஏகாங்கி பட்டத்திலே இருக்கிற பேர்களிலே ஒருவர் பல்லக்கேறிக் கொண்டு ஸ்வாமி கைங்கர்யங்களைப் பண்ணுவார்கள்.

பின்பொரு கால விசேஷத்திலே ஒட்டியன் கலஹம் ப்ரஸக்த மாய், அவர்களாலே திருமலைக்குப் பயம்வரும் என்னும் ஸமயத் திலே இந்தத் தேசாதிபதியான ஸதாசிவராயன், ஒட்டியன், தேவ வைதீகங்களை அங்கீகரித்தவனாகையாலும், தேவப்ராஹ்மண ஹிம்ஸை பண்ணாமல் தேசத்தை ஆக்ரமிக்க வந்தவன் ஆகையாலே யும், அவனோடே யுத்தம்பண்ண வொண்ணாதென்று நிச்சயித்து, பூர்வகாலத்திலே மிலேச்ச கலஹம் ப்ரஸக்தமான போது திருவேங் கடமுடையான் ராஜமூல மன்றிக்கே தம்முடைய பக்த ஜனங்களைக் கொண்டே வந்த கலஹத்தைப் போக்கடித்தா ரென்கிற ஐதிஹ்யத் தைக் கேட்டவனாகையாலே, அந்தப்படியே இப்போதும் பக்த ஜனங்களாலே பயம் வாராதபடி பண்ணுவோ மென்று நிச்சயித்து, அந்தக் காலத்திலே திருவேங்கடமுடையான் ஸ்ரீபண்டாரத்துக்குக் கர்த்தாவான கோயில் கேள்வித் திருவேங்கட ஜீயர், ஸகல சாஸ்த்ர

ப்ரவர்த்தகராய் ராஜவல்லபராய் இருக்கையாலே, ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவர் பல்லக்கை வாங்கித் திருவேங்கட ஜீயருக்குக் கொடுத்து, "தேவரீர், ராஜகோஷ்டிக்கு ப்ரதிபத்தி [1] ஜனகமாம் படி இருப்பவ ராகையாலே, இந்தப் பல்லக்கை ஏறிக்கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ [2] ஸம்ருத்தியோடே புறப்பட்டுப் போய், ஓட்டிய தேசாதிபதியான ஜகந்நாததேவனை ஆசீர்வாதம் பண்ணி, இந்த ஸ்தலத்துக்குப் பயம் வராதபடி பண்ணிக் கொண்டு வாரும்" என்று அனுப்ப, ஜீயரும் அப்படியே பல்லக்கேறிக் கொண்டு போய் ஓட்டியனை ஆசீர்வாதம்பண்ணி, திருவேங்கடமுடையான் வைபவத்தைப் பஹுவாக அருளிச்செய்ய, அவனும் கேட்டு ப்ரதிபந்நனாய்த் திருமலையிலே வந்து ஸ்வாமியை ஸேவித்து, ஸ்வாபிமதம் ஸித்திக்கைக்கு ஸ்வாமிக்கொரு வஜ்ரகிரீடமும் பண்ணிச் சாத்துவித்து, க்ருதார்த்தனாய் விஜயம் பண்ணிக்கொண்டு வருகிறவனாகையாலே, திருமலை புண்யக்ஷேத்ர மாகையாலே கோயிலிலே ஒரு ஜயஸ்தம்பத்தையும் ப்ரதிஷ்டை பண்ணி, ஸேது தரிசனம் பண்ணப்போனான்.

முன்பொரு நாளில், பின்பு, ஸதாசிவ ப்ரஹ்மராயனும், ஜீயரைப்பார்த்து, "தேவரீர், கைங்கர்ய காலங்களிலே நரவாஹனாரூடராய் எழுந்தருளக்கடவீர்" என்று கட்டளை பண்ணினான். பின்பொரு நாள், திருவோலக்கத்திலே ஜீயர் சாஸ்த்ர வச்யராகையாலே தமக்கு நரவாஹனம் ஆச்ரம விருத்தம் அன்றோ? ஆகையால் [3] த்யாஜ்யம் என்றெண்ணிக் கொண்டிருக்க, அப்போது அர்ச்சகரும் பரவசகாத்ரராய், ஜீயரைப்பார்த்து,

வாஹநஸ்தயதிః சீக்ரம் பதத்யேவ ந ஸம்சயః ।

[ वाहनस्थयतिः शीघ्रं पतत्येव न संशयः । ]

என்று சொன்ன பகவான் தானே,

மந்நிமித்தக்ருதம் பாபம் சாபி தர்மாய கல்பதே ।
மாமநாத்ருத்ய தர்மோऽபி பாபம் ஸ்யாத் மத்ப்ரபாவதః ॥

[ मन्निमित्तकृतं पापं चापि धर्माय कल्पते ।
मामनादृत्य धर्मोऽपि पापं स्यात् मत्प्रभावतः ॥ ]

1. தோன்றுமாறு. 2. நிறைவோடே. 3. தவிர்க்கத் தக்கது.

என்று சொன்ன வார்த்தை பக்தர்களுக்கு [1]உபாதேய தமமான அர்த்தத்தைக் காட்டுகையாலே, பகவத் கைங்கர்ய நிர்வாஹ காலங்களிலே வாஹனஸ்தரா யிருந்து ஸ்வாமி கைங்கர்யங்களைப் பண்ணும் என்று நியமித்தார். பூர்வ காலத்திலும் வேங்கடத்தரி நியமன முண்டாகையாலே, அன்று தொடங்கிப் பட்டத்திலே யிருக்கிற ஜீயர்கள் கைங்கர்ய நிர்வாஹ காலங்களிலே வாஹனஸ்தராய் இருப்பார்கள்.

திருப்பதியிலே சூடிக்கொடுத்த நாய்ச்சியார் திருவாடிப் பூரத்திலே கூடல் விளக்கிற ஸம்ப்ரதாயம் :—

ஸ்ரீ வேதவ்யாஸ பகவான் சிஷ்யராய்க் [2]காலத்ரய தர்ம த்ரஷ்டாவான ஸூத மஹாமுனியானவர், ஸ்ரீ வராஹ புராணத்திலே வேங்கடாசல மாஹாத்ம்யத்திலே அஷ்டோத்தரசத நாமாத்யாயத்திலே, 'கோவிந்தாய நமஸ்துப்யம், ஸ்ரீநிவாஸாய தே நமః' என்று திருவேங்கடமுடையானுக்கும் கோவிந்தராஜனுக்கும் ஐக்யம் தோற்றும்படி சொல்லுகையாலே, கட்டியம் யாதவராயன் ப்ருதிவி ஸாம்ராஜ்யம் பண்ணும் போது, பாஷ்யகாரர் காலத்திலே தில்லைக் கோவிந்தராஜர், ஒரு காரணாந்தரத்தாலே காவேரீ தீரத்திலே திருச்சித்திரகூட மென்று புராண ஸித்தமான திவ்ய க்ஷேத்ரத்தை விட்டுத் திருமலை அடிவாரத்திலே திருப்பதி என்னும் திவ்ய நகரத்திலே எழுந்தருளி நித்யவாஸம் பண்ணிக்கொண்டு, திருவேங்கடமுடையானுக் [3]கபராவதாரமாய், அநேக சேதனர்களுக்கு [4]த்ருஷ்டாத்ருஷ்டஸூக ப்ரதராய்த் திருவாராதனம் கொண்டருளும் காலத்திலே ஸ்ரீ பாஷ்யகாரர், கோவிந்தராஜன் திருவேங்கடமுடையானோடு ஸமஸ்த்தைச்வர்யங்களையும் பேதமின்றிக்கே அநுபவிக்கும் படிக்கு ஸூசகமாம்படி ஆழ்வார் திருமகளான சூடிக்கொடுத்த நாய்ச்சியாரை வாமஹஸ்தத்திலே செங்கழுநீர்ப் புஷ்பத்தைத் தரித்துக் கொண்டிருக்கும்படி செய்து, திவ்யைச்வர்யாபிவ்ருத்தி காரிணியாய் வ்யூஹ லக்ஷ்மிக்கு வேண்டிய யந்த்ர மந்த்ரோத்தாரணாதிகளையும் திவ்ய ஸிம்ஹாஸனத்திலே லிகித்தும் கோவிந்தராஜனுக்குத் தக்ஷிண பார்சத்திலே வைகாநஸாகம ப்ரகாரத்தாலே திருப்

1. மிகவும் ஏற்றுக்கொள்ளத் தக்கதான.
2. முக்கால தருமங்களையும் அறிந்தவரான.
3. மற்றொரு அவதாரமாய்.
4. இம்மை மறுமை இன்பங்களைத் தருபவராய்.

பிரதிஷ்டை கொண்டருளப் பண்ணிவைத்தும், ஸமஸ்தோத்ஸவங்களும் கொண்டருளும்படி ஸங்கல்பித்து, பின்பு, ஆழ்வார் திருமகளும் தானும்,

பாண்ட்யதேசே கலேராதௌ தந்விநவ்யபுரே சுபே।
க்ருஷ்ணாநுபவபூர்த்யர்த்தம் பாமா பூமௌ ஜநிஷ்யதி ||

[ पाण्ड्यदेशे कलेरादौ धन्विनव्यपुरे शुभे ।
कृष्णानुभवपूर्त्यर्थं भामा भूमौ जनिष्यति ॥ ]

என்று ஹரிவம்சத்திலேயும்,

அயோநிஜா ச துளஸீகாநநே விச்வதாரிணீ।
ஜநிஷ்யதி கலௌ தேவீ மாநுஷீ க்ருஷ்ணபக்தித: ||

[ अयोनिजा च तुलसीकानने विश्वधारिणी ।
जनिष्यति कलौ देवी मानुषी कृष्णभक्तितः ॥ ]

என்றும் பௌராணிகர் சொன்னபடியே பூமி அம்சமாகத் திருத்துழாய்த் திருநந்த வனத்திலே பூமியிலே திருவவதரித்து,

ஆரப்ய சைசவ மநாரத மச்யுதாங்க்ரி-
பக்த்யா நிரஸ்த விஷயாந்தர பாவபந்தே।

[ आरभ्य शैशवमनारतमच्युताङ्घ्रि-
भक्त्या निरस्तविषयान्तरभावबन्धे । ]

என்றும்,

"அவரைப் பிராயந் தொடங்கி என்று மாதரித்தெழுந்த வென்தட முலைகள்" என்றும், அருளியதைப் பாஷ்யகாரர் சிந்தித்துச் சூடிக்கொடுத்த நாய்ச்சியார் திருவவதார காலமான திருவாடிப் பூரமான விசேஷ காலத்திலே, சூடிக்கொடுத்த நாய்ச்சியார் கோவிந்தராஜன் சேர்த்தியோடே திருமலை யடிவாரத்தில் அடிப்புளி மண்டபத்திலே ஸ்வயம் வ்யக்தமான, திருவேங்கடமுடையான் திருவடிகளின் முன்பே எழுந்தருளச் செய்து, திருவேங்கடமுடையான் பஹு தூரத்திலே யிருந்து திருமலை நம்பிக்குப் ப்ரத்யக்ஷமாய் விப்ரக்ருஷ்டராகையாலே, "கோவிந்தன் என்பதோர் பேரெழுதி, வித்தகன் வேங்கட வாணன்" என்றும், "மாதவன் கோவிந்தன்

வேங்கடவாணன்" என்றும், "கோவிந்தாய நமோ நித்யம் ஸ்ரீநிவாஸாய தே நம:"; என்றும், புராண புருஷரான ஸ்ரீ ஸூத மஹா முனியும் அநுஸந்தித்தும், அவர் தகப்பனாரும், நம்மாழ்வாரும் ஐக்யம் தோற்றும்படியும் அருளிச் செய்கையாலே, திருவேங்கட முடையானுக்கு அபராவதாரமான கோவிந்தராஜனோடு கூடல் வளைக்கும்படி ஸங்கல்பித்தருளின தற்காலத்திலே, மலைகுனிய நின்றா ரரையர், ஸ்ரீபாஷ்யகாரர் நியமனத்தின்படியே கூடல் வளைப் பர். கூடல் வளைக்கை என்று த்ரமிட சாஸ்த்ரத்திலே [1] விப்ரக்ருஷ்டனைய்ச் சகுனம் பார்க்கை. இது, உபதேச [2] கம்யம்.

ஒரு விசாலமான பாத்ரத்திலே எட்டு [3] புருஷாகார யோக்ய மாம்படி அக்ஷதங்களான [4] சாலி தண்டுலங்களைப் பரப்பி, அதிலே ஒன்றோடொன்று கூடாமல், மண்டலாகாரமாக எட்டு ரேகையைக் கீறி ஏழு திருச்சுற்றுக்கி, எல்லாச் சுற்றுக்களிலும் சுழி சுழியாகக் கீறி, அந்தச் சுழிகளை இரண்டிரண்டாகத் தள்ளிப்போட்ட பின் ஒரு சுழி மிகுந்தால் அது நல்ல சகுன மன்றென்றும், பின்னையொரு திருச்சுற்றிலே சுழிகளை முன்பு போல இரட்டை யிரட்டையாகத் தள்ளிப்போட இரண்டு மிகுந்தால் நல்ல சகுன மென்றும் நிச்சயித்து, சூடிக்கொடுத்த நாய்ச்சியாரை, "திருத்தாய் செம்போத்தே" என்கிற திருமொழியை அநுஸந்தித்துக் கொண்டு ஸ்வயம் வ்யக்த மான திருவேங்கடமுடையான் திருவடி ஸமீபத்திலே கோவிந்த ராஜன் சேர்த்தியிலே எழுந்தருளப்பண்ணி, திருவாலத்தி கொண்டருளப்பண்ணி, காலோசிதோப சாரங்களையும் கொண்டருளப் பண்ணிக் கூடல் வளைக்கை. இதொரு ப்ரகாரம். [5] ப்ரகாராந்தரங்களும் உண்டென்று சொல்லுவார்கள்.

ஹரித்ராசூர்ணஸம்ஸ்கார மாசரேத் ப்ரஹ்மவித் பிது: ।
காலே து பரமே புத்ர: ஸ்துதிர் கேயா ச வைஷ்ணவை: ॥
ஹரித்ராசூர்னே ரங்காநாம் குரூணும் ச மஹாத்மநாம் ।
காலேऽந்திமே பரிஷ்காரம் குர்யாந் மந்த்ரபவித்ரிதை: ॥
பூர்வம் சூர்ணபிஷேகஞ்ச ப்ரஹ்மமேதக்ரியாம் சரேத் ।
அவிலம்பேந காலேந துஷ்டேந மநஸா ஸுத: ॥

---

1. தூரத்துள்ளவனைய்.　　2. அறியப்படுவது.
3. மனித வடிவத்தின் அளவுக்குத் தகுதியாம்படி.
4. நெல் அரிசிகளை.　　5. வேறு முறைகளும்.

ஸம்ஹிதாந்தரே :—

அர்ச்சிராதிகதேர் மார்கசிந்தாத்யாயம் சுபாவஹம் ।
படேயு ரநகம் விப்ரா ச்சாந்யா ப்ரஹ்மபரா: ஸ்துதீ: ॥
மாநுஷீம் ச ருஷிப்ரோக்தாம் ஸ்துதிம் ச மஹ துத்ஸவே ।
உலூகலே து முஸலம் காயமாநே மநோஹரே ।
ஸ்தாபயித்வா ஹர்த்ராம் வை தாஸீபி: கேசவஸ்ய ச ।
சூர்ணீக்ருத்ய ததோ மந்த்ரை: பரிஷ்காரம் சரேத் புத: ॥

[ हरिद्राचूर्णसंस्कारमाचरेत् ब्रह्मवित् पितुः ।
कालेतु परमे पुत्रः स्तुतिगेया च वैष्णवैः ॥
हरिद्राचूर्णैरङ्गानां गुरूणां च महात्मनाम् ।
कालेऽन्तिमे परिष्कारं कुर्यान्मन्त्रपवित्रितैः ॥
पूर्वं चूर्णाभिषेकं च ब्रह्ममेधक्रियां चरेत् ।
अविलम्बेन कालेन तुष्टेन मनसा सुतः ॥

संहितान्तरेः—

अर्चिरादिगतेर्मार्गचिन्ताध्यायं शुभावहम् ।
पठेयुरनघं विप्रा श्चान्या ब्रह्मपराः स्तुतीः ॥
मानुषीं च ऋषिप्रोक्तां स्तुतिं च महदुत्सवे
उलूखले तु मुसलं कायमाने मनोहरे ।
स्थापयित्वा हरिद्रां वै दासीभिः केशवस्य च ।
चूर्णीकृत्य ततो मन्त्रैः परिष्कारं चरेद्बुधः ॥ ]

*திருப்பதியிலே கோவிந்தராஜன் திருவாராதன க்ரமம் :—*

*ப்ரஹ்மாண்ட புராணத்திலே தசாத்யாயியான திருவேங்கட மாஹாத்ம்யத்திலே நாரதபகவான் :—*

நாராயண மஹம் த்ரஷ்டும் கதாசித் க்ஷீரஸாகரம் ।
ஆகதஸ்தத்ர சாத்ராக்ஷம் ச்வேதத்வீபம் மஹோச்ச்ரிதம் ॥

[ नारायणमहं द्रष्टुं कदाचित् क्षीरसागरम् ।
आगतस्तत्र चाद्राक्षं श्वेतद्वीपं महोच्छ्रितम् ॥ ]

இத்யாதியாலே தாம் திருப்பாற் கடலுக் கெழுந்தருளி எம்பெருமானைக் கண்டு திருவடி தொழ, எம்பெருமானும் :—

ச்ரத்தயா ச்ரூயதாம் வத்ஸ ! த்வயா த்ருஷ்டம் ஜகத்த்ரயம் ।
ப்ரஹ்மாண்டே குத்ர வா தேசே மம வாஸோ பவே திஹ ॥

விஹாரயோக்யம் ச ததா விச்ரமஸ்தாந முத்தமம் ।
கதய த்வம் மஹாபாக யத்யஸ்தி புவி தாத்ருசம் ॥

[ श्रद्धया श्रूयतां वत्स ! त्वया दृष्टं जगत्त्रयम् ।
ब्रह्माण्डे कुत्र वा देशे मम वासो भवेदिह ॥
विहारयोग्यं च तथा विश्रमस्थानमुत्तमम् ।
कथय त्वं महाभाग यद्यस्ति भुवि तादृशम् ॥ ]

இத்யாதியாலே தமக்கு உசிதமான வாஸ ஸ்தானம் எங்கே? என்று கேட்டருள, ஸ்ரீ நாரத பகவானும்,

தவ பாதப்ரஸூதாயாః கங்காயாச்சைவ தக்ஷிணே ।
திக்பாகே தண்டகாரண்யே யோஜனைர்த்விசதைர் மிதே ॥

தக்ஷிணாம்புநிதேச்சாபி தக்ஷிணேதரபாககே ।
பூர்வாப்தேঃ பச்சிமே பாகே பஞ்சபிர் யோஜனைர் மிதே ॥

ரமணீய மிதம் ஸ்தாநம் க்ரீடாயோக்யம் விபோ தவ ।

[ तव पादप्रसूतायाः गङ्गायाश्चैव दक्षिणे ।
दिग्भागे दण्डकारण्ये योजनैर्द्विशतैर्मिते ॥
दक्षिणाम्बुनिधेश्चापि दक्षिणेतरभागके ।
पूर्वाब्धेः पश्चिमे भागे पञ्चभिर्योजनैर्मिते ॥
रमणीयमिदं स्थानं क्रीडायोग्यं विभो तव । ]

இத்யாதியாலே அடையாளங்களோடே திருமலையே நித்யவாஸ யோக்யமென்று சொல்ல, எம்பெருமானுங் கேட்டருளி,

அதாஹ பகவாந் சேஷ மாஹூய புரதঃ ஸ்திதம் ।
மேககம்பீரயா வாசா ஹர்ஷோத்ப்புல்லவிலோசநঃ ॥

[ अथाह भगवान् शेषमाहूय पुरतः स्थितम् ।
मेघगम्भीरया वाचा हर्षोत्फुल्लविलोचनः ॥

ஸ்ரீபகவாநுவாச :—

அநந்த மத்ப்ரியோ லோகே ந த்வதந்யோऽஸ்தி கச்சந ।
தஸ்மாந் மம ப்ரியம் கிஞ்சித் கர்த்தவ்யம் பவதா நவம் ॥
ச்ரூயதாம் பவதா ஸர்வம் நாரதே நேரிதம் வச: ।
க்ரீடாஸமுசிதே தேசே வஸ்தவ்யமிதி மே மதி: ॥
தத்ர பூத்வா கிரிவரோ பவாந் வஸது பூதலே ;
த்வத்பணாமண்டலபுவி ஸ்தாதவ்யம் ரமயா ஸஹ ॥

श्रीभगवानुवाच—

अनन्त मत्प्रियो लोके न त्वदन्योऽस्ति कश्चन ।
तस्मान्मम प्रियं किञ्चित् कर्तव्यं भवता नवम् ॥
श्रूयतां भवता सर्वं नारदेनेरितं वचः ।
क्रीडासमुचिते देशे वस्तव्यमिति मे मतिः ॥
तत्र भूत्वा गिरिवरो भवान् वसतु भूतले ।
त्वत्फणामण्डलभुवि स्थातव्यं रमया सह ॥ ]

இத்யாதியாலே, திருவனந்தாழ்வானைப் பர்வதாகாரமாய் இருமென்று நியமித்து, தாமும் பெரிய பிராட்டியார் முதலான தேவிகளோடும், ஸேனைமுதலியார் முதலான ஸூரிகளோடும் அவதரிக்க வேணுமென்று திருவுள்ளமாய்,

அஹம் ஹி ஸர்வஜந்தூநாம் த்ரிஷ்டிகோசரதாம் கத: ।
வஸிஷ்யாமி ச்ரியா ஸார்த்தம் ததாமீஷ்டாநி தேஹிநாம் ॥

[ अहं हि सर्वजन्तूनां दृष्टिगोचरतां गतः ।
वसिष्यामि श्रिया सार्धं ददामीष्टानि देहिनाम् ॥ ]

என்று தந்தாம் மலையிலே ஸகல சேதநாசேதனங்களுக்கும் ப்ரத்யக்ஷமாம்படி பெரிய பிராட்டியாரோடும் நித்ய ஸந்நிதி பண்ணி ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கிறோம் என்று ஸங்கல்பித்து,

ஸகீபிஸ் ஸஹிதா யூயம் ஸமாகச்சத தத்ர வை ।
விஹாரயோக்யோ தேசோऽயம் நிர்திஷ்டோ முநிநா மம ॥
இத்யுக்த்வா பகவாந் ப்ராஹ ஸேநாபதி மரிந்தமம் ।
த்வதீயாநுசரை ஸ்ஸார்த்தம் ஸர்வைః பாரிஷதைர் யுதஃ ॥
ப்ரஹ்மாத்யைஃ த்ரிதசைஸ் ஸார்த்தம் யக்ஷரக்ஷோகணாந்விதைஃ ।
ஸித்தவித்யாதரைச்சாபி கிந்நரைச்ச மஹோரகைஃ ॥
ஸர்ஷிஸங்கைர் யுதஃ சீக்ரம் த்வம் ஹி சேஷாசலம் ப்ரதி ।
வஸ்தவ்யம் யத்ர ஹி மயா ரமயா ஸஹிதேந வை ॥
அநுக்ரஹாய லோகாநாம் நித்யஞ்ச ப்ரயதாத்மநாம் ।

[ सखीभिस्सहिता यूयं समागच्छत तत्र वै ।
विहारयोग्यो देशोऽयं निर्दिष्टो मुनिना मम ॥
इत्युक्त्वा भगवान् प्राह सेनापतिमरिन्दमम् ।
त्वदीयानुचरैस्सार्धं सर्वैः पारिषदैर्युतः ॥
ब्रह्माद्यैस्त्रिदशैस्सार्धं यक्षरक्षोगणान्वितैः ।
सिद्धविद्याधरैश्चापि किन्नरैश्च महोरगैः ॥
सर्षिसङ्घैर्युतः शीघ्रं त्वं हि शेषाचलं प्रति ।
वस्तव्यं तत्र हि मया रमया सहितेन वै ॥
अनुग्रहाय लोकानां नित्यं च प्रयतात्मनाम् । ]

இத்யாதியாலே பெரிய பிராட்டிமார்களையும் ஸூரிகளையும் நீங்களும் ஸபரிகரராய் வாருங்கோள் என்று நியமித்து,

இத்யுக்த்வா பகவாந் ஸார்த்தம் ச்ரியா பூம்யா ச நீலயா ।
விநதாஸுத மாரூடோ யயா வஹிமஹீதரம் ॥

[ इत्युक्त्वा भगवान् सार्धं श्रिया भूम्या च नीलया ।
विनतासुतमारूढो ययावहिमहीधरम् ॥

இத்யர்தியாலே க்ஷீராப்திசாயி யானவன் தானே திருமலையில் எழுந்தருளினன் என்னும் அர்த்த விசேஷம் புராணஸித்த மாகையாலே, க்ஷீராப்தி சாயிக்கும், திருவேங்கடமுடையானுக்கும் [1]வஸ்த்வைக்யம்

1. பொருள் ஒற்றுமை.

ஸித்தமே யாகிலும், [1] பூர்வபாவித்வ பச்சாத்பாவித்வங்கள் உண்டாகாமைபற்றி எம்பெருமானார் திருச்சித்ர கூடத்திலே க்ரிமிகண்டன் வ்யாஜமாக மூலபேரம் கருங்கடலிலே புகுருகையாலே அந்த மூலபேரமான கருமாகடலுள் கிடந்தானையும் ஆவாஹனம்பண்ணிக்கொண்டு, உத்ஸவபேரமாய் எழுந்தருளின தேவாதி தேவனுக்கு மூலவிக்ரஹமாக க்ஷீராப்திசாயியைத் திருமலை யடிவாரத்திலே திருப்ரதிஷ்டை பண்ணுவிக்கையாலும், அங்குண்டானபடியே, ஹரிவம்சே, புஷ்கரோபாக்யாநே, ஸப்த விம்சத்யுத்தர சதாத் ஊர்த்வ ப்ரகரணே,

> ததః சயாநம் ஸ்ரீமந்தம் பஹுயோஜநவிஸ்த்ருதே ।
> பத்மநாபம் ச விச்வேசம் ப்ரணிபத்யோசதுః ஸ்துதிம் ॥
> ஜாநீம ஸ்த்வாம் விச்வயோநிம் ஏகம் புருஷஸத்தமம் ।
> தபःபாலநஹேத்வர்த்தம் ஆகதௌ வித்தி நௌ ஸதா ॥

> [ ततः शयानं श्रीमन्तं बहुयोजनविस्तृते ।
> पद्मनाभं च विश्वेशं प्रणिपत्योचतुः स्तुतिम् ॥
> जानीमस्त्वां विश्वयोनिं एकं पुरुषसत्तमम् ।
> तपःपालनहेत्वर्थं आगतौ विद्धि नौ सदा ॥

என்றும்,

ஸ்ரீ வைகாநஸ ஸங்க்ரஹே :—

> பாதபார்ச்வே ததா பித்தௌ காரயேந் மதுகைடபௌ ।
> ஜாநுமாத்ரஸமுத்ரஸ்தௌ உக்ரவேஷஸமந்விதௌ ॥
> தஹ்யமாநா வநந்தஸ்ய விஷஜ்வாலாபி ரேவ தௌ ।

> [ श्रीवैखानससंग्रहे: —
> पादपार्श्वे तथा भित्तौ कारयेन्मधुकैटभौ ।
> जानुमात्रसमुद्रस्थौ उग्रवेषसमन्वितौ ॥
> दह्यमानावनन्तस्य विषज्वालाभिरेव तौ ॥ ]

என்னும் ப்ரமாண முள்ளபடியாலே மதுகைடபர்களாயும் ஸந்நிதியிலே ஸேவித்துக் கொண்டிருக்கும் விக்ரஹமாக ப்ரதிஷ்டை பண்ணி வைத்தும் சென்று வாராநின்ற நல்லடிக் காலத்திலே,

1. முன் உண்டானது பின் உண்டானது என்னும் வேற்றுமை.

காசிராஜாவானவன் அநபத்யனாய் ஸந்தானார்த்தமாக ஸகுடும்பனாய்த் திருமலையிலே திருவேங்கடமுடையானைப் பக்தியுடனே ஸேவித்து நிற்க, அவ்வளவில், அன்று அவன் மஹிஷி ஸ்வப்நத்தில் திருவேங்கடமுடையான், "நான் உனக்கு ஸந்தானம் தருகிறேன்; எனக்கு உன் ரஸாமணியைத் தா" என்ன, அவ்வளவில் அந்த ராஜ மஹிஷியும் [1] பர்த்ரு பரவசையாகையாலே, "பர்த்தாவின் அநுமதி வேணும்" என்ன, அவ்வளவில் திருவேங்கடமுடையானும் "உனக்கப்படி [2] அபிஸந்தியுண்டாச்சுதாகில், எனக்கும் என் அண்ணா கோவிந்தராஜன் அநுமதி வேணும்" என்ன, இப்படி அற்புதமான ஸ்வப்ந வ்ருத்தாந்தம் உண்டாகையாலும், கோவிந்தராஜனுக்கும், திருவேங்கடமுடையானுக்கும் அண்ணாவென்றும் தம்பியென்றும், திருநாம ப்ரஸித்தி ஸர்வ தேசத்திலும் உண்டாச்சுது; இந்த ஐதிஹ்யம் சிரோபாஸிதர் சொல்லுவது.

வ்யாஸம் தச்சிஷ்ய மாத்யம் முநிமபி விதிதம் ப்ரஹ்மநந்தீதி நாம்நா
நாதார்யம் பத்மநேத்ரம் ரகுவர மத தம் யாமுநேயம் மஹாந்தம் ।
பூர்ணம் ராமாநுஜாக்யம் முநிமபி குருகாநாயகம் விஷ்ணுசித்தம்
வந்தே தேவாதிராஜம் ரகுவாஸஹஜம் தேசிகம் வேங்கடேசம் ॥

[व्यासं तच्छिष्यमाद्यं मुनिमपि विदितं ब्रह्मनन्दीति नाम्ना
नाथार्यं पद्मनेत्रं रघुवरमथ तं यामुनेयं महान्तम् ।
पूर्णं रामानुजाख्यं मुनिमपि कुरुकानायकं विष्णुचित्तम्
वन्दे देवाधिराजं रघुवरसहजं देशिकं वेङ्कटेशम् ॥]

இது ப்ரஹ்மதந்த்ர ஜீயர் ஸ்ரீ பாஷ்ய ஸம்ப்ரதாய க்ரம ஸ்ரீ ஸூக்தி.

ஸ்ரீசேஷாசலநாயகஸ்ய ஜகதாம் தாதஸ்ய வாக்யாத் பரம்
தாதேத்யாதரதோ ஹி யஸ்ய மஹிமா லோகே ப்ரஸித்திம் கதஃ ।
தம் தாதஸ்ய ச தாத மார்யசரணம் ஸ்ரீசைலபூர்ணம் குரும்
ப்ரஜ்ஞா பக்தி விரக்தி சாந்தி கருணா பாதோநிதிம் ஸம்ச்ரயே ॥

[பாரத்வாஜகுலீந மாச்ரிதநிதிம் ப்ரஜ்ஞாநிதிம் ஸம்ச்ரயே, இதி ச பாடஃ]

[ श्रीशेषाचलनायकस्य जगतां तातस्य वाक्यात्परम्
तातेत्यादरतो हि यस्य महिमा लोके प्रसिद्धिं गतः ।

1. கணவன் வழி நிற்பவள். 2. எண்ணம்.

तं तातस्य च तातमार्यशरणं श्रीशैलपूर्णं गुरुम्
प्रज्ञाभक्तिविरक्तिशान्तिकरुणापाथोनिधिं संश्रये ॥

[ " भारद्वाजकुलीनमाश्रितनिधिं प्रज्ञानिधिं संश्रये " इति च पाठः । ]

ஸ்ரீமாந் பாபவிநாசநாஹ்வய ஸரஸ்தீர்த்தேந பூர்ணம் கடம்
த்ருத்வா மூர்த்தநி வேங்கடாசலபதே ராராதநார்த்தம் மஹாந் ।
யோகீந்த்ரஸ்ய ச மாதுல: கலிரிபோ: ஸஂஊக்திம் வத ந்நாதிமாம்
தத்தே பக்திபரிப்லுத: ப்ரதிதிநம் ஸ்ரீசைலபூர்ணோ குரு: ॥

இத்தம் வேங்கடபூதரே குருவர: ஸ்ரீசைலபூர்ணோ ஹரே:
கைங்கர்யம் ஸ⁻மநோஹரம் ப்ரதிதிநம் குர்வ ந்நலம் பக்தித: ।
வேஷம் சாடரமுத்வஹந் ச்ரிதஜநவ்யாமோஹத ச்சைகதா
மத்யே ஸத்பத மார்யவர்யபுரத: ஸ்ரீநாயகோऽத்ருச்யத ॥

தாபார்த்தாய திசாத்ய மஹ்யமுதகம் தாதேதி வாக்யம் ஹரே:
ச்ருத்வா சாபசராந் ததோ த்ருதவத: சேஷாசலாதீசிது: ।
ஸாமோதம் சபராக்ருதேர் குருவர: ஸ்ரீசைலபூர்ணோ மஹாந்
மாயா ஸ்ரீசச்ருதேதி பக்திபரிதோ விஜ்ஞாய நோ தத் ததௌ ॥

ப்ராவண்யாத் குருஸார்வபௌம விஷயாத் தீர்த்தம் ததீயம் தத:
பாதும் பத்தமநா: புந ச்சரவராத் க்ருத்வா ஸரந்த்ரம் கடம் ।
தஸ்மி ந்நிர்கதமம்பு தத் கரயுகாத் பீத்வா யதாவாஞ்சிதம்
ஸ்ரீமாந் சேஷகிரீச்வரோ ஹரிரபி ப்ராப்தச்ச த்ருப்திம் பராம் ॥

ஜ்ஞாத்வா தம் கட மம்பஸா விரஹிதம் கிம்கார்யமஸ்தீதி மே
கிந்நே பூர்ணகுரௌ ச ப்ராப்ய ஸலிலம் வ்யாதாத்மக: ஸ்ரீதர: ।
லீலா ஸ்வஸ்ய ததா குரௌ ப்ரகடயந் தம் பாணிபத்மாத்ஸ்வகாத்
நீத்வா குத்ரசி துங்நதே கிரிதடே ச்ருங்கம் பிபேதேஷஂணு ॥

தஸ்மாத் பாணநிகாதஜான் மம மதாத் அம்ப:ப்ரவாஹாத்தத:
நீத்வா தீர்த்தவராத் பய: ப்ரதிதிநம் சாகாசகங்காஹ்வயாத் ।
மஹ்யம் தாத மஹாநுபாவ விதரே த்யுக்த்வா நிஷாதாக்ருதி:
ஸாக்ஷாத்க்ருத்ய நிஜம் வபுர் ஹரிரபி ஸ்ரீமா நத்ருச்யோऽபவத் ॥

பச்சா தார்யவரஃ ப்ரஹ்ருஷ்டஹ்ருதயஃ தீர்த்தாத் ததஃ பாவநாத்
பூர்ணம் கும்பமமும் வ்ருஷாசலபதேஃ ப்ரீத்யை ஹரே ராஹரந் ।

ஆஸாத்யாச்யுததாம தந்நிகடதஃ ஸ்தாப்யாத தம் பக்திதஃ
பச்யந் வேங்கடநாதரம்யவதநம் பத்தாஞ்ஜலி ஸ்தஸ்த்திவாந் ॥

தாத ஸ்வாது பய ஸ்த்வதீயமபவம் பீத்வாऽத த்ருப்தோ ப்ருசம்
மத்யே மார்கமஹம் ப்ரஸந்நஹ்ருதய ஸ்தாபசச மேசாந்திதஃ ।

இத்யாபாஷ்ய பரம் வ்ருஷாசலபதிஃ ஸ்ரீசைலபூர்ணம் குரும்
நித்யம் லாலயதி ச்ரிதப்ரணயதஸ் தேநார்ப்பிதம் ஜீவநம் ॥

ஸ்ரீசைலபூர்ணவிஷயஸ்துதிமஷ்டகாக்யாம்
தத்திவ்யவம்சஜ - ஸுதர்சநதேசிகேந ।

பக்த்யா ச யஸ்து படதி ஸுமநஸ்ஸுபோக்யாம்
ஸ்ரீசைலநாத பதபங்கஜ பக்தி மீயாத் ॥

ஜாதம் நபஸ்யே வரமித்ரதாரே ஸ்ரீசைலபூர்ணார்ய மதிச்ரயேऽஹம் ।
ராமாநுஜார்யாய மஹாத்மநே ஸ்ரீ ராமாயணார்த்தாஃ கதிதாசச யேந ॥

[ श्रीमान् पापविनाशनाह्वयसरस्तीर्थेन पूर्णं घटं
धृत्वा मूर्धनि वेङ्कटाचलपतेराराधनार्थं महान् ।

योगीन्द्रस्य च मातुलः कलिरिपोः सूक्तिं वदन्नादिमां
दत्ते भक्तिपरिप्लुतः प्रतिदिनं श्रोशैलपूर्णो गुरुः ॥

इत्थं वेङ्कटभूधरे गुरुवरः श्रीशैलपूर्णो हरेः
कैङ्कर्यं सुमनोहरं प्रतिदिनं कुर्वन्नलं भक्तितः ।

वेषं शाबरमुद्वहन् श्रितजनव्यामोहतश्चैकदा
मध्ये सत्पथमार्यवर्यपुरतः श्रीनायकोऽदृश्यत ॥

तापार्ताय दिशाऽद्य मह्यमुदकं तातेति वाक्यं हरेः
श्रुत्वा चापशरान् ततो धृतवतः शेषाचलाधीशितुः ।

सामोदं शबराकृतेर्गुरुवरः श्रीशैलपूर्णो महान्
माया श्रीशकृतेति भक्तिभरतो विज्ञाय नो तन् ददौ ॥

प्रावण्यात् गुरुसार्वभौमविषयात्तीर्थं तदीयं ततः
पातुं बद्धमनाः पुनश्शरवरात् कृत्वा सरन्ध्रं घटम् ।

तस्मान्निर्गतमम्बु तत् करयुगात् पीत्वा यथावाञ्छितं
श्रीमान् शेषगिरीश्वरो हरिरपि प्राप्तश्च तृप्तिं पराम् ॥

ज्ञात्वा तं घटमम्भसा विरहितं किं कार्यमस्तीति मे
खिन्ने पूर्णगुरौ च प्राप्य सलिलं व्याधात्मकः श्रीधरः ।

लीला स्वस्य तदा गुरौ प्रकटयन् तं पाणिपद्मात्स्वकात्
नीत्वा कुत्र चिदुन्नते गिरितटे शृङ्गं बिभेदेषुणा ॥

तस्माद्बाणनिखातजान्मम मतात् अम्भःप्रवाहात्ततः
नीत्वा तीर्थवरात्पयः प्रतिदिनं चाकाशगङ्गाह्वयात् ।

मह्यं तात महानुभाव वितरेत्युक्त्वा निषादाकृतिः
साक्षात्कृत्य निजं वपु र्हरिरपि श्रीमानदृश्योऽभवत् ॥

पश्चादार्यवरः प्रहृष्टहृदयः तीर्थात्ततः पावनात्
पूर्णं कुम्भममुं वृषाचलपतेः प्रीत्यै हरेराहरन् ।

आगत्याच्युतधाम तन्निकटतः स्थाप्याथ तं भक्तितः
पश्यन् वेङ्कटनाथरम्यवदनं बद्धाञ्जलिस्तस्थिवान् ॥

तात! स्वादु पयस्त्वदीयमभवं पीत्वाऽथ तृप्तो भृशं
मध्येमार्गमहं प्रसन्नहृदयस्तापश्च मे शान्तितः ।

इत्याभाष्य परं वृषाचलपतिः श्रीशैलपूर्णं गुरुं
नित्यं लालयति श्रितप्रणयतस्तेनार्पितं जीवनम् ॥

श्रीशैलपूर्णविषयस्तुतिमष्टकाख्यां
तद्दिव्यवंशज—सुदर्शनदेशिकेन ।
भक्त्या च यस्तु पठति सुमनस्सुभोग्याम्
श्रीशैलनाथपदपङ्कजभक्तिमीयात् ॥

जातं नभस्ये वरमित्रतारे श्रीशैलपूर्णार्यमधिश्रयेऽहम् ।
रामानुजार्याय महात्मने श्रीरामायणार्थाः कथिताश्च येन ॥

ஆதியிலே சேஷாவதாரமான எம்பெருமானாரும் திருமலையேறித் திருவேங்கடமுடையானுக்கு விமான, மண்டப, கோபுரங்கள் முதலான கைங்கர்யங்களையும் கட்டளை பண்ணிப் பின்பு, ஸ்ரீ சித்ரகூடத்தினின்றும் ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாளையும் ஸ்ரீ புரியிலேறியருளப் பண்ணி, ஸ்ரீபூமிப் பிராட்டியாரையும் வலப்ரதேசமாக ஏறியருளப் பண்ணிப் பின்பு, திருமலையேறித் தமக்குச் சிஷ்யரான அனந்தாழ்வான் கையிலே தம்முடைய திருமேனியை அர்ச்சாவதாரமாக ஏறியருளப் பண்ணி, அத் திருமேனியைத் தாமும் ஆலிங்கனம் செய்தருளிப் பின்பு, தம்முடைய முத்ரைக் கதிகாரியான சிறிய திருவடி முன்பாகத் தமக்கு மடம் நியமித்தருளி, அதற்குப்பின்பு, தாமும் தம்முடைய ஆராதனமான சக்ரவர்த்தி திருமகனாரையும் திருமலை நம்பி புருஷகாரமாக மடத்திலே ஏறியருளப்பண்ணுவித்து, பின்பு, திருவேங்கடமுடையா னுடைய ஸகலவித கைங்கர்யங்களும், நித்யஸ்ரீ யான செல்வமும் என்றும் குறைவாது நடக்கும்படியாகவும், மடத்தில் சக்ரவர்த்தித் திருமகனாருக்குப் பூர்ணோபசாரம் நடக்கும்படியாகவும், திருமலைநம்பியும் தாமுமாக யோசித்தருளி, தம்முடைய அவதாரம் விசாரித்தருளின வளவிலே சகாப்தம் 939 சென்ற வர்த்தமான ஸித்தார்த்தி வருஷம் சித்திரை மாஸத்தில் ஞாயிற்றுக்கிழமை திருவாதிரையில் அவதரித்த திவ்ய தேசங்களெங்கும் ஸகலவித கைங்கர்யங்களும் கட்டளை பண்ணி, பின்பு தமக்குத் திருநக்ஷத்திரம் நாற்பதென் றறிந்து, திருமலையில் மடத்தில் ஸ்வாமியினுடைய செல்வ மொன்றும் குறைவராத படியாகத் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்தில் தமக்குப் [1] ப்ரத்யாம்நாயமாகச் சகாப்தம் 979 விகாரி வருஷம் தைமீ வெள்ளிக்கிழமை

1. பிரதிநிதியாக.

சுக்ல பக்ஷத்தில் அப்பன் சடகோப ஜீயரை(யும்) ஏறியருளப் பண்ணி, அனந்தாழ்வானால் ஸ்ரீ வைஷ்ணவர் நால்வர்க்கு ஏகாங்கி சாடியும் கொடுப்பித்து, திருவேங்கடமுடையானையும் தமக்குப் ப்ரத்யாம்நாயரான ஜீயர் கையிலே ஒப்புவித்து, திருமகளுரையும், திருவடி முத்ரை, அநந்த கொத்துப்பரி ஜனத்தையும் அவர் கையிலே ஸாதித்தருளிப் பின்பு, எம்பெருமானார் சடகோப ஜீயரை அழைத்து, திருவேங்கடமுடையானுடையச் செல்வமும், மடத்தில் திருமகளுருடையச் செல்வமும் குறைவாதபடிக்கு நடப்பிவியும் என்று நியமித்தருளின பின்பு, போய் ஸந்நிதியிலே சென்று ஸேவித்தருளி நிற்க, ஸ்வாமியும் மிகவும் ஸந்துஷ்டராய் அர்ச்சகமுகேந தீர்த்தம், பரிவட்டம், திருமாலை ஸாதித்தருள, திருமலைநம்பி புருஷகாரமாகத் தெற்கு வீடான கோயிலுக்கு விடை ஸாதித்தருளப் பின்பு, எம்பெருமானாரும் கண்ணும் கண்ணீருமாய் நம் கைங்கர்யத்துக்கு நம் சடகோபன் (ஜீயர்) விடை கொண்டிருக்கிறுனென்று விண்ணப்பஞ் செய்தருளித் திருமலை யிறங்கத் திருமலைநம்பியும் கோவிந்த பட்டரையும் அழைத்துக் கொண்டு இறங்கியருளி எம்பெருமானார் கையிலே தாரை செய்தருளித் திருமலை ஏறப் பின்பு, எம்பெருமானாரும் கோவிந்தபட்டரை அழைத்துக் கொண்டு கோயிலேற எழுந்தருளினர்.

பின்பு சடகோப ஜீயரும் நாற்பத்தைந்து திருநக்ஷத்ரம் கைங்கர்யம் செய்தருளி ஜயவருஷம் தமக்கு ஆசார்ய கைங்கர்யம் அதிசய மாச்சுது ஆனபடியினலே, தமக்கு ப்ரதிநிதியாகக் கோயிலை விசாரித்தருளும்படிக்குத் தமக்கு இளவரசாக அழகிய மணவாள ஜீயரையும் நியமித்து ஸிம்ஹாஸனத்தையும் சாதித்தருளித் திருமகளுரையும் காட்டி, பாஷ்யகாரர் முத்ரையும் கொடுத்த பின்பு, தமக்கிளவரசான அழகிய மணவாள ஜீயரும் தாமுமாய் இருவரும் அந்யோந்ய(மாக)ம் ஸ்வாமி ஸந்நிதியிலே கைங்கர்யம் பண்ணிக்கொண்டிருக்கிற ஸமயத்திலே,

கங்கைகொண்ட சோழபுரத்துக்குப் ப்ரபுவாய், தேசாதிபதியான கோனேரி ராஜாவும் அவன் ப்ராதாவான ஸதாசிவ மஹாராஜாவும் ஸகுடும்பமாகத் திருமலையேறித் திருவேங்கடமுடையானையும் ஸேவித்து, எம்பெருமானருடைய கட்டளை ப்ரபாவத்தைக் கண்டும், கேட்டும், அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமானார் திவ்யமங்கள விக்ரஹத்தையும் ஸேவித்து, மிகவும் ஆநந்தபரிதராய்,

எம்பெருமானுர் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்தரு ளினவரான சடகோப ஜீயரையும், அவருடைய இளவரசான அழகிய மணவாள ஜீயரையும் ஸேவித்து, கோயிலிலே எம்பெருமா னுர் கட்டளைப்படிக்கு இருவரும் அந்யோந்யமாக இருந்து செய்யும் கைங்கர்ய ப்ரகாரத்தையுங் கண்டு, திருவடிகளில் அத்யந்தம் ப்ரவணர்களாய் ஜீயர் ஸந்நிதியில் மடமேறி இருவரும் வந்து, மடத் துக்குக் குலதனமான சக்ரவர்த்தி திருமகனுரையும், அழகிய மண வாள ஜீயருக்குச் சாதித்தருளின திருவேங்கடமுடையானையும் ஸேவித்து, ஜீயர்களிடத்திலே ப்ரவணர்களாய் மிகவும் ஆதாரத் துடன் [1]கத்கத புளகாங்கித தேஹர்களாய், ராஜாக்களான இருவரும் ஸகுடும்பமாக ஸமாச்ரயணம் ஸாதித்தருள வேணுமென்று ப்ரார்த் திக்க, அப்போது சடகோப ராமாநுஜ ஜீயரும் தமக்கிளவரசான அழகிய மணவாள ஜீயரைப் பார்த்து, ராஜாக்கள் இருவருக்கும் ஸகுடும்பமாக ஸமாச்ரயணம் சாதித்தருளுமென்று நியமிக்க, அழகிய மணவாள ஜீயரும் ஆசார்ய நியமனத்தாலே மங்கள திவஸத்திலே சகாப்தம்...........வருஷம் சுக்லபக்ஷ த்வாதசி ச்ரவ ணத்திலே ஸ்ரீ சக்ரவர்த்தி திருமகனுர் ஸாதித்த பாவனையுடன் ராஜா வுக்கு ஸபரிவாரத்துடன் திருவிலச்சினை(யும்) சாதித்தருள, அக் காலத்திலே ராஜாவும் திருமகனுருக்கு அநேகமாகக் கனகாபிஷேகம் பண்ணி, திருவாபரணங்களும் ஸமர்ப்பித்து, திருமகனுருக்கு வீர வனம் என்கிற கிராமத்தையும், ஸ்ரீ அழகிய மணவாள ஜீயருக்கு ஆசார்யாபிமானத்துடன், கௌதமலிங்கேச்வரம் ஸமீபத்திலே தனக்கு ப்ராதாவான ஸதாசிவ மகாராஜன் [2] கையிலேயிருந்த அரசு வேலம் என்கிற [3] கண்டிகையையும், பின்பு மடத்திலே திருமகனு ருக்கும், திருவேங்கடமுடையானுக்கும் அகண்டார்த்தமாக ஒரு கால்வாயும், திருப்பதியில் தம்முடைய ஆராதனத்துக்கு ஒரு தோட் டமும் ஸமர்ப்பித்துப் பின்பு, இராஜக்கள் இருவரும் கோபுரத் திரு மதிள் கைங்கர்யங்களும் செய்து வாஹனங்களும் பண்ணிவைத்து, உத்ஸவங்களையும் கூடவிருந்து நடத்துவித்துச் சோழ தேசத்திலே ராமாநுஜபுரம் என்கிற கிராமத்தையும் சமர்ப்பித்து மடத்திற்கு வேண்டிய ஸாமக்ரிகளையும் ஸேகரித்து வைத்துச் சில காலம் ப்ரபுத்வம் பண்ணிப் போக,

---

1. தழுதழுத்த குரலுடன் மயிர் சிலிர்க்கும்.
2. வசத்திலிருந்த.
3. நிலப் பிரிவையும்.

பின்பு, ஜீயரும் சிஷ்யருமாக அரண்யத்தைச் சேதித்துக் கிராமமாக்கி ஜீயர்பாளயம் என்று திருநாமம் சாத்திப் பின்பு, ப்ரதம லிங்கேச்வரம் ஸமீபத்தில் அழகிய மணவாள ஜீயருக்காக ஸமர்ப்பித்த அரசுவேல மென்னும் கிராமத்தையும் கடாக்ஷித்து அத்தைக் கட்டி அழகியபாளயம் என்று திருநாமம் சாத்தித் திருமலை ஏறித் திருவேங்கடமுடையானுக்குச் சிலகாலம் கைங்கர்யங்களையும் செய்து தமக்கு அந்திமதசை வந்தபடியிலே அழகிய மணவாள ஜீயரைத் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்துத் தாமும் ஜய ஸம்வத்ஸரம் சித்திரை மாஸம் தீர்த்தம் ஸாதித்தருளினர். (திருநாட்டுக் கெழுந்தருளினர்).

பின்பு, அழகிய மணவாள ஜீயரும், ஜய வருஷம் கார்த்திகை மாஸத்தில் இளவரசு ஸிம்ஹாஸனத்தில் திருவேங்கட ராமாநுஜ ஜீயரை நியமித்தருளி, எம்பெருமானர் திருவாராதனமான சக்ரவர்த்தி திருமகனுரையும் காட்டிக் கொடுத்து, ராமாநுஜ முத்திரையையும் ஸாதித்தருளித் திருவேங்கடமுடையான் கைங்கர்யங்களைச் செய்யும் படிக்கு நாலு ஏகாங்கிகளுக்குக் காவியும் கொடுப்பித்து, தாம் கோவிலுக்கு எழுந்தருளி யாளி வாஹனத்தையும் செய்தருளி, ஸ்ரீ கோஷ்டியை நிர்வஹித்துப் பின்பு, திருமாலை(க்கு) எழுந்தருளி வேங்கடத்தரியையும் பரிகிரியையும் ஸேவித்துத் திருவேங்கடமுடையான் ஸந்நிதியிலே கைங்கர்யங்களையும் செய்தருளிப் பின்பு, தீர்த்தம் ப்ரஸாதிக்கிற ஸமயத்திலே, தம்முடைய இளவரசான திருவேங்கட ராமாநுஜ ஜீயரைச் சகாப்தம் 1066-ம் சித்திரை மாஸம் ச்ரவண நக்ஷத்திரத்திலே தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்துத் தீர்த்தம் ப்ரஸாதித்தருளினர்.

பின்பு, திருவேங்கட ராமாநுஜ ஜீயரும் தமக்கு அந்திமதசை வந்தபடியினலே, தமக் கிளவரசான எம்பெருமானர் ஜீயரையும் சகாப்தம் (...............) வருஷத்திலே புரட்டாசி மாஸத்திலே நியமித்து ஹநுமந் முத்திரையும் கொடுத்துத் தாமும் திருவேங்கடமுடையானுக்குக் கைங்கர்யம் செய்தருளி 1106 ம் வருஷம் வைகாசி மாஸத்திலே சுக்லபக்ஷ தசமியில் தீர்த்தம் ப்ரஸாதித்தருளினர்.

பின்பு, எம்பெருமானர் ஜீயரும், தமக்கிளவரசாக அப்பன் சடகோப ஜீயரை நியமித்தருளி,ராமாநுஜ முத்ரையையும் ஸாதித்தருளித் திருமகனுரையும் காட்டித் தாமும் திவ்யதேசயாத்ரை செய்

தருளி ஸ்ரீ பெரும்பூதூரிலே எம்பெருமானார்க்குத் திருப்பல்லக்கும் தோளுக்கினியானும் ஸ்வர்ணமண்டபமும் செய்தருளிப் பின்பு, திருவேங்கடமுடையானுக்கு 50-வருஷம் கைங்கர்யம் செய்தருளி, சகாப்தம் 1156 - ம் வருஷம் தமக்கு அந்திம தசை வந்தபடியாலே தமக்கிளவரசான அப்பன் சடகோப ஜீயரையும் தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே நியமித்து, ஜய வருஷம் கார்த்திகை மாதம் த்விதியையில் தீர்த்தம் ப்ரஸாதித்தருளினார்.

பின்பு, அப்பன் சடகோப ஜீயரும் தம்முடைய இளவரசாகக் கார்த்திகை மாஸம் பூரட்டாதியில் பராங்குச ஜீயரை நியமித்தருளி எழுந்தருளியிருந்து வாழ்வித்தருளினார்.

திருவேங்கடமுடையான் பத்மாவதித்தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# அநுபந்தம் I.

திருமலை ஒழுகு பக்கம் 60.

"(ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை அருளிய) கலியன் அருள்பாடு ரஹஸ்யத்தில் கண்டு கொள்வது" என்னும் இடம் :—

இப்படிச் சில காலம் சென்ற பின்பு, கலிதோஷத்தாலே ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்திகளான திவ்ய ப்ரபந்தங்கள் லுப்தமாய், பஹு காலம் அத்யயநாத்யாபநங்க ளின்றிக்கே, ஆழ்வாரும் அத்யயநோத்ஸவத்துக்குக் கோயிலேற வெழுந்தருளாமலிருக்க; இப்படிச் சில காலம் சென்றவாறே, ஸ்ரீமந் நாதமுனிகள் ; ஸ்ரீ வேதவ்யாஸ பகவான், லோகத்திலே திரோஹிதங்களான வேதங்களை உத்தரித்தாப்போலே, ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை உத்தரிப்பதாகத் திருவுள்ளமாய், திருநகரிலேற வெழுந்தருளி மதுரகவி ஸம்ப்ரதாயஸ்தரான ஸ்ரீபராங்குசநம்பி ஸந்நிதியிலே "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்கிற ஆழ்வார் விஷயமான திவ்ய ப்ரபந்தத்தை லபித்து, பெரிய பெருமாள் திருமங்கை மன்னனுக்காகத் திருவாய்மொழிக்குப் பண்ணின அநுக்ரஹாதிசயத்தைக் கேட்டருளி மிகவும் திருவுள்ளமுகந்து, யோகதசையிலே ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்து, தந்முகமாக, ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களையும் லபித்துக் க்ருதார்த்தராய், ஸ்வசிஷ்ய ப்ரசிஷ்ய முகத்தாலே அநேக ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அத்யயநாத்யாபநங்களைப் பண்ணிவைத்து, முன்பு போலே அத்யயநோத்ஸவத்திலே ஆழ்வார் கோயிலேற வெழுந்தருளும்படிக்கும் வேத பாராயணத்தோடு கூடத் திருவாய்மொழி அநுஸந்தாநம் நடக்கும்படி பண்ணி, பெரிய பெருமாள் திருவாய்மொழிக்கு வேத ஸாம்யத்தை அநுக்ரஹிக்கை யாலே, வேதங்களுக்கு உபக்ரமோத்ஸர்ஜந காலநியம முண்டானாப் போலே, 'த்ராமிடம் ப்ரஹ்ம ஸம்ஹிதாம்' என்று ஓதப்பட்ட த்ராவிட வேதமான திருவாய்மொழிக்கும் திருக்கார்த்திகை திவ்ய மஹோத்ஸவத்திலே உத்ஸர்ஜந காலமென்றும், மார்கழி மாஸத்தில் அத்யயநோத்ஸவத்திலே உபக்ரம காலமென்றும், த்ராவிட வேதமான திருவாய் மொழியைத் திருக்

கார்த்திகை திவ்ய மஹோத்ஸவத்திலே உத்ஸர்ஜநம் பண்ணி, உப க்ரம காலமான அத்யயநோத்ஸவத்திலே பெரிய பெருமாள் கேட் டருளு மளவும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் நெஞ்சினால் நினைந்து வாயினால் மொழியாம லிருக்கும்படிக்கும், பெரிய பெருமாள் ஆழ்வாருக்குப் ப்ரதிவருஷம் திருமுகப் பட்டையம் ப்ரஸாதிக்கும்படிக்கும், அன்று திருக்கார்த்திகை திவ்ய மஹோத்ஸவத்திலே பெரிய பெருமாள் தாம் சாத்திக்கொண்ட எண்ணெய்க்காப்புச் சேஷத்தைத் திரு மங்கை மன்னன் திருமிடற்றிலே சாத்துவித்து அவர் தம்மைப் பாடின இளைப்பெல்லாம் தீரும்படி பண்ணின கட்டளையை, ப்ரதி ஸம்வத்ஸரம் திருக் கார்த்திகை திவ்ய மஹோத்ஸவத்திலே பெரிய பெருமாள் சாத்திக்களைந்த எண்ணெய்ச் சேஷத்தை ஆழ்வார்களுக் கெல்லாம் தலைவரான நம்மாழ்வார் திருமிடற்றிலே சாத்தி, அந்தச் சேஷத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்கள் தங்கள் திருமிடற்றிலே சாத் தும் படிக்கும், ரிகாதிபேதேந சதுர்விதமான வேதங்களுக்கு சிக்ஷாதிகளும் இதிஹாஸ புராணங்களும் அங்கோபாங்கங்களா யிருக்குமாப் போலே, ஆழ்வாரருளிச் செய்த நாலு ப்ரபந்தங்களும் நாலுவேத ஸ்தானே யாகவும், திருமங்கை மன்னன் அருளிச்செய்த ஆறு ப்ரபந்தங்களும், மற்றை யாழ்வார்களும் ஆண்டாளும் அருளிச் செய்த ப்ரபந்தங்களும் அங்கோபாங்கங்களாகவும்; திருவாய்மொழி தானும் த்வயார்த்த விவரண மென்றும், திருப்பல்லாண்டு முதல் பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, திருச்சந்த விருத்தம், திருமாலை, திருப்பள்ளி யெழுச்சி, அமலனாதிபிரான், ஆக இப் பிரபந்தங்கள் ப்ராயேண ப்ரணவார்த்த ப்ரகாசக மாகையாலே முதலாயிர மென்றும், கண்ணி நுண் சிறுத்தாம்பு, நமஸ் சப்தார்த்த விவரண மென்றும்; திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந் தாண்டகம், முதலாழ்வாரருளிச் செய்த திருவந்தாதி மூன்றும், நான்முகன் திருவந்தாதி, திருவிருத் தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், மந்த்ரசேஷ விவரணமென்றும், இதில், திருவந்தாதி மூன்று முதலாகப் பெரியதிருமடலீறாக, சப்தரஸ ப்ரதாநமா யிருக்கையாலே, இயல்பா என்றும், இப்படி இருபத்து மூன்று ப்ரபந்தங்களும் திருமந்த்ரார்த்த விவரண மென்றும்; இப்பிர பந்தங்களிலே ஆழ்வார்க ளநுபவத்துக்கு விஷயமாய் எம்பெரு மான் விரும்பி வர்த்திக்கிற ஸ்தலங்கள் பரமபதம், திருப்பாற்கடல்

தொடக்கமாக நூற்றெட்டென்றும்; திருவாய்மொழி யொழிந்த ப்ரபந்தங்கள், திருப்பல்லாண்டு முதலாக திருநெடுந் தாண்டக மளவாக, அத்யயநோத்ஸவத்துக்கு முன்பும் பத்து நாளாகப் பெரிய பெருமாள் கேட்டருளும்படிக்கும், திருவந்தாதி முதலாகப் பெரிய திருமடல் ஈறாக, அத்யயநோத்ஸ வாநந்தரம் மற்றைநாள் கேட்டரு ளும்படிக்கும்; ஆழ்வார்கள் பதின்மர், ஆண்டாள் ஸ்ரீமந் மதுர கவிகள் ஆகப் பன்னிரண்டு திருநாமங்களும் அருளிச் செய்த இரு பத்து மூன்று ப்ரபந்தங்களில் பாட்டு நாலாயிர மென்றும்; ப்ராம் ஹணனுக்கு, வேத வேதாந்தங்கள் இதிஹாஸ புராணங்கள் அதி கரிக்க வேண்டுமாப் போலே, ப்ரபந்நரான வைஷ்ணவர்களுக்கு திவ்ய ப்ரபந்தங்கள் அதிகரிக்க வேணு மென்றும்; இதில், திருப் பாவை, திருப்பள்ளி யெழுச்சி எம்பெருமானைத் திருப்பள்ளி யுணர்த் துவ தாகையாலே ப்ராத: காலத்திலே நித்யம் அநுஸந்தேய மென் றும்; எப்போதும் ப்ரபந் தாநுஸந்தானத்துக்கு முன்பு மங்களா சாஸந பரமான திருப்பல்லாண்டு அநுஸந்தேய மென்றும்; திரு வாய் மொழி அநுஸந்தாநத்துக்கு பூர்வோத்தரங்களிலே, ஆழ்வார் விஷயமான கண்ணிநுண் சிறுத்தாம்பு அநுஸந்தேய மென்றும்; இப்படி ஸ்ரீ வைஷ்ணவ தர்சநத்திலே அநேக ஸ்ரீ வைஷ்ணவ தர்மங் களை நியமித்த நியமநம்.

"உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, பெரிய முதலியார், பெரிய நம்பி காலங்களிலும் செல்லா நிற்க, பின்பு, எம்பெரு மானார் காலத்திலும் நடந்து செல்லா நிற்க, ஒரு அத்யயநோத் ஸவத்துக்கு ஆழ்வார் சில அநுபபத்திக ளுண்டாகையாலே கோயி லேற வெழுந்தருளாமையாலே, எம்பெருமானார் தாமே கோயிலிலே ஒரு நம்மாழ்வாரைத் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணி அத்ய யநோத்ஸவத்தை நடப்பித்து, திருமங்கை மன்ன னொழிந்த மற்றை யாழ்வார்களையும் திருப்ரதிஷ்டை கொண்டருளப் பண்ணுவித்து, திவ்ய தேசங்களிலும் ஆழ்வாரும் ஆண்டாளும் திருப்ரதிஷ்டை கொண்டருளும்படிக்கு நியமித்து, ஆழ்வார்கள், "சென்றுவணங்கு மினோ சேணுயர் வேங்கடத்தை, திருவேங்கடம் மொய்த்த சோலை மொய் பூந்தடம் தாழ்வரே, எய்த்தி ளைப்பதன் முன்ன மடைமினோ" என்றும், 'திருவேங்கட மாமலை யொன்றுமே தொழ நம் வினை யோயுமே, திருவேங்கடம் நங்கட்குச் சமன்கொள் வீடுதரும் தடங் குன்றமே' என்றும், 'வெற்பென்று வேங்கடம் பாடும்' என்றும்,

'தண்ணருவி வேங்கடம்' என்றும், 'வானோர்க்கும் மண்ணோர்க்கும் வெற்பு' என்றும், 'வேங்கடமே விண்ணோர் தொழுவதும், வேங் கடத்துச்சி' என்றும், இப்படிப் பலவிடங்களிலும், திருமலை யாழ்வா ரோடு அதில் நித்ய வாஸம் பண்ணும் எம்பெருமானோடு ஒரு விசேஷ மின்றிக்கே தங்களுக்குப் பரம ப்ராப்ய மென்று ப்ரதிபத்தி பண்ணி யும், "ப்ராக்ருத சரீரங்களோடு திருமலையை;ஸ்பர்சியோம்" என்ற திருவுள்ளக் கருத்தை யறிந்து திருமலையிலே ஆழ்வார்களைத் திருப்ர திஷ்டை கொண்டருளப் பண்ணுவியாமல் திருமலை யடிவாரத் திலே அடிப்புளி யாழ்வா ரருகே திருமலை யாழ்வாருக்கும் திரு வேங்கட முடையானுக்கும் மங்களாசாஸந பரராய்த் திருமலை யாழ் வாரோடு ஒரு திருமேனிகளா யெழுந்தருளி யிருக்கும்படி நியமித் தும், அவர்களுக்கும் திருப்ரதிஷ்டை செய்தருளப் பண்ணுவித் தும், அவர்களுக்கு நித்ய திருவாராதநம் கொண்டருளும் படிக்கும், கோயில் போலே மற்றும் திருப்பதிகள் தோறும் அத்யயநோத்ஸ வத்திலே திருவாய் மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்க ளெல்லாம் தத்தத் காலங்களிலே அநுஸந்திக்கும்படிக்கும், கோயில் முதலான திருப்பதிகளிலேயும் நித்யம் ஸாயங் காலத்திலே திருமாலை சாத்தி யருளி, திருவாலத்தி கொண்டருளுகிறதுக்கு உசிதமான திருப் பல்லாண்டு, பூச்சூடு, காப்பீடும், பெரியாழ்வார் தாம் பரம பக்தி தலையெடுத் தருளிச்செய்ததால், உபக்ரம மங்களாசாஸந ப்ரபந்த ஸமமாக, சென்னி யோங்கு பத்துப் பாட்டும், திருப்பாணாழ்வார் பெரிய பெருமாள் திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்திலே ஈடு பட்டு அநுஸந்தித்த ஆநந்தத்திலே பேறு பெறுகையா லுண்டான ஏற்றமுடைய "அமலனாதிபிரான்" என்கிற ப்ரபந்தமும், "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" என்கிறபடியே எம்பெருமானுக்கு நற் சீவனாய் நமக்கெல்லாம் ப்ரதாநாசார்யரான நம்மாழ்வார் விஷயமான "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்கிற ப்ரபந்தமும், அந்தந்தத் திருப் பதிகள் விஷயமான திருமொழிகளும், ஸாயங் காலத்திலே நித்யம் அநுஸந்திக்கும் படிக்கும், திருப்பதிகள் தோறும் திருமுளைத் திரு நாளிலே பெருமாள் திரு வீதியிலே எழுந்தருளும் போது செந் தமிழ் பாடுமவரான முதலாழ்வார்கள் ஸ்ரீஸூக்தியான இயற்பா முதலாக மூவாயிரமும், எம்பெருமான் ஸ்ரீ புஷ்பயாகம் கொள் ளும் போது வேதத் தோடே கூடத் திருவாய் மொழியும் அநுஸந் தேய மென்றும்,............".

## அநுபந்தம் II.

இந்நூலின் 77 - ம் பக்கத்திலும், 108 - ம் பக்கத்திலும் கூறப் பட்ட பட்டோலை வரலாறு :—

ஸ்ரீரஸ்து

“ ஸ்ரீமத்ஸுராஸுராதீச மௌளிமாலோபஸேவிதம் ।
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீநிவாஸஸ்ய சாஸநம் ॥ ”

[ श्रीमत्सुरासुराधीशमौलिमालोपसेवितम् ।
श्रीमद्वेङ्कटनाथस्य श्रीनिवासस्य शासनम् ॥ ]

“ஸௌம்யநாம ஸம்வத்ஸரத்தில் கார்த்திகை மாஸத்தில் பௌர்ணமியி னன்று, ஸ்ரீய:பதியாய் அவாப்த ஸமஸ்தகாமனுய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனுய் ப்ரஹ்ம ருத்ராதி ஸகல தேவாராத்யனுய் ஸர்வாபீஷ்ட பல ப்ரதனுய் நித்ய முக்தாநுபாவ்யனுய் “ பொன்னை மாமணியை யணியார்ந்ததோர் மின்னை வேங்கடத்துச்சியில்,” “அகலகில்லே னிறையு மென்று அலர்மேல்மங்கை யுறை மார்பா” என்கிறபடியே பெரிய திருமலையிலே பெரிய பிராட்டியார் முதலான திவ்ய மஹிஷிகளோடு குன்றத்திட்ட விளக்காய் விளங்கா நின்றருளின திருவேங்கடமுடையான், தாமும் தம் மஹிஷிகளுமாகத் தம் மடியார்களான பராங்குச பரகால யதிவராதிகளுக்குத் திவ்யாஜ்ஞை யிட்டு அனுப்பித்தருளின திருமுகப் பட்டை :—

“ வ்யாஸாதயோ ப்ரஹ்மநிஷ்டா: அபி லோகாதிகாரிண: ”
தேப்யோऽதிகதமா: கேசித் ப்ரஹ்மநிஷ்டைகஜீவநா: ॥ ”

“ வித்யந்தே ஹி பராசராதிமுநிபி: ப்ரோக்தா: ப்ரபந்தா: பரா:
பக்தா ஏவ ஹி தே ததாऽபி பரமப்ராவண்யயுக்தாந் மயி ।
யுஷ்மாநேவ பராங்குசாதிவிதுஷ: யுஷ்மத்ப்ரபந்தாம் ச்ச தாந்
அத்யாத்ருத்ய ரமாமஹீபரிவ்ருத: ச்ரோஷ்யாமி திவ்யோத்ஸவே॥”

[ “ व्यासादयो ब्रह्मनिष्ठा अपि लोकाधिकारिणः ।
तेभ्योऽधिकतमा यूयं ब्रह्मनिष्ठैकजीवनाः ॥ ”

" विद्यन्ते हि पराशरादिमुनिभिः प्रोक्ताः प्रबन्धाः पराः
भक्ता एव हि ते तथाऽपि परमप्रावण्ययुक्तान् मयि ।
युष्मानेव पराङ्कुशादिविदुषः, युष्मत्प्रबन्धांश्च तान्
अत्यादृत्य रमामहीपरिवृतः श्रोष्यामि दिव्योत्सवे ॥ " ]

இந்நாள் வரைக்கும் நாமும் நம் மஹிஷிகளுமாக வ்யாஸ பராசராதிகளிற் காட்டில் பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளை யுடையரான தாந்தாம் பாடின திவ்ய ப்ரபந்தங்களைச் செவிக்கினியதாகக் கேட்டருளி மிகவும் ஹ்ருஷ்டராநோம். மீளவும்,

" தநுர்மாஸே ஸிதே பக்ஷே ஸம்ப்ராப்தே ஹரிவாஸரே ।
மம பூஜாவஸாநே வை வேதாரம்பம் ஸமாசரேத் ॥ "

" யதா ப்ரபுঃ ஸ்வப்ரணீதப்ரபந்தாத் ஸ்வாத்மஜோக்திதঃ ।
ப்ரீதிமாப்நோதி நிதராம் ததா பக்தோக்திதோ ஹ்யஹம் ॥ "

[ " धनुर्मासे सिते पक्षे सम्प्राप्ते हरिवासरे ।
मम पूजावसाने वै वेदारम्भं समाचरेत् ॥ "

" यथा प्रभुः स्वप्रणीतप्रबन्धात् स्वात्मजोक्तितः ।
प्रीतिमाप्नोति नितरां तथा भक्तोक्तितो ह्यहम् ॥ " ]

மார்கழி மாஸத்தில் சுக்லபக்ஷத்தில் ஏகாதசியி னன்று நாமும் நம் மஹிஷிகளுமாக, திவ்யாலங்கார அலங்க்ருதமான திருமாமணி மண்டபத்திலே கோப்புடைய சீரிய சிங்காஸனத்தில் ஏழுலகும் தனிக் கோல் செல்ல வீற்றிருந்து, நம்முடைய முகோத்கதங்களான வேதங்களைக்காட்டிலும், திருவாய்மொழி, நமக்குச் சேஷபூதர்களான நீங்கள் அருளிச்செய்ததாய், சுத்த ஸத்த்வமயமாய், நமக்கு ஹர்ஷப்ரகர்ஷ ஜநகங்களான பாசுரங்களுடையதாய், ஸஹஸ்ரசாகோபநிஷத் ஸமாகமமாய்ச் செந்தமிழ் வேதமாகையாலே அத்தைக் கேட்டருளத் திருவுள்ளமாநோம்.

" இதிஹாஸபுராணாநாம் பூர்வம் பாராயணம் சரேத் ।
ததச்ச பக்திவிஷய ப்ரபந்தாத்யயநம் சரேத் ॥ "

[ " इतिहासपुराणानां पूर्वं पारायणं चरेत् ।
ततश्च भक्तिविषयप्रबन्धाध्ययनं चरेत् ॥ " ]

ததங்க பூதங்களாய்ப் பரம ஸாத்த்விகங்களாய் நம்மடியார்களான தாந்தாம் பாடின திவ்ய ப்ரபந்தங்களை அதற்குப் பத்துநாள் முன் பாகத் தொடங்கி விண்ணப்பம் செய்யக் கேட்டருளத் திருவுள்ள மானோம். அந்நாள் வரைக்கும் நீங்களும், உங்களடியார்களுமாக அந்த ப்ரபந்தங்களை நெஞ்ஜினால் நினைக்கவும், வாயினால் மொழியவும் கடவீர்க ளல்லர்.

"ஸ்ரீமான் ஸௌம்யவரோமுநிர் விஜயதே ஸ்ரீரங்கபுர்யாம் மஹாந்"

[ " श्रीमान् सौम्यवरो मुनिर्विजयते श्रीरङ्गपुर्यां महान् । " ]

நம் தென் கோயில்வாழும் மன்னு புகழ்சேர் மணவாள மாமுனி அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை, உங்களுடைய வைபவங்க ளுடையன வாகையாலே, அவற்றை அந்நாள் வரைக்கும் முப்போ தும் கேட்டருளத் திருவுள்ள மானோம்.

இப்போது நாம் உடுத்துக்களைந்த நன் பீதகவாடையும், தரித் துக் களைந்த திருத்துழாய் மாலையும், சாத்துப்படியும், எண்ணெய்க் காப்பும் அனுப்பிவைத்தோம். இத்தைத் தம்மிடறுகளிலே தரித்துக் கொண்டு ஆச்வஸ்தராய் பெரிய மிடற்றோடே அத்திருவத்யயனோத் ஸவத்திலே திவ்ய ப்ரபந்தங்களைச் செவிக்கினியதாகக் கேட்டருளும் படி, வந்து விண்ணப்பம் செய்யக்கடவீர்கள். இப்படித் திருவாணை யிட்டு அனுப்பிவைத்தருளின திருமுகப் பட்டை."

॥ शुभम् ॥

---

இதுவே இப்போது நடைமுறையில் இருந்து வருவதாகத் தெரிகிறது. இது 108 - ம் பக்கத்திற் காட்டப்பட்ட பட்டோலை, 77 - ம் பக்கத்துக்குப் பொருத்தமில்லை.



